ச—1. "भ्रातुः" (ப்4ராது:) l 2. "भस्मसात्कुरुतां शिखी" (ப4ஸ்மஸாத்குருதாம் ஶிகீ2) என்னும்படி தம் பின்பிறந்தவனல்லேனோ நான்? l2 "என் தம்பிமார்க்கு உதவாத என்னுடைமையை அக்3நிக்கு விருந்திட்டேன்" என்றாரிறே. m2. "यद्विना" (யத்3விநா) இத்யாதி3. 1. "शिष्यस्य" (ஶிஷ்யஸ்ய) ப்4ராதாவாகக் n கூறுகொண்டு முடிசூடி யிருக்குமவனோ நான்? o அஶேஷரஹஸ்யமும் தம்மோடேயன்றோ அதி4கரித்தது. 1. "दासस्य" (தா3ஸஸ்ய) p ஶிஷ்யனாய் க்ரயவிக்ரயார்ஹனன்றிக்கே இருந்தேனோ? ஆனபின்பு நான் அபேக்ஷித்த காரியத்தை மறுப்பரோ? q இதிறே கைங்கர்யத்தில் சாபலமுடையாரிருக்கும்படி. (வழுவிலாவடிமை) r ஓர் அடிமை குறையிலும் உண்டது உருக்காட்டாதாயிற்று இவர்க்கு. (செய்ய) s முன்புமுண்டிறே இக்கைங்கர்ய மநோரத2ம்; இப்போது இவ்வளவால் போராது, அநுஷ்டா2நபர்யந்தமாகவேணும்.

---

அ—ஸநம் ||" 3. "வ்யஸ்ருஜந் கபூ3ளாந் நாக3ா: க3ாவோ வத்ஸாந் ந பாயயந் | பக்ஷிணோ(அ)பி ப்ரயாசந்தே ஸர்வபூ4தாநுகம்பிநம் ||" இத்யாத்3யநுஸந்தே4யம். l (ப4ஸ்மஸாத்குருதாம் ஶிகீ2 என்னும்படி) 2. "யத்3விநா ப4ரதம் த்வாஞ்ச ஶத்ருக்4நஞ்சாபி லக்ஷ்மண | ப4வேந்மம ஸுக2ம் கிஞ்சித்3ப4ஸ்மஸாத்குருதாம் ஶிகீ2 ||" என்று பெருமாள் சொல்லும்படி என்கை. பூர்வம் "எனக்கன்றோ இவன் தம்பி" (148f2) இதி வாக்யே-லோகஸாமாந்யேநோக்தம்; அத்ர து-ராமாபி4ப்ராயேணோச்யதே. m ப4ஸ்மஸாதி3த்யாதி3 ஶ்லோகஸ்ய ஆதி3க்3ரஹணம் கரோதி (யத்3விநேத்யாதி3) n கூறுகொண்டு-பா4க3த்தை க்3ரஹித்து. o (அஶேஷரஹஸ்யமும் இதி) லக்ஷ்ம்யா: த்3வயோபதே3ஶவத் நித்யஸூரித்வேநாவஸ்தா2நத3ஶாயாமேவ ப4க3வதா மந்த்ரோபதே3ஶ: க்ருத இதி தத3வலம்ப்3யோச்யதே வா, அவதாரத3ஶாயாமபி ராமேண மந்த்ரோபதே3ஶ: க்ருத இதி தத3வலம்ப்3யோச்யதே வா. p (ஶிஷ்யனாய் இதி) ஶிஷ்யஸ்ய வித்3யாதி4க3மாநந்தரம் 4. "நிவேஶே ஹி வ்ருத்தே நையமிகா நி ஶ்ருயந்தே" இதி ந்யாயேந ஸ்வவர்ணாஸ்வாஶ்ரமோசித கர்மாநுஷ்டா2நார்த்த2ம் ஸ்வக்3ருஹம் ப்ரதி நிவ்ருத்திரஸ்தீதி பா4வ:. q (இதிறே இத்யாதி3) பெருமாள் திருவபி4ஷேகங்கொண்டருளி, தான் சாமரவ்யஜந ஹஸ்தனாய் அடிமைசெய்கைக்கிறே அவன் படுகிறான் என்று கருத்து. ஆக, "ஸ்ரீப4ரதாழ்வான்"(146z) இத்யாதி3யால்-ஸ்வாதந்த்ர்யம் அநர்த்த2மென்னுமத்தையும், பாரதந்த்ர்யமே ஸ்வரூபமென்னுமத்தையும், ரஸாபி4ஜ்ஞரான ஸ்ரீப4ரதாழ்வான் கைங்கர்யத்தை ப்ரார்த்தி2த்தாற்போலே இவரும் ப்ரார்த்தி2க்கக்கூடும் என்றதாயிற்று. r "அடிமையிலொன்றும் ஒருவருக்கும் கூறுகொடுக்கவொண்ணாது."(146w) என்றத்தை வ்யதிரேகமுக2த்தாலே த்3ருடீ4கரிக்கிறார் (ஓரடிமை இத்யாதி3) s (முன்புமுண்டிறே இதி)

---

ஜீ—தஸ்ய ந ப்ராவர்த்தந்த வர்த்மநி" 3. "வ்யஸ்ருஜந் கபூ3ளாந் நாக3ா:" இத்யநுஸந்தே4யம். 1 (ப4ஸ்மஸாத்குருதாம் ஶிகீ2 என்னும்படி) என்று பெருமாள் சொல்லும்படி இத்யர்த்த2:. பூர்வம், "எனக்கன்றோ இவன் தம்பியென்று"(148f2) இத்யாதி3வாக்யே-லோகஸாமாந்யேநோக்தம்; அத்ர து ராமாபி4ப்ராயேணோச்யதே. l2 ப4ஸ்மஸாதி3த்யாதி3 ஶ்லோகத்துக்கு பா4வம் (என் தம்பிமார்க்கு இத்யாதி3) m 1. "ப4ஸ்மஸாத்" இத்யாதி3 ஶ்லோகத்துக்குஅடி (யத்3விநேத்யாதி3) r கூறுகொடுக்க வொண்ணாதென்று கீழே (146w) சொன்னத்தை வ்யதிரேகமுகே2ந த்3ருடீ4கரிக்கிறார் (ஓரடிமை

---

12. तत्रैव सप्तनवतितमे भरतो वधार्ह इत्युक्तवन्तं लक्ष्मणं प्रति रामः—"भ्रातॄणां सङ्ग्रहार्थञ्च सुखार्थञ्चापि लक्ष्मण! । राज्यमप्यहमिच्छामि सत्येनायुधमालभे ॥ ६ ॥ नेयं मम मही सौम्य! दुर्लभा सागराम्बरा। नहीच्छेयमधर्मेण शक्रत्वमपि लक्ष्मण! ॥ ७ ॥ यद्विना भरतं त्वाञ्च शत्रुघ्नं चापि मानद! । भवेन्मम सुखं किञ्चित् भस्मसात्कुरुतां शिखी ॥ ८ ॥"

ஈ-(அடிமைசெய்யவேண்டும்) t கைங்கர்யமநோரத2மேபிடித்து உத்3தே3ஶ்யமாயிருக்கிறதாயிற்று இவர்க்கு. u "க்ஷுத்3ரவிஷயாநுப4வம் பண்ணவேணும்" என்று புக்கால், இரண்டுதலைக்கும் ஒக்க ரஸமான போ4க3த்துக்கு ஒருதலையிலே த்3ரவ்யத்தை நியமித்து, v போ4க3காலம் வருமளவும் லீலையாலே போதுபோக்கி, போ4க3காலம் வந்தவாறே புறப்படத் தள்ளிவிடுவர்கள்; w இனி "ஸ்வர்க்கா3நுப4வம் பண்ணவேணும்" என்று புக்கால், w2 1. "स्वर्गेऽपि पातभीतस्य क्षयिष्णोर्नास्ति निर्वृतिः" (ஸ்வர்க்கே3ऽபி பாதபீ4தஸ்ய க்ஷயிஷ்ணோர் நாஸ்தி நிர்வ்ருதி:) என்கிறபடியே; w3 அருகே சிலர் நரகாநு

அ.- A "தொழுதெழென்மனனே" B "பெருநிலங்கடந்த நல்லடிப் போதயர்ப்பிலனலற்றுவன் தழுவுவன் வணங்குவன்" C "தனக்கேயாக" இத்யாதி3ராவிதி ப4ாவ:. t அடிமைசெய்தும் இத்யநபி4த4ாய, "செய்யவேண்டும்" இத்யபி4த4ாநப2லிதமாஹ (கைங்கர்யமநோரத2மே பிடித்து இதி) u கைங்கர்யமநோரத2ப்ரப்4ருத்யுத்3தே3ஶ்யதாயாம் ஹேது: ப்ராப்யவைலக்ஷண்யமிதி வக்தும், தத்3வைலக்ஷண்யஸ்ய ச ப்ரதிகோடிப்ரத3ர்ஶநேந விநா அஸ்பு2ரணாத், ப்ரதிகோடிப்ரத3ர்ஶநபூர்வகம் ப்ராப்யவைலக்ஷண்யமேவ த3ர்ஶயதி (க்ஷுத்3ரவிஷயாநுப4வம் இத்யாதி3நா) யத்3வா ஐஶ்வர்யாதி3க்ஷு புருஷார்த்த2தயா அபி4தீ4யமாநேஷ்வபி தாந்யுபேக்ஷ்ய ஏதத் கிமர்த்த2மபேக்ஷ்த இத்யத்ர தேஷாம் தோ3ஷோபந்யாஸபூர்வகம் ப்ராப்யவைலக்ஷண்யம் த3ர்ஶயதி (க்ஷுத்3ர இத்யாதி3நா) 2. "போ4க3ா இமே விதி4ஶிவாதி3பத3ஞ்ச கிஞ்ச ஸ்வாத்மாநுபூ4திரிதி யா கில முக்திருக்தா । ஸர்வம் தது3ஷஜலஜோஷமஹம் ஜுஷேய ஹஸ்த்யத்3ரிநாத2 தவ தா3ஸ்ய மஹாரஸஜ்ஞ: ।।" இதி ஶ்லோகோऽத்ர விவக்ஷித:. v (போ4க3காலம் வந்தவாறே புறப்படத் தள்ளிவிடுவர்கள் இதி) 3. "குக்குடரவம் ப4ணந்தி" இதி ப3ாணோக்தந்யாயேந, கபடோபாயைர் நிர்க்க3மயந்தீதி ப4ாவ:. 4. "ஶம்பாசலம் ப4ஹுலது3:க்க2மநர்த்த2ஹேதுரல்பீய இத்யபி விம்ருஷ்டிஷு த்3ருஷ்டதோ3ஷம்" 5. "ஆயு: பரிஸ்ரவதி பி3ந்நகடாதி3வாம்பு4:" 6. "அஸந்தோஷஶ்ச ப4வதி த்3ருஷ்ட்வா தீ3ப்தாம் பரஶ்ரியம்" 7. "தூ3ரித3ூர: ப்ரார்த்த2யத்யர்த்த2ம்" இத்யாதி3கஞ்சாத்ர த்3ரஷ்டவ்யம். w (இனி ஸ்வர்க்க3ாநுப4வம் இதி) 1. "ஸ்வர்க்கே3ऽபி பாதபீ4தஸ்ய க்ஷயிஷ்ணோர் நாஸ்தி நிர்வ்ருதி:" என்கிறபடியேயும், அருகே சிலர் நரகாநுப4வம் பண்ணக் காண்கையாலேயும், இருந்து அநுப4விக்கிறபடிதான் உண்டதுருக்காட்டாதேயிருக்கும். யத்3வா, இனித்தான் - 1. "ஸ்வர்க்கே3ऽபி பாதபீ4தஸ்ய க்ஷயிஷ்ணோர் நாஸ்தி நிர்வ்ருத்தி:"

ஜீ.- இத்யாதி3) s (முன்புமுண்டிறே, என்றது - A "தொழுதெழென்மனனே" B "அயர்ப்பிலனலற்றுவன்" C "தனக்கேயாக" இத்யாதி3யைப்பற்ற. t அடிமைசெய்தும் என்னாதே, "அடிமைசெய்யவேண்டும்" என்றதுக்கு ப4ாவம் (கைங்கர்யமநோரத2மே பிடித்து இத்யாதி3) u மநோரத2மே பிடித்து உத்3தே3ஶ்யமாகைக்கு அடி ப்ராப்யவைலக்ஷண்யமென்று விவக்ஷித்து, தத்ப்ரதிகோடியான இதர புருஷார்த்த2த்தின் தோ3ஷப்ரத3ர்ஶந பூர்வகமாக ப்ராப்யவைலக்ஷண்யத்தை த3ர்ஶிப்பிக்கிறார் (க்ஷுத்3ர இத்யாதி3நா) w...w4 (இனி ஸ்வர்க்க3ாநுப4வம் பண்ணவேணுமென்று புக்கால்) என்ற அநந்தரம் (அருகே சிலர் நரகாநுப4வம்) இத்யாதி3யை அநுஸந்தி4த்து, (இனித்தான்) என்ற அநந்தரம் (1. "ஸ்வர்க்கே3ऽபி பாதபீ4தஸ்ய க்ஷயிஷ்ணோர் நாஸ்தி நிர்வ்ருதி:") என்கிறபடியே

ப்ர—w2 1. (செய்ய) वैष्णवे पुराणे षष्ठेंशे पञ्चमे मैत्रेयं प्रति पराशरः—"नरके यानि दुःखानि पापहेतूद्भवानि वै। प्राप्यन्ते नारकैर्विप्र! तेषां सङ्ख्या न विद्यते।। ९।। न केवलं द्विजश्रेष्ठ! नरके दुःखपद्धतिः। स्वर्गेऽपि पातभीतस्य क्षयिष्णोर्नास्ति निर्वृतिः।। १०।।"

A 1-1-1. B 1-3-10. C 2-9-4.

ஈ—ப$_4$வம் பண்ணக் காண்கையாலே, இருந்து அநுப$_4$விக்கிற இதுதானும் $w_3$உண்டது உருக்காட்டாதபடியாயிருக்கும்; $w_4$ இனித் தான் அவ்விருப்புக்கு அடியான புண்ய மானது சாலிலெடுத்த நீர்போலே க்ஷயித்தவாறே "த்$_4$வம்ஸ" என்று முகம் கீழ்ப் படத் தள்ளுவர்கள்; x இப்படி ஸ்வரூபத்துக்கு அநுரூபமாய் அஹங்கார மமகாரங்க ளடியாக வரும் இவ்வநுப$_4$வங்கள் போலன்றிக்கே, $x_2$ ஸ்வரூபத்தோடே சேர்ந்ததுமாய், அடிமைகொள்ளுகிறவனும் நித்யனாய், அடிமைசெய்கிறவனும் நித்யனாய், காலமும் நித்யமாய், தே$_3$ஶமும் நித்யமாய், ஒருகாலமும் மீளவேண்டாதபடி அபுநராவ்ருத்தி லக்ஷண மோக்ஷமாய், க்ஷுத்$_3$ரவிஷயாநுப$_4$வம்போலே து$_3$:க்க$_2$மிஶ்ரமாயிருக்கை யன்றிக்கே $x_3$ நிரதிஶய ஸுக$_2$மாயிருப்பதொன்றிறே இது. (நாம்) y தம் திருவுள் ளத்தையுங்கூட்டி நாம் என்கிறாராதல்; அன்றிக்கே, A கேசவன்தமர்க்குப் பின்பு இவர்தாம் தனியரல்லாமையாலே, z திருவுள்ளம்போலேயிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர் களையும் கூட்டிக்கொண்டு (நாம்) என்கிறாராதல். (தெழிகுரல் இத்யாதி$_3$) a அடிமைசெய்யக் கோலுகிற இவருடைய $a_2$ பாரிப்பேயன்றிக்கே, அடிமை கொள்ளக் கோலுகிறவனுடைய பாரிப்பிருக்கிறபடி சொல்லுகிறது மேல்; b இருந்த

---

அ-என்கிறபடியே, அவ்விருப்புக்கடியான புண்யமானது இத்யுத்தரத்ர யோஜநா வா. 1."தே$_3$வாஶ் சாதே$_4$ாமுக$_2$ாந் ஸர்வாநத$_4$: பஶ்யந்தி நாரகாந்" 2. "க$_3$தாக$_3$தம் காமகாமா லப$_4$ந்தே" இத்யாத$_3$யஶ்ச, அஸுரராக்ஷஸாயாத விஷாத$_3$ாஶ்சாத்ர த்$_3$ரஷ்டவ்யா:. x ஏவம்வித$_4$மான தே$_3$ாஷங்களொன்றுமின்றிக்கே, கைங்கர்யம் நிரதிஶய ஸுக$_2$மாயிருக்கும் என்கிறார் (இப்படி ஸ்வரூபத்துக்கு இத்யாதி$_3$) $x_2$ (ஸ்வரூபத்தோடே சேர்ந்ததுமாய் இத்யாதி$_3$) ஸ்ரீமத$_3$ஷ்டாக்ஷர த்$_3$வய ஸித்$_3$த$_4$த்வாத் ஸ்வரூபாநுரூபத்வாதி$_3$: $x_3$(நிரதிஶய ஸுக$_2$மாய் இதி) 3. "ஐஶ்வர்ய கைவல்யோத்தீர்ணம் த்வத$_3$ாநந்த$_3$ாத்$_3$விலக்ஷணம் | லக்ஷ்மீபே$_4$ாக$_3$ாத்$_3$விஶிஷ்டஞ்ச கைங்கர்ய ஸுக$_2$மாப்நுயாம் ||" 4. "த்வத்ஸாக்ஷாத்கரணாஹ்லாத$_3$ஸமுத்$_3$ராவஸ்தி$_2$தஸ்ய மே | ஸுக$_2$ாநி கோ$_3$ஷ்பத$_3$ாயந்தே ப்$_3$ராஹ்மாண்யபி ஜக$_3$த்பதே ||" 5. "நிரஸ்தாதிஶயாஹ்லாத$_3$ஸுக$_2$ ப$_4$ாவைகலக்ஷணா | பே$_4$ஷஜம் ப$_4$க$_3$வத்ப்ராப்திரேகாந்தாத்யந்திகீ மதா ||" 6. "ஸோऽஶ்நுதே ஸர்வாந் காமாந் ஸஹ ப்$_3$ரஹ்மணா விபஶ்சிதா" 7. "ரஸம் ஹ்யேவாயம் லப்$_3$த்$_4$வாநந்தீ$_3$ ப$_4$வதி" 8. "நிரஞ்ஜந: பரமம் ஸாம்யமுபைதி" 9. "ஸ க$_2$ல்வேவம் வர்த்தயந் யாவத$_3$ாயுஷம் ப்$_3$ரஹ்ம லோகமபி$_4$ஸம்பத்$_3$யதே ந ச புநராவர்த்ததே ந ச புநராவர்த்ததே" 10. "ஏதேந ப்ரதிபத்$_3$யமாநா இமம் மாநவமாவர்த்தம் நாவர்த்தந்தே" 11. "மாமுபேத்ய புநர்ஜந்ம" 12. "ஆப்$_3$ரஹ்மபு$_4$வ நால்லோகா:" இத்யாத$_3$யோ த்$_3$ரஷ்டவ்யா:. y (தம் திருவுள்ளத்தையும் இதி) B "எஞ்ஞான்று நாமிருந்திருந்திரங்கி நெஞ்சே" இதி ஹ்ருத$_3$யம் ஹி ஸமாநது$_3$:க்கீ$_2$தி ப$_4$ாவ:. z (திருவுள்ளம் போலே) "நாம்" என்கைக்கு அண்ணியராகவேணுமிறே. a "திருவேங்கடத்து-எந்தை" என்றதுக்கு அவதாரிகை (அடிமைசெய்ய இத்யாதி$_3$) $a_2$பாரிப்பு-உத்$_3$யோக$_3$ம். b அதிலே முக்த கண்ட$_2$மாகத் தோற்றுகிறது இவர் பாரிப்பேயன்றே, அவன் பாரிப்புத்தோற்றுகிறதோ? என்ன (இருந்தவிடத்திலே இத்யாதி$_3$) c கலவிருக்கை - ஸபை; C "என்னில் முன்னம் பாரித்து"

---

ஜீ—என்று அநுஸந்தி$_4$த்த அநந்தரம் (அவ்விருப்புக்கடியான) இத்யாதி$_3$ அநுஸந்தே$_4$யம். 13. "பே$_4$ாக$_3$ா இமே விதி$_4$ஶிவாதி$_3$ பத$_3$ஞ்ச" இத்யாத்$_3$யத்ர அநுஸந்தே$_4$யம். x ஏவம்வித$_4$மான தே$_3$ாஷங்களொன்றுமின்றிக்கே கைங்கர்யம் நிரதிஶய ஸுக$_2$ரூபமாயிருக்கும் என்கிறார் (இப்படி ஸ்வரூபத்துக்கு இத்யாதி$_3$) $w_3$ உண்டதுருக்காட்டாது-ஆஹாரஸௌக்$_2$யம் தே$_3$ஹத்தில் தெரியா திருக்கை; அநுப$_4$விக்கிறது அநுப$_4$வமாய்த் தோன்றாது என்றபடி. a மேலுக்கு அவதாரிகை

---

A 2.7. B 3-2-7. C 9-6-10.

ஈ—விடத்திலே இருந்து மநோரதி₂க்கிறாரித்தனையிறே இவர்; அவன் தனக்குக் c கலவிருக்கையான Aகலங்காப் பெருநகரத்தை விட்டு இவ்வளவும்வர வந்து,திருமலை யிலே நின்று, தன் அநுஷ்டா₂நத்தாலே தெரிவிக்கிறானிறே தன் பாரிப்பை. (தெழிகுரல இதயாதி₃) க₃ம்பீ₄ரமான த்₄வநியையுடைத்தான அருவியையுடைய. d திருவருவியின் த்₄வநியுங்கூட உபாதே₃யமாயிருக்கிறதாயிற்று இவர்க்கு, அந்நிலத் திலே உள்ளதொன்றாகையாலே. e "கைங்கர்ய ருசியுடையார் அடிமைசெய்ய வாருங்கோள்" என்றாற்போலே இருக்கிறதாயிற்று இவர்க்கு இத்₄வநி. fஇவர்க்கு இந்தத் திருவருவியின் த்₄வநியுங்கூட உத்₃தே₃ஶ்யமாகச் சொல்லவேணுமோ— gB"சிலைக்கை வேடர் தெழிப்பருத" என்று அங்குத்தைத் திருவேடர் பறிக்கிறபோதை ஆரவாரமு மகப்பட உத்₃தே₃ஶ்யமாயிருக்கச்செய்தே? h திருவேங்கடயாத்ரை போகிறவர்களைப் பறிக்கிற வேடருடைய ஆரவாரமும் உத்₃தே₃ஶ்யமாயிருக்கிறதிறே h₂ அந்நிலத்தில் உள்ளதாகையாலே. (திருவேங்கடத்தெழில்கொள சோதி) "அடிமைகொள்ளு கைக்குப் பாங்கான நிலம் இது" என்று அவன்வந்து வர்த்திக்கிற தே₃ஶமாயிற்று. i இஶ்ஶரீரஸம்ப₃ந்த₄மற்று அர்ச்சிராதி₃மார்க்க₃த்தாலே ஒரு தே₃ஶவிஶேஷத்திலே போனால் இவன் செய்யக்கடவ அடிமையை, இந்நிலத்தில் இவனுக்குச் செய்ய லாம்படி அவன்வந்து வர்த்திக்கிற தே₃ஶமிறே. j (எழில்கொளசோதி) k அஸந் நிஹிதனேயாகிலும் மேல்விழவேண்டும்படியாயிற்று வடிவழகிருப்பது. l (வேங்கடத

---

அ—1."ஸர்வேஷாம ஹி ஸ த₄ர்மாதமா" இத்யாதி₃. d கைங்கர்யப்ரதிஸம்ப₃ந்தி₄நோ'ர்த்யாத₃ரம் வத₃தி சேத் "தெழிகுரலருவி" இதி கிமர்த்த₂ம் விஶேஷயதீத்யத்ராஹ (திருவருவியின் இதி) e (கைங்கர்யருசி இதி) குரலின் தாத்பர்யம். ப்ரவாஹத்₄வநியைக் குரலென்பாரில்லையே; சேதன ருடைய மிடற்றோசையையாயிற்று. யத்₃வா, உத்₃தே₃ஶ்யதைக்கு ஹேத்வந்தரம் (கைங்கர்யருசி இத்யாதி₃) அத₂வா, கேநாகாரேணோத்₃தே₃ஶ்யம் ப₄வதீத்யத்ராஹ (கைங்கர்ய இத்யாதி₃) f இதினுடைய உத்₃தே₃ஶ்யதையை கிம்புநர்ந்யாயத்தாலே ஸாதி₄க்கிறார் (இவர்க்கு இந்த இத்யாதி₃) g (Aசிலைக்கைவேடர் இத்யாதி₃) திருமொழி. தெழிப்பு-ஆரவாரம். h ஸ்ரீமத்₃வேங்கட நாத₂ஸேவார்த்த₂ம் க₃ச்ச₂தஸ்ஸர்வஸ்வாபஹரணம் குர்வதாமாக்ரோஶ: கத₂முத்₃தே₃ஶ்யோ ப₄வதி? இத்யத்ராஹ (திருவேங்கடயாத்ரை இதி) h₂ அந்நிலமென்றது-சிங்கவேள்குன்றத்தை. i இது பாங்கானபடியென்? என்ன "திரு" என்கிற விஶேஷண ஸாமர்த்₂யத்தாலே ஸூசிதமான அர்த்த₂த்தை அருளிச்செய்கிறார் (இஶ்ஶரீரஸம்ப₃ந்த₄மற்று இத்யாதி₃) j,k எழிலின் தாத்பர்யம் (அஸந்நிஹிதனேயாகிலும் இத்யாதி₃) l,m"வேங்கடத்தெழில்கொள்சோதி" என்றத்தால் வ்யா

---

ஜீ—(அடிமைசெய்ய இத்யாதி₃) b அவனுக்குப் பாரிப்பேதென்ன (இருந்தவிடத்திலே இத்யாதி₃) c கலவிருக்கை - ஓலக்கமும், நெஞ்சு பொருந்தியிருக்கையும், கொலுச்சாவடியும். dதம்முடைய உத்₃ தே₃ஶ்யத்தை விட்டு அருவிகளின த்₄வநியை வர்ணிக்கிறதேதென்ன(திருவருவி இத்யாதி₃) eஉபா தே₃யதையிலே ஹேத்வந்தரம் (கைங்கர்யருசி இத்யாதி₃) f இதினுடைய உத்₃தே₃ஶ்யதையை கிம் புநர்ந்யாயத்தாலே த்₃ருடீ₄கரிக்கிறார் (இவர்க்கு இந்த இத்யாதி₃) g A(சிலைக்கைவேடர்) "வில்லைக் கையிலேயுடைய வேடருடைய; தெழிப்பருத-ஆரவாரம் மாறுத" என்று திருமொழிப் பாசுர அர்த் த₂ம். hஆரவாரத்துக்குஅடியேது, அது உத்₃தே₃ஶ்யமாகிறபடி தான் எப்படி?என்ன(திருவேங்கட யாத்ரை இத்யாதி₃) h₂ அந்நிலத்தில்-சிங்கவேள்குன்றத்தில். i அது பாங்கானபடியென்? என்ன (இஶ்ஶரீரஸம்ப₃ந்த₄ம் இத்யாதி₃) j,k எழிலின் தாத்பர்யம் (அஸந்நிஹிதனே இத்யாதி₃) j (எழில்

---

A மூன்திருவ 51. B பெரியதிரு 1-7-2.

ஈ—தெழில்கொள் $l_2$சோதி) mA **வானூர்சோதியையும் B நீலாழிச்சோதியையும் வ்யா வர்த்திக்கிறது; n**A **வானூர்சோதி** $n_2$ **பகல்விளக்குப்பட்டிருக்கும், B நீலாழிச்சோதி கடல் கொண்டு கிடக்கும், வேங்கடத்தெழில்கொள்சோதி** o **குன்றத்திட்ட விளக்காயிருக்கும்;** p C **வேங்கடமேய விளக்கிறே.** q அந்நிலமிதியாலே $q_2$அழகு நிறம்பெற்றபடி. r(எநதை) s **விரூபனேயாகிலும் விடவொண்ணுதபடியாயிற்று ப்ராப்தியிருப்பது.** t **ஸௌலப்₄யத்தாலும் அழகாலும் தம்மைத் தோற்பித்தபடி என்றுமாம்.** (தந்தை தந்தைக்கே) **பரமமேஷி என்றபடி.** u **இப்பாட்டால் -** $u_2$ **ப்ராப்ய ப்ரத₄ாநமான திருமந்த்ரத்தில் அர்த்த₂த்தை அருளிச்செய்கிறுர்.** v''ஒழிவில் காலமெல்லாமுடனுய் மன்னி வழுவிலா

அ—வ்ருத்தி (வானூர் சோதியையும் இத்யாதி₃) (வானூர்சோதி) A''மானேய் நோக்கி மடவாளை'' (நீலாழிச்சோதி) B''பாலாழி நீ கிடக்கும் பண்பை''. mவ்யாவ்ருத்தி ப்ரகாரம் ஶ்லோக்த்யா ஆஹ (வானூர்சோதி இத்யாதி₃) பரமஸாம்யாபந்நாநாமேவ ஸேவாப்ரத₃ாநாத், ப்₃ரஹ்மாதீ₃நாமபி ஸ்வேதத்₃வீபே ஸ்தி₂த்வா ஆக்ரோஶமுகே₂ந விஜ்ஞாபநீயத்வாத், D''கானமும் வானரமும் வேடுமுடை'' இதி ஸர்வாதி₄காரத்வாச்சேதி ப₄ாவ:. $n_2$ (பகல்விளக்குப் பட்டிருக்கும்) 1. ''**ஸக்ருத்₃தி₃வா ஹாஸ்மை ப₄வதி**'' 2. ''**அத₂ யத₃த: பரோ தி₃வோ ஜ்யோதிர் தீ₃ப்யதே**'' என்கிற வாக்யத்திலே கடாக்ஷம். o (குன்றத்திட்ட) என்றது-''வேங்கடத்து'' என்றத்தைப்பற்ற. p ஶ்ரீமத்₃ வேங்கடநாதே₂ா தீ₃ப: கிம்? இத்யத்ராஹ (வேங்கடமேய விளக்கிறே இதி)திருமொழி. j,k,q''எழில் கொள் சோதி'' என்றது - ஸ்வாப₄ாவிகமான வடிவழகு என்று கீழே அருளிச்செய்து, அபரப₄ாவியாக அருளிச்செய்கிறுர் (அந்நிலமிதியாலே இத்யாதி₃) நிலமிதி - பூ₄ஸ்வப₄ாவம். தத₂ா ச கார்யகாரணப₄ாவப்ரகாஶாத் இத₃ம் வாக்யம் ப₄ாவாந்தரபரம். mஅமுமேவ ப₄ாவம் ஹ்ருதி₃நித₄ாய (வானூர்சோதியையும் இத்யாதி₃நா) வ்யாவர்த்யமபி₄ஹிதம் வா. j,k,$l_2 q_2$''(வடிவழகிருப்பது)(அழகு நிறம்பெற்றபடி) இதி ப்ரயோக₃ாத் - ஸௌந்த₃ர்யம், தேஜஸ்சேதி ஜ்யோதிஶ்ஶப்₃த₃ஸ்ய அர்த்த₂த்₃வயம்'' இதி ச வத₃ந்தி. r ''எந்தை'' என்ற ஸ்வாமித்வம் ஸ்வாப₄ாவிகமாதல், கு₃ண க்ருதமாதல்; s முந்தினது (விரூபனேயாகிலும் இத்யாதி₃) t கீழ்ப்பத₃ங்களைக் கடாக்ஷித்து இரண்டாவது (ஸௌலப்₄யத்தாலும் இத்யாதி₃) l,r ஆக, ''வேங்கடத்து எழில்கொள்சோதி, எந்தை'' இதி பத₃ாநி - ஸ்வாதந்த்ர்யேண ப்ரத்யேகமர்த்த₂பராணி, ஹேதுஹேதுமத்₃ப₄ாவ பராணீதி ச நிர்வாஹபே₄த₃:. u (இப்பாட்டால் இதி) அத்ர வக்தவ்யம் ஸர்வம் தத்வதீ₃பே வாதி₃கேஸரிபி₄: ஶ்ரீமத₃ஷ்டாக்ஷரமந்த்ரார்த்த₂ நிரூபணவஸரே நிபுணதரம் அப்₄யத₄ாயி. $u_2$ ப்ராப்யப்ரத₄ாநமான-கைங்கர்யப்ரத₄ாநமான என்றபடி. v அருளிச்செய்யும்படியென்? என்ன (ஒழிவில் இத்யாதி₃) நாராயண ஶப்₃தே₃—3. ''**ஜஹ்னூர் நாராயணே நர:**'' ''ரிங் க்ஷயே''

ஜீ—இத்யாதி₃) அழகையுடைத்தான தேஜோமயவிக்₃ரஹத்தையுடையனை. l,m''வேங்கடத்தெழில் கொள் சோதி'' என்றத்தால் வ்யாவ்ருத்தி (வானூர்சோதி இத்யாதி₃) n வ்யாவ்ருத்தி ப்ரகாரம் ஶ்லோக்த்யா ஆஹ (வானூர்சோதி பகல்விளக்கு இத்யாதி₃) p இவன் விளக்கோ? என்ன (வேங்கட மேய இத்யாதி₃)திருமொழி. திருமலையிலே பொருந்தி வர்த்திக்கிற விளக்கு இத்யர்த்த₂:. j,k,q''எழில் கொள்சோதி''என்றதுக்கு-''ஸ்வாப₄ாவிகமானஅழகு''என்று கீழே அருளிச்செய்து, அபரப₄ாவியாக அர்த்த₂ாந்தரம் (அந்நிலமிதியாலே இத்யாதி₃) நிலமிதி - நிலஸ்வப₄ாவம். r ''எந்தை'' என்ற ஸ்வாமித்வம் - ஸ்வாப₄ாவிகமாதல், கு₃ணக்ருதமாதல். s முந்தினது - (விரூபனே இத்யாதி₃) t கீழ்ப்பத₃ங்களைக் கடாக்ஷித்து இரண்டாவது (ஸௌலப்₄யத்தாலும் இத்யாதி₃) l,r''வேங்கடத்து எழில்கொள்சோதி, எந்தை'' இதி பத₃ாநி - ஸ்வாதந்த்ர்யேண ப்ரத்யேகம் அர்த்த₂பராணி, ஹேதுஹேதுமத்₃ப₄ாவபராணீதி ச நிர்வாஹத்₃வயபே₄த₃:. $u_2$ ப்ராப்ய ப்ரத₄ாநமான—

 A 1-5-5. B பெரியதிருவ 34. C பெரியதிரு 4-7-5 D நான்திருவ 47.

ஈ—அடிமைசெய்யவேண்டும்" என்கிற இத்தால்-சதுர்த்தி₂யில் ப்ரார்த்த₂னையைச் சொல்லுகிறது; "நாம்" என்கிறவிடம்-v₂ப்ரணவ ப்ரதிபாத்₃யனுன இவனுடைய ஸ்வரூபத்தைச் சொல்லுகிறது. w"இது ஶப்₃த₃ஸ்வப₄ாவத்தைக்கொண்டு சொன்னோம்" என்று w₂ அருளிச்செய்தருளின வார்த்தை; "தெழி குரல்" இத்யாதி₃யால்-நாராயண ஶப்₃த₃ார்த்த₂த்தை அருளிச்செய்கிறார்; x ப்ராப்தவிஷயத்தில் பண்ணும் கைங்கர்ய

அ—இதி த₄ாது:. தஸ்யாபத்யம் நாரா:, தேஷாமயநம் இத்யாதி₃நா, க்ஷயரஹிதா: நாரா: இத்யாதி₃நா ச-கைங்கர்யப்ரதிஸம்ப₃ந்தி₄ந: கைங்கர்யகர்த்துர்ச நித்யதாபி₄த₄ாநாத், தத்புருஷ ப₃ஹுவ்ரீஹிப்₄யாம் - கைங்கர்யப்ரதிஸம்ப₃ந்தி₄நோ விபு₄த்வாபி₄த₄ாநாத், ஶரீரஶரீரிப₄ாவாபி₄த₄ாநாத் 1. "மாதா பிதா ப்₄ராதா நிவாஸஶ்ஶரணம் ஸுஹ்ருத்₃க₃திர் நாராயண:" இத்யாதி₃ ✓மாணிக்யமாலா ப்ரப₃ந்தே₄ாக்த நவவித₄ஸம்ப₃ந்த₄ ப்ரப்₄ருத்யநேகவித₄ ஸம்ப₃ந்த₄ாபி₄த₄ாநாச்ச, "ஸர்வதே₃ஶஸர்வகாலஸர்வாவஸ்த₂ாஸ்வபி ஸர்வவித₄கைங்கர்யஞ்ச கரவாணி" இதி ப்ரார்த்த₂நா-நாராயண ஶப்₃தே₃ாத்தர சதுர்த்₂யா அர்த்த₂ இதி ப₄ாவ:. v₂ ப்ரணவப்ரதிபாத்₃யனுன - ப்ரணவத்தில் மகாரப்ரதிபாத்₃யனுன w2. "ஓங்காரோ ப₄க₃வாந் விஷ்ணு:" 3. "ஓம் இதி ப்₃ரஹ்ம" 4. "ஓங்காரோ விஷ்ணுவாசக:" இத்யாதி₃நா ப்ரணவ: ஈஶ்வரஸ்யைவ வாசக:, சேதந: கத₂ம் ப₄வேதி₃த்யத்ராஹ (இது ஶப்₃த₃ஸ்வப₄ாவத்தை இதி) w₂ (அருளிச்செய்தருளின வார்த்தை) நம்பிள்ளை இதி ஶேஷ:. 5. "ப்ரணவோ ப₄க₃வத்₃வாசீ ப்ராத₄ாந்யாத₃ர்த்த₂ஸம்ப₄வாத் । ஶப்₃த₃தோ ஜீவவாசீ ஸ்யாத்₃ ராஜபூருஷ ஶப்₃த₃வத் ॥" இதி ஶப்₃த₃ப்ராத₄ாந்யேந 6. "ஓம் இத்யாத்மாநம் யுஞ்ஜீத" இதி சேதநம் வத₃தி, அர்த்த₂ ப்ராத₄ாந்யாதீ₃ஶ்வரம் இதி ப₄ாவ:. "ராஜபுருஷ:" என்றால் - ஆர்த்த₂மாக ராஜ்ஞ: ப்ரதீதியுண்டானாலும், தத்புருஷனிடத்திலேயிறே இஶ்ஶப்₃த₃த்துக்கு ப்ராத₄ாந்யேந பே₃ாத₄கத்வமுள்ளது. ப்ரணவத்தில் ஶப்₃த₃ப்ராத₄ாந்யம் தோற்றும்படியென்? என்னில்; அகாரோகாரமகாரங்கள் கூடி ப்ரணவமாகையாலே, "ராஜபுருஷ:" என்னுமாபோலே "ஆயம்" என்றாய், "அகாரார்த்த₂ாய ம:" என்றபடி. இங்கு அப்படி ஶப்₃த₃ப்ராத₄ாந்யமுண்டு என்கைக்கு நியாமகமேது? என்னில்; மேலே கைங்கர்யத்தைச் சொல்லுகையாலே கைங்கர்யகர்த்தாவே ப்ராத₄ாந்யேந ப்ரதிபாத்₃யனாகவேணுமே, ஆகையாலே என்றபடி. "நாம்" இத்யாரப்₄ய, உத்தரார்த்த₄பூர்வகமந்வய:; உத்தரார்த்த₄பூர்வகம், "நாம்-ஒழிவில் காலமெல்லாம்" இத்யாரப்₄யாந்வயோ வா. இயம் க₃ாத₂ா - த்₃வயோத்தரார்த்த₄க₃தோபேயத்வமபி₄த₃த₄ாதி; பூர்வவாக்யோச்யமாநோபாயத்வம் A "உலகமுண்ட பெருவாயா" இத்யாதி₃நாபி₄தீ₄யதே. இதில்-கைங்கர்யத்தை ப்ரார்த்தி₂த்து. A உலகமுண்ட பெருவாயனிலே - ஶரணம்புகுகிறாராகையாலே, இதில்-உத்தரக₂ண்ட₃ார்த்த₂மும், அதில் - பூர்வக₂ண்ட₃ார்த்த₂மும் சொல்லிற்றாயிற்று. "மன்னி" என்றவிடத்திலே, ஸ்ரீஸம்ப₃ந்த₄ம் க₃ர்ப்பி₄தமிறே. தஸ்மாது₃பாயோபேயௌ ஸ்ரீவேங்கடேஶசரணவித்யுக்தம் ப₄வதி.xகைங்கர்யமநோரத₂ாவஸரே நாராயணஶப்₃த₃ார்த்த₂ம் கிமர்த்த₂மபி₄த₃த₄ாதி இத்யத்ராஹ (ப்ராப்தவிஷயத்தில் இதி) y உத்தரார்த்தே₄ந-நாராயணஶப்₃த₃ார்த்தே₂ா ऽபி₄தீ₄யத

ஜீ—புருஷார்த்த₂ப்ரத₄ாநமான. v உபபாத₃நம் (ஒழிவில் இத்யாதி₃) w3. "ஓம் இதி ப்₃ரஹ்ம" 4. "ஓங்காரோ விஷ்ணுவாசக:" என்று ஈஶ்வரவாசகமாயிருக்க, சேதநனைச் சொல்லும்படியென்? என்ன (இது ஶப்₃த₃ஸ்வப₄ாவம் இத்யாதி₃) w₂ வார்த்தை - நம்பிள்ளை இதி ஶேஷ:. 5. "ப்ரணவோ ப₄க₃வத்₃வாசீ ப்ராத₄ாந்யாத₃ர்த்த₂ ஸம்ப₄வாத் । ஶப்₃த₃தோ ஜீவவாசீ ஸ்யாத்₃ ராஜபூருஷஶப்₃த₃வத் ॥" என்னக்கடவதிறே. 6. "ஓம் இத்யாத்மாநம் யுஞ்ஜீத" என்னவும் கடவதிறே. x ஸ்வாமித்வகத₂நத்துக்கு ப்ரயோஜநம் ஏதென்ன (ப்ராப்தவிஷயத்தில் இத்யாதி₃)

✓ பெரியவாச்சான்பிள்ளை அருளிய ரஹஸ்யக்₃ரந்த₂ம். A 6-10.

**ஈ—மிறே ப்ராப்யமாவது; y இனி, ஸௌலப்4யமும் வடிவழகும் ஸ்வாமித்வமுமெல்லாம்-நாராயண ஶப்3த3த்துக்கு அர்த்த2மிறே. 1.**

---

அ—இதி கத2ம் ஜ்ஞாதும் ஶக்யத இத்யத்ராஹ (இனி ஸௌலப்4யமும் இதி) "வேங்கடத்து" இத்யநேந - ஸௌலப்4யம், "எழில்கொள்சோதி" இத்யநேந - ஸௌந்த3ர்யம், "எந்தை தந்தை தந்தைக்கே" இத்யநேந-ஸ்வாமித்வம், கு3ணவிக்3ரஹௌ - நாராயணஶப்3த3ாந்தர் பூ4தௌ, தத்புருஷப3ஹுவ்ரீஹிப2லிதம் ஸ்வாமித்வம் இதி ச ப4ாவ:. A"நாரங்களாவன நித்ய வஸ்துக்களினுடைய திரள்; அவையாவன—ஜ்ஞாநாநந்த3ாமலத்வாதி3களும், ஜ்ஞாநஶக்த்யாதி3களும், வாத்ஸல்யஸௌஶீல்யாதி3களும், திருமேனியும், காந்திஸௌகுமார்யாதி3களும்" இதி ஹ்யுச்யதே. "ஸ்வாமித்வம் கிமர்த்த2மபி4தீ4யத இத்யாகாங்க்ஷாயாமுத்தரம்-ப்ராப்தவிஷயத்தில் இதி வாக்யம்" இதி ச வத3ந்தி. யத்3வா, ஸ்வாமித்வத்திலே தலைக்கட்டினதுக்கு ப்ரயோஜநமாதல். x,y (இனி ஸௌலப்4யமும்) இத்யாதி3 வாக்யாநந்தரே - இவ்வாக்யம் அநுஸந்தே4யம். இப்பக்ஷங்களிலே, "தெழிகுரல்" என்று தொடங்கி, "அடிமைசெய்யவேண்டும் நாம்" என்று அந்வயமாதல். "இப்பாட்டால்"(153u) இதி வாக்யே (ப்ராப்யப்ரத4ாநமான திருமந்த்ரத்தில்)(பு2) இதி விஶேஷணுத் - ப்ராபகப்ரத4ாந: சரமஶ்லோக:, உப4யப்ரத4ாநம் த்3வயம் இதி ச ஸூச்யதே. நநு-"அநயா க3ாத2யா-ஸ்ரீமத3ஷ்டாக்ஷரமந்த்ரார்த்தே2ாऽபி4தீ4யத இத்யுக்தம்; மந்த்ரே ஸார்வகாலீந கைங்கர்ய ப்ரார்த்த2நோச்யதே இதி ப்ரத்யபாதி3; அஸ்யாம் க3ாத2ாயாம் து உத்தரகாலீந கைங்கர்ய ப்ரார்த்த2நாபி4தீ4யத இதி நிர்ணீதம்; கத2மேகார்த்த2த்வம்?" இதி சேத்-ஸத்யம் முமுக்ஷுபூ4த பராங்குஶார்யரூபாதி4காரிவிஶேஷாபேக்ஷயா தத2ா நிர்ணீதம். அயமாகாரோ மந்த்ராநுஸந்த4ாயிநாம் முமுக்ஷூணுமபி ஸமாந:; ஶப்3த3ஸ்வரூபாவமர்ஶேத்ரைகாலிககைங்கர்யப்ரார்த்த2நாஸ்பு2ரணமுப4யத்ர ஸமாநம். ஸ்ரீமத3ஷ்டாக்ஷரமந்த்ரஸ்ய நித்யைர் முக்தைர் முமுக்ஷுபி4ஶ்சாநுஸந்தே4யத்வாத் நித்யேஷ்வஸங்குசிதார்த்த2த்வம், தேஷாம் கைங்கர்யாகரணகாலாப4ாவாத். "தெழிகுரல் - மஹாத்4வநியாம்படி ஶப்3தி3க்கிற. 'எழில்கொள் சோதி' என்று – 1. '**அட்ரமேயம் ஹி தத்தேஜோ யஸ்ய ஸா ஜநகாத்மஜா**' என்கிறபடியே ஸௌந்த3ர்யரூபிணியான லக்ஷ்மியோட்டை ஸம்ப3ந்த4த்தைச் சொல்லுவாருமுளர். தெழித்தல் - முழங்குதல்" என்று உரையிலே. 1.

---

ஜீ—y உத்தரார்த்தே4ந - நாராயண ஶப்3த3ார்த்தே2ாऽபி4தீ4யத இதி கத2ம் ஜ்ஞாதும் ஶக்யத இத்யத்ராஹ (இனி ஸௌலப்4யமும் இத்யாதி3) "வேங்கடத்து" இத்யநேந - ஸௌலப்4யம், "எழில்கொள்சோதி" இத்யநேந ஸௌந்த3ர்யம், "எந்தை" இத்யாதி3நா ஸ்வாமித்வம். x,y "இனி ஸௌலப்4யமும்" இத்யாதி3வாக்யாநந்தரே - (ப்ராப்தவிஷயத்தில்) இத்யாதி3வாக்யம் அநுஸந்தே4யம். "தெழிகுரல் இத்யாரப்4ய, அடிமைசெய்யவேண்டும் நாம்" இத்யந்வய:. 2. "**ந மே து3:க்க2ம் ப்ரியா தூ3ரே ந மே து3:க்க2ம் ஹ்ருதேதி வா ! ஏததே3வாநுஶோசாமி வயோऽஸ்யா ஹ்யதிவர்த்ததே ||**" இதி யுத்3த4காண்டே3 பஞ்சமே லக்ஷ்மணம் ப்ரதி ராம:. ஸங்க்ஷேபே—3. "**ரம்யமாவஸத2ம் க்ருத்வா ரமமாணு:**" இத்யாதி3. 4. "**விலலாப ஸப4ாமத்4யே**" இத்யாதி3 ச, ராமம் ப்ரதி 5. "**ஏபி4ஶ்ச ஸசிவைஸ்ஸார்த்த4ம்**" இத்யாதி3 ப4ரதவசநஞ்ச பூர்வமேவ லிகி2தம்; 6. "**அஹம் ஸர்வம் கரிஷ்யாமி**" இத்யாத்3யபி ப4ரதம் ப்ரதி கைகேயீ. 7. "**உத்திஷ்டோ2த்திஷ்ட2 கிம் ஶேஷே ராஜந் ! புத்ர மஹாயஶ:**" இத்யாத்3யபி லிகி2தம். தத்ரைவ ஸப்தநவதிதமே லக்ஷ்மணம் ப்ரதி ராம: — 8. "**யத்3விநா ப4ரதம் த்வாஞ்ச ஶத்ருக்4நஞ்சாபி மாநத3 ! ப4வேந்மம ஸுக2ம் கிஞ்சித்3ப4ஸ்மஸாத்குருதாம் ஶிகீ2**". ஷஷ்டே2ऽம்ஶே பஞ்சமே மைத்ரேயம் ப்ரதி பராஶர:—9. "**ந கேவலம் த்3விஜஶ்ரேஷ்ட2 நரகே து3:க்க2 பத்3த4தி: ! ஸ்வர்க்கே3ऽபி பாதபீ4தஸ்ய க்ஷயிஷ்ணேர் நாஸ்தி நிர்வ்ருதி:||**" 1.

---

A முமுக்ஷுப்படி 96, 97.

2. எந்தை தந்தைதந் தைதந்தை தந்தைக்கு
முந்தை வானவர் வானவர் கோனொடுஞ்
சிந்துபூ மகிழுந் திருவேங் கடத்(து)
அந்த மில்புகழ்க் காரெழி லண்ணலே.

ஆ— 2. வ்யா:— (எந்தை தந்தை) திருநாட்டிற்சென்று எம்பெருமானுக்கு அடிமை செய்வதன்றோ எல்லார்க்கும் பரமப்ராப்யமென்னில்; "திருநாட்டிலுள்ள நித்யஸித்த புருஷர்களும் திருவேங்கடமுடையான் குணங்களிலே அகப்பட்டு அவன் திருவடிகளிலேயன்றோ வந்து அடிமை செய்கிறது; ஆதலால் தன்னுடைய நிரவதிக கல்யாண குணங்களாலே தன் அடியார்க்கு என்னை ஆட்படுத்தியருளின திருவேங்கடமுடையானுக்கு அடிமை செய்யுமதுவே நமக்குப் பரமப்ராப்யம்; அவனுக்கு அடிமைசெய்ய வேண்டும் நாம்; வாருங்கள்" என்கிறார்.
2.

ஒ— அவ:— இரண்டாம் பாட்டில் — "திருநாட்டிலே சென்று எம்பெருமானுக்கு அடிமைசெய்கையன்றோ எல்லாருக்கும் பரமப்ராப்யம்" என்னில்; திருநாட்டிலுள்ள நித்யஸூரிகளும் ஆசைப்படும்படி முடிவில்லாத ஸௌந்தர்யசீலாதிகளையுடைய திருவேங்கடமுடையான் என்னைத் தனக்கு அத்யந்தசேஷமாக்கிக்கொண்டான், ஆனபின்பு அவனுக்கு ஸர்வசேஷவ்ருத்தியும் பண்ணவேணும் என்கிறார்.

வ்யா:— (வானவர் என்று தொடங்கி) ஸ்ரீஸேனபதியாழ்வானோடுங்கூட அயர்வறும் அமரர்கள் உபஹாரமாகத் தூவின பூக்கள் நிலமிதியிற்குளிர்த்தியாலே செவ்விபெறும்படியான திருமலையிலே. (அண்ணல்) ஸர்வேஶ்வரன்.
2.

ப— 2. அவ:— அநந்தரம், இப்படி ஸர்வாதிகசேஷியினுடைய குணவிக்ரஹாதிவைலக்ஷண்யத்தை அருளிச்செய்கிறார்.

**எந்தை தந்தை தந்தை தந்தை தந்தைக்கும் முந்தை** — நமக்கு உத்பாதக பாரம்பர்யத்தில் ப்ரதமோத்பாதகனை பந்தத்தையுடையவன், **வானவர்**— பரமபதவாஸிகள், **வானவர் கோனொடும்**—(தங்களுக்கு நிர்வாஹகரான) ஸேனை முதலியாரோடே, **சிந்து**—தூவின, **பூ**—விடுபூக்கள், **மகிழும்**—(ஸ்வஸ்பர்ஶத்தாலே)

---

ஆதே— கீழில் திருவாய்மொழியில் அவனைக்கிட்டித் தம்முடைய ஸ்வரூபம் பெற்றவாறே ஸ்வரூபாநுரூபமான அடிமைபெறவேணுமென்று பாரிக்கிறார் 'ஒழிவில் கால'த்தில். ஒழிவில்லாத காலமெல்லாம் ஸர்வதேஶத்திலும் பிரியாதே ஸர்வாவஸ்தையிலும் ஒன்றும் குறையாதே நாம் அடிமைசெய்யவேணும். ஆருக்குத்தான்? என்னில்: கம்பீரமான த்வநியையுடைத்தான அருவியையுடைய திருமலையிலே, அஸந்நிஹிதனேயாகிலும் மேல்விழவேண்டும்படி வடிவழகையுடைய, விருபனேயாகிலும் விடவொண்ணாதபடி ப்ராப்தனை திருவேங்கடமுடையானுக்கு என்கிறார் " ஒழிவில்காலம் " இத்யாதியால்.
1.

பூ—விகஸிதமாம்படியான, **திருவேங்கடத்து**—திருமலையில் வாஸத்தாலே, **அந்தம்**—முடிவு, **இல்**—இல்லாத, **புகழ்**—கு₃ணப்ரதை₂யையுடையனாய், **கார்**—ஶ்யாமமான, **எழில்**—வடிவழகையுடைய, **அண்ணல்**—ஸர்வாதி₄கன்.

கு₃ணத்தாலும் அழகாலும் ஸர்வாதி₄கன் என்று கருத்து. கார்-மேக₄முமாம். 2.

---

**இ**— அவ:— இரண்டாம் பாட்டில் — இவ்வடிமை ஒரு தே₃ஶவிஶேஷத்தே சென்றால் செய்யுமதன்றோ? என்ன; அங்குள்ளாரும் இங்கே வந்து அடிமை செய்யாநின்றால் எனக்கு அடிமைசெய்யக் குறையென்? என்கிறார்.

வ்யா:— **(எந்தை இத்யாதி₃)** "அடியாரடியார்" என்று ஸ்வஸ்வரூபத்தை நிரூபிக்கும்போது அத்தலையே தொடங்குமாபோலே, பரஸ்வரூபத்தை நிரூபிக்கும்போது இத்தலையே பிடித்து அவ்வளவும் செல்லுகிறார். **(வானவர் இத்யாதி₃)** நித்யஸூரிகள் ஸ்ரீஸேனாபதியாழ்வானோடுங்கூட ஆராத₄நார்த்த₂மாகத் தூவின புஷ்பங்கள் நிலமிதியாலே செவ்விபெறும்படியான திருமலை. **(சிந்து பூ)** திருவேங்கடமுடையானுடைய நீர்மைக்குத் தோற்று அக்ரமமாக ப்ரயோகி₃க்கிறபடி. இங்குள்ளார் அங்கே சென்றால் மேன்மைகண்டு படும்பாடெல்லாம் அங்குள்ளார் எல்லாரும் இங்குத்தை நீர்மைகண்டு படும்படி. A கானமும் வானரமும் வேடுமுடை வேங்கடமிறே. **(அந்தமில் புகழ்)** பரமபத₃த்தில் ஸாவதி₄யென்னும்படி திருமலையிலே வந்தபின்பாயிற்று, புகழ் நிரவதி₄கமாயிற்று. **(காரெழில்)** நிர்க்கு₃ணனாகிலும் விடவொண்ணாத வடிவழகு. **அண்ணல்** - விரூபனானாலும் விடவொண்ணாத ஸ்வாமித்வம். காரெழிலண்ணல் - எந்தை தந்தை தந்தை தந்தை தந்தைக்கும் முந்தையான பின்பு - ஒழிவில் காலமெல்லாமுடனாய் மன்னி வழுவிலா அடிமை செய்யவேண்டும் நாம். 2.

---

**ஈ— அவ:— இரண்டாம் பாட்டு. a "பரிபூர்ண கைங்கர்யத்தைப் பெறவேணும் என்று மனோரதி₂யாநின்றீர். அதுபின்னை, இஶ்ஶரீரஸம்ப₃ந்த₄மற்று அர்ச்சிராதி₃ மார்க்க₃த்தாலே ஒரு தே₃ஶவிஶேஷத்திலே போனால் பெறுமதொன்றிறே" என்ன; "அங்குள்ளாரெல்லாரும் வந்து அடிமைசெய்கிறது இந்நிலத்திலேயாகையாலே இங்கே பெறக் குறையில்லை" என்கிறார்.**

---

**அ**— இரண்டாம் பாட்டு. (எந்தை இத்யாதி₃) a "வழுவிலா அடிமை செய்யவேண்டும் நாம்" என்கிற பத₃த்தை த₃ளமாகக்கொண்டு ஶங்கித்து, "வானவர் வானவர் கோனொடும்" என்ற பத₃த்தைக் கடாக்ஷித்து உத்தரம் அருளிச்செய்கிறார் (பரிபூர்ணகைங்கர்யத்தை இத்யாதி₃) b,c "எந்தை" என்று - தம்மளவிலே சொல்லாதே, முடிந்த எல்லையளவும் சொல்லுகிறதுக்குத் தாத்பர்யம்

---

**ஜீ**— இரண்டாம் பாட்டு. (எந்தை இத்யாதி₃) a "வழுவிலா அடிமை செய்யவேண்டும் நாம்" என்ற பத₃த்தை த₃ளமாகக்கொண்டு ஶங்கித்து, "வானவர் வானவர் கோனொடும்" என்ற பத₃த்தைக் கடாக்ஷித்து உத்தரம் அருளிச்செய்கிறார் (பரிபூர்ண இத்யாதி₃) b,c ஏழு தலைமுறைக்கு ஸ்வாமியென்பானென்? என்ன (அடியார் இத்யாதி₃) "எந்தை" என்று - தானும் பிதாவுமாய்,

---

A நான்-திருவ 47.

ஈ— வ்யா:—b (எந்தை இத்யாதி₃) cA "அடியாரடியார் தம்மடியாரடியார் தமக்கடியா ரடியார் தம்மடியாரடியோங்கள்" என்கிறபடியே ஸ்வஸ்வருபத்தை நிருபிக்கப்புக்கால் அத்தலையேபிடித்து இவ்வளவும்வர நிருபிக்குமாபோலேயாயிற்று, பரஸ்வருபத்தை நிருபிக்கப்புக்காலும் இத்தலையேபிடித்து அவ்வளவும் செல்ல நிருபிக்கும்படி. d1. "तमीश्वराणां परमं महेश्वरम्" (தமீஶ்வராணாம் பரமம் மஹேஶ்வரம்) என்னக் கடவதிறே. (வானவர் இத்யாதி₃) வானவருண்டு - நித்யஸூரிகள், வானவர் கோனுண்டு - ஸ்ரீஸேனாபதியாழ்வான், அவனோடேகூட e அப்ராக்ருதமான புஷ்பங்களைக்கொண்டு, தங்களுக்கும் அவ்வருகானவன் B கானமும் வானரமுமான இவற்றுக்கு முகங்கொடுத்துக்கொண்டு நிற்கிற ஸௌஶீல்யகு₃ணத்தை அநுஸந்தி₄த்து ஶிதி₂லராய், பின்னை க்ரமத்திலே பரிமாறமாட்டாதே அடைவுகெட்டுச் சிந்தா நிற்பர்களாயிற்று. f இங்குள்ளார் அங்கே போய் மேன்மையைக் கண்டு அநந்யார்ஹராமாபோலேயாயிற்று—அங்குள்ளார் இங்கே வந்து அந்நீர்மைகண்டு ஈடுபடும்படி; g மேன்மையநுப₄விக்கையாவது அந்நிலத்திலே, நீர்மையநுப₄விக்கையாவது இந்நிலத்திலேயிறே. (சிந்துபூமகிழும்) h கொம்பில் நின்றபோதையிற்காட்டிலும், நிலத்திலே விழுந்தபோது செவ்விபெற்று விகஸிதமாகாநிற்குமாயிற்று நிலஸ்வபா₄வத்தாலே.

---

அ—(அடியார் அடியார் இத்யாதி₃) "எந்தை" என்று தானும் பிதாவுமாய், மேல் அஞ்சுமாக ஏழு தலைமுறையும் கண்டுகொள்வது. ப்ரணவநாராயணபதே₃ சாத்ர ப்ரமாணதயா த்₃ரஷ்டவ்யே. d இப்படி சொல்லுகைக்கு அவன் பரமஶேஷியோ? என்ன (தமீஶ்வராணாம் இத்யாதி₃) 1. "ஈஶ்வராணாம்" என்று த்₃வாரபரம்பரையை விவக்ஷிக்கிறது என்று திருவுள்ளம். e புஷ்பம் கீத்₃ருக்₃பூ₄தம், கரத்₄ருதபுஷ்பதைதி₂ல்யஸ்ய கோ ஹேது:? இத்யாகாங்க்ஷாம் பூரயந்நர்த்த₂மாஹ (அப்ராக்ருதமான இத்யாதி₃) f ஸூரீணாம் நித்யாநுப₄வே ஸத்யபி ஏவம் வித்₃த₄தாயாம் கிந்நிமித்தமித்யாகாங்க்ஷாம் ஸநித₃ர்ஶநம் ஶமயதி (இங்குள்ளார் இத்யாதி₃) g நித்யவிபூ₄தௌ ஸௌஶீல்யம் நாஸ்தி கிம்? இத்யத்ராஹ (மேன்மை இதி) B "ஆளியும் கோளரியும்" இத்யாதி₃நா உச்யமாநஸௌஶீல்யம் தத்ர நேதி ப₄ாவ:. h "சிந்துபூமகிழும் - திருவேங்கடம்" இதி பத₃ஸங்க₃திம் ஹ்ருதி₃ நித₄ாயாஹ (கொம்பில் நின்றபோதையில் இதி) C "குளிரருவி வேங்கடம்" என்னக்கடவதிறே. D "கன்னவிலும் காட்டகத்தோர் வல்லிக்கடிமலரின் நன்னறு

---

ஜீ—மேல் அஞ்சுமாக ஏழுதலைமுறையும் கண்டுகொள்வது. d இப்படி சொல்லுகைக்கு அவன் பரமஶேஷியோ? என்ன (தமீஶ்வராணாம் இத்யாதி₃) இயம் ஶ்ருதி: ஶ்வேதாஶ்வதரே. e புஷ்பம் கீத்₃ருக்₃பூ₄தம், கரத்₄ருதபுஷ்பதைதி₂ல்யஸ்ய ச கோ ஹேது:? இத்யாகாங்க்ஷாம் பூரயந்நர்த்த₂மாஹ (அப்ராக்ருதமான இத்யாதி₃) h "சிந்துபூமகிழும் திருவேங்கடத்து—தூவின விடுபூக்கள் ஸ்வஸ்பர்ஶத்தாலே விகஸிதமாம்படியான திருமலையில்" என்று உரையில் அர்த்த₂ம். f நித்யாநுப₄வமுண்டாயிருக்கச்செய்தேயும் அவர்கள் வித்₃த₄ராகைக்கு அடியை ஸநித₃ர்ஶநமாக அருளிச்செய்கிறார் (இங்குள்ளார் இத்யாதி₃) g அங்கு நீர்மையில்லையோ? என்ன (மேன்மை இத்யாதி₃) h "சிந்துபூமகிழும் - திருவேங்கடம்" என்ற பத₃ச்சேர்த்திக்கு ப₄ாவம் (கொம்பில்நின்ற இத்யாதி₃) C "குளிரருவிவேங்கடம்" என்னக்கடவதிறே. i,j "வேங்கடத்து - அந்தமில்புகழ்" என்ற

---

ப்ர—(இரண்டாம் பாட்டு) (எந்தை தந்தை இத்யாதி₃) d1. श्वेताश्वतरे (६) "तमीश्वराणां परमं महेश्वरं तं दैवतानां परमञ्च दैवतम्। पतिं पतीनां परमं परस्ताद्विदाम देवं भुवनेशमीड्यम्॥"

---

A 3-7-10. B நான்-திருவ 47. C நாச்-திரு 8.3. D பெரியதிருமடல் 88,89.

ஈ—i (அந்தமில் புகழ்)j ஸ்ரீவைகுண்ட₂த்தில் புகழுக்கு அந்தமுண்டுபோலே.kஅப்ராக்ருத மான விக்₃ரஹத்தோடே, அவ்வடிவை அநுப₄விக்கப் பாங்கான கரணங்களையுடைய ராய்க்கொண்டு கிட்டினார்க்கு k₂ அநுப₄வயோக்₃யனுயிருக்கையாலே புகழ் ஸாவதி₄யா யிருக்கும் அங்கு; இங்கு lAஆளியும்கோளரியும் பொன்மணியும் முத்தமும் பூமரமுமான வற்றுக்குத் m தன்னைக் கொடுத்துக்கொண்டு நிற்கையாலே, புகழ்க்கு அந்தமில்லை யிறே. n ஆக, n₂1.“समस्तकल्याणगुणात्मकोऽसौ” (ஸமஸ்தகல்யாணகு₃ணாத்மகோऽஸௌ) என்றபடி. o (காரெழில்) || (ஶ்யாமளமான வடிவழகு). p நிர்க்கு₃ணனுனாலும் விட

அ—வாசமற்றுரானுமெய்தாமே மன்னும் வறுநிலத்து வாளாங்குகுத்ததுபோல்” ந ப₄வதீதி ப₄ாவ:. நநு-அப்ராக்ருதபுஷ்பஸ்ய க்₃லாநிஸம்ப₄வநா அஸ்தி கிம்? இதி சேந்ந 2. “சின்மயை: ஸ்வப்ரகா ஶைஶ்ச” இதிப்ரகாரேண சிந்மயத்வாத்₃ப₄க₃வதஶ்சரணாரவிந்த₃ப்ராப்த்யா க்₃லாநிஸம்ப₄வாத். i,|“திருவேங்கடத்து-அந்தமில்புகழ்” இதி பத₃ஸங்க₃திம் ஹ்ருதி₃ நித₄ாயாஹ (ஸ்ரீவைகுண்ட₂த் தில் புகழ்க்கு இதி) k அதெப்படி? என்ன; உபபாதி₃க்கிறர் (அப்ராக்ருதமான இத்யாதி₃) k,k₂(அப்ராக்ருதமான விக்₃ரஹத்தோடே-அநுப₄வயோக்₃யனுயிருக்கையாலே) என்று அந்வயிப்பது. l (ஆளியும் கோளரியும் இதி) ஆளி - ஶரப₄ம். ஸ து ஸஶுண்ட₃ம்ருக₃விஶேஷ:. கோளரி- மிடுக்கையுடைய ஸிம்ஹம். பொன்மணி - ஶ்லாக்₄யமான ரத்நம். 3. “இந்த்₃ரியாணும் ஹி ஸர்வேஷாம் யத்₃யேகம் க்ஷரதிந்த்₃ரியம் | தேநாஸ்ய க்ஷரதி ப்ரஜ்ஞா த்₃ருதே: பாத்₃ராதி₃வோத₃கம்||” 4. “அப்ராணிமத்ஸு ஸ்வல்பா ஸா ஸ்த₂ாவரேஷு ததோऽதி₄கா | ஸரீஸ்ருபேஷு தேப்₄யோऽபி அதிஶக்த்யா பததரிஷு ||” இத்யாதி₃. m (தன்னைக் கொடுத்துக்கொண்டு நிற்கையாலே இதி) அத்ர - B“வைப்பன் மணிவிளக்கா மாமதியை மாலுக்கென்றெப்பொழுதும் கைநீட்டும் யானை” C “புகுமதத்தால் வாய்பூசிக் கீழ்தாழ்ந்தருவி யுகுமதத்தால் கால்கழுவிக் கையால் மிகுமதத்தேன் விண்டமலர்கொண்டு விறல்வேங்கடவனையே கண்டுவணங்கும் களிறு” D “பெருகுமதவேழம் மாப்பிடிக்கு முன்னின்று இருகணிளமூங்கில்வாங்கி அருகிருந்த தேன்கலந்துநீட்டும் திருவேங்கடம்” இத்யாதி₃ப்ரகாரேண-தீ₃பாரோபணாதி₃ஸகலவித₄கைங்கர்யமபி தை: ஸ்வீகரோதீதி த்₃ரஷ்டவ்யம். n ப₂லிதம் (ஆக இத்யாதி₃) o (காரெழில்) காரென்று-மேக₄மாய். மேக₄ம்போன்றிருக்கிற வடி

ஜீ—பத₃ச்சேர்த்தியால் வ்யாவ்ருத்தி (ஸ்ரீவைகுண்ட₂த்தில் இத்யாதி₃) k அதெப்படி? என்ன (அப்ராக்ருத இத்யாதி₃) k,k₂(அப்ராக்ருதமான விக்₃ரஹத்தோடே) என்றதுக்கு (அநுப₄வ யோக்₃யனுய்) என்றத்தோடே அந்வயம். l (ஆளியும் இத்யாதி₃) ஆளி - யாளி. ஶரப₄ இத்யர்த்த₂:. கோளரி - மிடுக்கையுடைய ஸிம்ஹம். பொன்மணி - ஶ்லாக்₄யரத்நம். முத்தம் - முத்து. பூமரம்-புஷ்பவ்ருக்ஷம். n ப₂லிதம் (ஆக இத்யாதி₃) n₂ ஷஷ்டே₂ऽம்ஶே பஞ்சமே (ஸமஸ்த கல்யாண இத்யாதி₃) பூர்வமேவ லிகி₂தம். /“அத்ர ஆத்மஶப்₃த₃: ஸ்வப₄ாவ வசந:. இச்ச₂ா க்₃ருஹீதாபி₄மதோருதே₃ஹ: - நித்யேச்ச₂யா க்₃ருஹீதாபி₄மதபூஜ்யதே₃ஹ:; யத்₃வா ஜக₃த்₃தி₄ தாய அவதாரகாலே இச்ச₂யா க்₃ருஹீததத்தத்கார்யாபி₄மதாநேகதே₃ஹ:” இத்யர்த்த₂:. காரெழி லண்ணல் - ஶ்யாமமான அழகையுடைய ஸர்வாதி₄கனென்னுதல்; காரென்று - மேக₄மாய்,

ப்ர—n₂1.(அந்தமில் புகழ்) वैष्णवे पुराणे षष्ठेंशे पञ्चमे परविद्योपदेशप्रकरणे—“समस्तकल्याण-गुणात्मकोऽसौ स्वशक्तिलेशादूधृतभूतसर्गः। इच्छागृहीताभिमतोरुदेहस्संसाधिताशेषजगद्धितोऽसौ ॥८४॥” /“अत्र आत्मशब्दः स्वभाववचनः, नित्येच्छया गृहीताभिमतपूज्यदेहः; यद्वा जगद्धिताय अवतारकालेष्विच्छया गृहीततत्तत्कार्याभिमतानेकदेहः”

A நான்-திருவ 47. B நான்-திருவ 46. C மூன்-திருவ 70. D இர-திருவ 75. || ( ) இவ் வடைப்பிலுள்ளது பல ஸ்ரீகோஶங்களில்லை. /ஸ்ரீவிஷ்ணுசித்தீய( எங்களாழ்வான்) வ்யாக்₂யானம்.

3. அண்ணல் மாய னணிகொள்செந் தாமரைக்
கண்ணன் செங்கனி வாய்க்கரு மாணிக்கம்
தெண்ணி றைச்சுனை நீர்த்திரு வேங்கடத்(து)
எண்ணில் தொல்புகழ் வானவ ரீசனே.

---

ஆ— 3. அவ:— (அண்ணல்) ஏவம்ரூபமான ஸ்வாநுப$_4$வரூப ஸம்ருத்$_3$தி$_4$யைத் தந்தருளுமோ? என்னில்; நித்ய நிரவத்$_3$ய நிரதிஶயௌஜ்ஜ்வல்ய ஸௌந்த$_3$ர்யாத்$_3$யஸங்க்$_2$யேய கல்யாணகு$_3$ணக$_3$ண மஹோத$_3$தி$_4$யாயிருந்த தன்னை அஸங்க்$_2$யேயரான நித்யஸித்$_3$த$_4$புருஷர்கள் எல்லாருக்கும் பு$_4$ஜிக்கக் கொடுத்துக்கொண்டிருக்கிறுனொரு பரமோத$_3$ாரனல்லனோ அவன், ஆதலால் உங்களுக்கும் தன்னை பு$_4$ஜிக்கத் தந்தருளும் என்கிறுர். 3.

---

ஈ—வொண்ணுததாயிற்று வடிவழகிருப்பது. q (அண்ணல்) r வடிவழகு இல்லையாகிலும் விடவொண்ணுதபடியாயிற்று ப்ராப்தியிருப்பது. s "வானவர் வானவர்கோனொடும் சிந்துபூமகிழும் திருவேங்கடத்து அந்தமில் புகழ்க்காரெழில் அண்ணல் - எந்தை தந்தை தந்தை தந்தை தந்தைக்கும் முந்தை; ஆனபின்பு அங்கே வழுவிலா அடிமை செய்யவேண்டும் நாம்" என்கிறுர். 2.

---

அ—வழகையுடையவன் என்றபடி. p பூர்வப்ரதிகோடியாக ப$_4$ாவம் (நிர்க்கு$_3$ணனாகிலும் இத்யாதி$_3$) q,r "அண்ணல்" என்றதுக்கு ப$_4$ாவம் (வடிவழகில்லையாகிலும் இத்யாதி$_3$) s அஸ்யாம் க$_3$ாத$_2$ாயாம் க்ரியாபத$_3$ாப$_4$ாவாத் குளகத்வேந பூர்வக$_3$ாத$_2$ாக்ரியயா யோஜநாம் த$_3$ர்ஶயதி (வானவர் வானவர்கோனொடும் இத்யாதி$_3$) b,q "அண்ணல், முந்தை" என்றதிலே 1. "அகி$_2$லஜக$_3$த்ஸ்வாமிந் அஸ்மத்ஸ்வாமிந்" இதிவத் பௌநருக்த்ய பரிஹாரம் கண்டுகொள்வது. b "(முந்தை) - நமக்கு உத்பாத$_3$க பாரம்பர்யத்திலே ப்ரத$_2$மோத்பாத$_3$கனான ப$_3$ந்த$_4$த்தையுடையவன். சிந்து-தூவின, மகிழும்-ஸ்வஸ்பர்ஶத்தாலே விகஸிதமாம்படியான. கார் - ஶ்யாமமான. அண்ணல்-ஸர்வாதி$_4$கன்; கு$_3$ணத்தாலும் அழகாலும் ஸர்வாதி$_4$கன் என்று கருத்து" என்று உரையிலே. 2.

---

ஜீ—மேக$_4$ம் போன்ற வடிவழகையுடையவன் என்னுதல். p பூர்வப்ரதிகோடியாக ப$_4$ாவம் (நிர்க்கு$_3$ணனாகிலும் இத்யாதி$_3$) q,r "அண்ணல்" என்றதுக்கு ப$_4$ாவம் (வடிவழகில்லையாகிலும் இத்யாதி$_3$) s பாட்டுக்கு அந்வயம் காட்டுகிறுர் (வானவர் வானவர் இத்யாதி$_3$) b,q "அண்ணல் முந்தை" என்றதுக்கு - 1. "அகி$_1$லஜக$_3$த்ஸ்வாமிந் அஸ்மத்ஸ்வாமிந்" இதிவத் பௌநருக்த்ய பரிஹாரம் கண்டுகொள்வது. 2.

---

ஆதே$_3$— இரண்டாம் பாட்டு. அஸ்மத்குலநாத$_2$னுகையாலே பரமஶேஷியாய், நித்யஸூரிகள் ஸ்ரீஸேநாபதியாழ்வானோடே கூட அப்ராக்ருதமான புஷ்பங்களைக் கொண்டுவந்து ஸௌஶீல்யகு$_3$ணநுஸந்த$_4$ாநத்தாலே ஶிதி$_2$லராய், க்ரமத்திலே பரிமாறமாட்டாதே அடைவுகெட்டுச் சிந்த, அந்தப் புஷ்பங்கள் தன்னிலத்தில் போலே செவ்விபெற்று விகஸிதமாகாநிற்கும் திருவேங்கடத்திலே நிற்கிறுன் அநந்த கல்யாணகு$_3$ணுத்மகனான வடிவழகிய ஸ்வாமியாகையாலே வழுவிலா அடிமை செய்யவேண்டும் நாம் என்கிறுர் "எந்தை தந்தை" இத்யாதி$_3$யால். 2.

ஒ— அவ:— மூன்ரும் பாட்டில் — ஏவம்வித₄மான ஸ்வாநுப₄வரூப ஸம்ருத்₃தி₄யைத் தந்தருளுமோ ? என்னில் ; நிரதிஶயஸௌந்த₃ர்யத்தையும் எண்ணில்லாத கல்யாணகு₃ணங்களையுமுடைய தன்னை அஸங்க்₂யேயரான நித்யஸித்₃த₄புருஷர்கள் எல்லார்க்கும் பு₄ஜிக்கக் கொடுத்துக்கொண்டிருக்கிருெருரு பரமோதா₃ரனல்லனோ அவன்; ஆதலால் நமக்குத் தன்னை பு₄ஜிக்கத் தரும் என்கிருர்.

வ்யா:— (மாயன் என்று தொடங்கி) திருமலையில் வந்த ஐஶ்வர்யத்திஞலே அத்யாஶ்சர்யபூ₄தனுய், தானே ஆப₄ரணமாம்படியான அழகிய திருக்கண்களை யுடையான். (தெண்ணிறை என்று தொடங்கி) தெளிந்து நிறைந்திருந்துள்ள நீரை யுடைத்தான சுனைகளாலே அலங்க்ருதமான திருமலையிலே. 3.

---

ப— 3. அவ:— அநந்தரம், இப்படி விக்₃ரஹாதி₃ வைலக்ஷண்யத்தையுடையவன் நித்யஸூரி ஸேவ்யன் என்கிருர்.

**அண்ணல்**—வடிவு தன்னிலே ஸ்வாமி என்று தோற்றும்படியாய், **மாயன்**—(தத₃நுரூபமான) ஆஶ்சர்யகு₃ணவிபூ₄தியுக்தனுய், **அணி**—(அந்த ஐஶ்வர்ய ஸூசகமான) அழகை, **கொள்**—உடைய, **செந்தாமரைக்கண்ணன்**—புண்ட₃ரீகாக்ஷனுய், (அப்பார்வைக்குத் தோற்றுரை ஸாந்த்வநம் பண்ணுகைக்கு உறுப்பாய்), **செம்**—சிவந்த, **கனி**—கனிபோன்ற, **வாய்**—திருப்பவளத்தையுடையனுய், **கருமாணிக்கம்**—(இவ்வவயவஶோபை₄யிலே அகப்பட்டாரை அநுப₄விப்பிக்கைக்கு) நீலரத்நம்போலே உஜ்ஜ்வலமான விக்₃ரஹத்தையுடையவன், **தெள்** — (அவன்தன் நிறம்போலே) தெளிந்து ப்ரகாஶமான, / **நிறம்** — நிறத்தையுடைய, **சுனை நீர்** — சுனைநீரை யுடைத்தான, **திருவேங்கடத்து** — திருமலையிலே நிற்கையாலே, **எண்ணில்** — எண்ணிறந்து, **தொல்**—ஸ்வாபா₄விகமான, **புகழ்**—கு₃ணப்ரதை₂யையுடையவனுய், **வானவர்** — (அப்புகழை அநுப₄விக்க வந்த) பரமபத₃வாஸிகளுக்கு, **ஈசன்**—(பே₄ாக₃ப்ரதா₃நம்பண்ணி நிற்கிற ஏற்றத்தையுடைய) ஸ்வாமியானவன்.

**அண்ணல்**—குறிஞ்சிநிலத்துத் தலைவனுகவுமாம். 3.

---

இ— அவ:— மூன்ரும் பாட்டில் — நீர் அநுப₄விக்கப் பாரியாநின்றீர்; இது உமக்கு ஸித்₃தி₄க்குமோ? என்னில்; கண்ணழிவற்ற ருசியையுடைய நித்ய ஸித்₃த₄ர்க்குத் தன்னைக் கொடுத்துக்கொடு நிற்கிறவன் நமக்குத் தரும் என்கிருர்.

வ்யா:— **(அண்ணல்)** குறிஞ்சி நிலத்துக்கு நிர்வாஹகனென்னுதல், ஸ்வாமித்வத்தைச் சொல்லுதல். **(மாயன்)** திருமலையிலே நிலையாலே அத்யாஶ்சர்யமான ஐஶ்வர்யத்தையுடையவன். **(அணிகொள் இத்யாதி₃)** அந்த ஐஶ்வர்யஸூசகமான திருக்கண்களையுடையவன். தனக்குத்தானே ஆப₄ரணமான திருக்கண்கள். **(செங்கனிவாய்)** அந்நோக்கில் அகப்பட்டாரைத் துவக்கும் முறுவல். **(கருமாணிக்கம்)** ஸ்மிதத்திலே துவக்குப்பட்டாரைக்கொண்டு மூழக்கும் ஶ்ரமஹரமான

---



/ இங்கு உரையின் பாட₂ம் வேறுபடுவது காணத்தக்கது.

**இ**—வடிவு. **(தெண்ணிறை இத்யாதி₃)** தெளிந்து நிறைந்த சுனைகளாலே அலங்க்ருதமான திருமலையிலே. வடிவேயன்றிக்கே திருமலையும் ஶ்ரமஹரமாயிருக்கிறபடி. **(எண்ணில் தொல்புகழ்)** எண்ணிறந்த ஸ்வாபா₄விகமான கு₃ணங்களையுடையவன். **1. "யதா₂ ரத்நாநி ஜலதே₄:" (யதா₂ ரத்நாநி ஜலதே₄:). (வானவர் ஈசனே)** அக்கு₃ணங்களுக்குத் தோற்று அடிமைசெய்கிற நித்யஸூரிகளுடைய ஸத்தாதி₃களை நடத்துகிறவன். கண்ணழிவற்ற ருசியுடையாரைத் தன்னை அனுப₄விப்பிக்கும் என்கை. 3.

---

**ஈ— அவ:— மூன்றும் பாட்டு. a "நாம் இங்ஙனே அடிமைசெய்யவேணும்" என்று மநோரதி₂க்குமிதுவேயோ வேண்டுவது, அவன்தான் நமக்கு அநுப₄வஸம்ருத்₃தி₄யைத் தருமோ? என்ன; a₂ நிரபேக்ஷரானவர்களுக்குத் தன்னைக் கொடுத்துக்கொண்டிருக்கிறவன், ஸாபேக்ஷரான நமக்குத் தரச் சொல்லவேணுமோ? என்கிறார்.**

வ்யா:— (அண்ணல்) b **குறிஞ்சிநிலத்தில் தலைமகன் என்னுதல், ஸர்வஸ்வாமி என்னுதல்.** (மாயன்) c **ஸௌந்த₃ர்யஶீலாதி₃களால் ஆஶ்சர்யபூ₄தன். அவற்றில் ஒரு** d **அம்மான்பொடி சொல்லிக்காணும் என்ன** (e அணிகொள் செந்தாமரைக்

---

**அ**— மூன்றும் பாட்டு. (அண்ணல் இத்யாதி₃) a நித்யஸூரிகளுக்கு அநுபா₄வ்யமான ஆகாரம் - கீழ்ப்பாட்டுக்கும் இப்பாட்டுக்கும் அவிஶிஷ்டமாகையாலே புநருக்தமென்று விவக்ஷித்து, அதிற்காட்டில் இதுக்குண்டான ஶங்காபரிஹாரங்களை வ்யாவ்ருத்தமாக அருளிச்செய்கிறார் (நாம் இங்ஙனே இத்யாதி₃) (நாம் இங்ஙனே அடிமைசெய்யவேணுமென்று) இதி ஶங்கா-தடஸ்த₂ஶங்கா. அத₂ாப்யேவம் ஶங்கோத்தரயோர் பா₄வோ த்₃ரஷ்டவ்ய:—பூர்வகா₃தா₂யாம் ஸூரிஸமாஶ்ரயணீயதாபி₄தா₄நாத் ஸூரிஷ்வேவ தஸ்ய பக்ஷபாதோ ப₄வேத், தஸ்மாத₃ஸ்மாகம் கைங்கர்யஸம்ருத்₃தி₄ம் த₃ாஸ்யதி கிம்? இதி ஶங்கிதுர் பா₄வ:; க்₄ருதகு₃ட₃பாயஸாதி₃நா அதித்ருப்தாநபி புநரபி "பே₄ாக்தவ்யம், பே₄ாக்தவ்யம்" இத்யந்நத₃ாநஶீல: கஶ்சித் பரமோத₃ார: தத்ப்ரதீ₃யமாநாந்நேந விநா ஜீவிதுமஶக்தஸ்யாதிக்ஷுத₄ார்த்தஸ்ய அந்நம் ந த₃ாஸ்யதி கிம்? தத்₃வத் பரிபூர்ணாநாமபி ஸ்வாநுப₄வமநுக்ஷணம் த₃த₃தீ₃ஶ்வரோऽஸ்மாகம் ந த₃ாஸ்யதி கிம்? இத்யுத்தரஸ்ய பா₄வ:. a₂ (நிரபேக்ஷரானவர்களுக்கு) என்றது ப₄க₃வத₃நுப₄வரஸபூர்த்தியைப் பற்ற. b (குறிஞ்சிநிலத்தில் தலைமகன்) அதாவது - திருமலைக்கு ஸ்வாமியானவன் என்றபடி. மலைச்சார்வு குறிஞ்சிநிலமாகையாலே, தாத்₃ருஶதே₃ஶம் திருமலையாகையாலே தத₃தி₄பதி என்றபடி.கைங்கர்யத்துக்காகக் கூடுமிடமாகையாலே,திருமலையைக்குறிஞ்சி என்கிறது; A"கூடுமிடம் குறிஞ்சி" இதி ப்ரகாரேண ஸம்ஶ்லேஷோசிததே₃ஶாதி₄பதித்வாபி₄தா₄நஸ்ய ஸம்ஶ்லேஷைகஸ்வபா₄வத்வே ஹ்ருத₃யம். c (ஸௌந்த₃ர்யஶீலாதி₃களால் இதி) "அணிகொள்" இத்யாரப்₄ய, "வேங்கடத்தெண்ணில் தொல்புகழ்" இத்யந்தம் விவக்ஷிதம். d அம்மான்பொடியாவது - சிலரை வஶீகரிக்கைக்காக அவர்கள் மேலே ஔஷத₄சூர்ணத்தைத் தூவினால், அவர்கள் "அம்மா

---

**ஜீ**— மூன்றும் பாட்டு. (அண்ணல் இத்யாதி₃) a "வானவர் ஈசனே" என்றத்தைப் பற்ற அவதாரிகை (நாம் இங்ஙனே இத்யாதி₃) a₂ நிரபேக்ஷர் என்றது - ப₄க₃வத₃நுப₄வரஸபூர்த்தியைப் பற்ற. b (குறிஞ்சிநிலத்தில் தலைமகன்) மலைச்சார்வு-குறிஞ்சி நிலமாகையாலே, ஏதாத்₃ருஶதே₃ஶமான திருமலைக்கு ஸ்வாமியானவன் என்றபடி. c (ஸௌந்த₃ர்ய ஶீலாதி₃களால் இதி) "அணிகொள்" இத்யாரப்₄ய, "எண்ணில் தொல்புகழ்" இத்யந்தம் விவக்ஷிதம். d அம்மான்பொடி - வஶீகரண ஸாத₄நமான மூலிகாசூர்ணம். அதாவது - கள்ளர் பா₃லர்களை வஶீகரிக்

---

A குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை எனும் ஐவகை நிலங்களுக்குரிய ஒழுக்கம் முறையே கூடல், இருத்தல், ஊடல், இரங்கல், பிரிதல் என்பது தமிழர் மரபு.

**ச—கண்ணன்) f "இக்கண்ணழகுடையவனுக்கு வேருெரு ஒப்பனைவேண்டா" என்னும்படியிருப்பதாய், தனக்குத் தானே ஆப₄ரணமாய், விகாஸம் செவ்வி குளிர்த்தி நாற்றங்களினாலே தாமரையை f₂ ஒருவகைக்கு ஒப்பாம்படி சொல்லலாயிருக்கிற கண்ணழகையுடையவன். g முதலுறவு பண்ணும் கண்ணைச் சொல்லுகிறது.** (செங்கனிவாய்) **அந்நோக்குக்குத் தப்பினார்க்கும் தப்பவொண்ணாதபடியாயிற்று ஸ்மிதமிருப்பது. h முறுவலாலேயாயிற்று இவரை எழுதிக்கொண்டது.** (கருமாணிக்கம்) **அந்த ஸ்மிதத்திலே அகப்பட்டாரை மீளாதபடி ஆழங்காற்படுத்தும் வடிவழகைச்**

---

அ—னம்மான்" என்று அழைத்துக்கொண்டு தூவினவர்கள்பின்னே செல்லுவர்கள் என்று ப்ரஸித்₃த₄மிறே; தஸ்மாத் கௌ₃ணாவ்ருத்த்யாத்ர ஆஶ்சர்யம் யத₂ா தத₂ா வஶீகர்த்ருஸௌந்த₃ர்யாதி₃கம் அபி₄தீ₄யதே. e அணிகொள் - அணியாய்க்கொண்டிருக்கிற இதி ஶப்₃த₃ார்த்த₂:. f கஸ்ய ஆப₄ரணத்வேந வர்த்தத இத்யாகாங்க்ஷாயாம், விக்₃ரஹமாத்ரஸ்ய ஸ்வஸ்ய வேதி ப்ரதியோகி₃பே₄தே₃ந அர்த்த₂பே₄த₃ம் ஹ்ருதி₃ நித₄ாய அர்த்த₂த்₃வயஞ்ச ஸமுச்சித்யாஹ (இக்கண்ணழகுடையவனுக்கு இதி) 1. "**தஸ்ய யத₂ா கப்யாஸம்**" இத்யாதி₃. f₂ (ஒருவகைக்கு ஒப்பாம்படி இதி) அநேந - "ஸௌந்த₃ர்யஶீலாதி₃களால் ஆஶ்சர்யபூ₄தன்" (c) இத்யநேந விரோத₄: பரிஹ்ரியதே. r யத்₃வா, "அணிகொள்" என்று - ஆப₄ரணங்களை ஜயித்து அத்தைத் தன்னுகையும், அந்யநிரபேக்ஷமாக அலங்காரத்தையுடைத்தாயிருக்கையும். f இவ்விரண்டையும் தந்த்ரேண அருளிச்செய்கிறார் (இக்கண்ணழகு இத்யாதி₃) g அல்லாத அவயவங்களுக்கு முன்னே திருக்கண்களைச் சொல்லுகைக்கு நியாமகம் ஏதென்ன; ஒருவன் ஒருவனோடு கலக்கும்போது த்₃ருஷ்டிப₃ந்த₄ம் முன்னாகவாயிருக்குமிறே; ஆகையாலே என்று விவக்ஷித்து அருளிச்செய்கிறார் (முதலுறவு என்று தொடங்கி) சக்ஷூராக₃: ப்ரத₂ம:, தன்னுடைய செல்லாமையைக் காட்டி எதிர்த்தலையை வஶீகரிக்கிறது என்றபடி. h "செங்கனிவாய் - அண்ணல்" இதி யோஜநாம் ஹ்ருதி₃ நித₄ாயாஹ (முறுவலாலேயாயிற்று இதி) இத₃ஞ்சோபலக்ஷணம், ஏதேந அவயவஸௌந்த₃ர்யாணாம் ப்ரத்யேகமநந்யார்ஹத்வகரத்வம் ஸூச்யதே. "'செந்தாமரைக் கண்ணன், செங்கனிவாய்' என்றது—2. '**லோசநாப்₄யாம் பிப₃ந்நிவ—வசஸா ஸாந்த்வயித்வைநம்**' என்றாற்போலேயிருக்கிறது" என்று அருளிச்செய்வர். h முறுவலாலே என்றது-A "அவ்வாயன்றி யானறியேன்" என்றத்தைப்பற்ற. 3. "**யோऽஹ்ந: க்ஷயே வ்ரஜமநந்தஸக₂: பரீதோ கோ₃பைர் க₃வாம் கு₃ரரஜஸ்பு₂ரிதாளகஸ்ரக் । வேணும் க்வணந் ஸ்மிதகடாக்ஷநிரீக்ஷணேந சித்தம்**

---

ஜீ—கைக்காக அவர்கள்மேலே "அம்மான்" என்று சொல்லி ஒரு பொடிவிஶேஷத்தைத் தூவினால் அந்த பா₃லர்கள் கள்ளர்பின்னே "அம்மானம்மான்" என்று சொல்லிக்கொண்டு போவர்கள்; அந்தப்பொடி என்றபடி. அப்படியே ஆஶ்சர்யமாக வஶீகரிக்கும் ஸௌந்த₃ர்யாதி₃களிலே ஒன்றைச் சொல்லும் என்றபடி. e (அணி e₂ கொள் செந்தாமரைக்கண்ணன்) e₂ கொள்கை - உடைத்தாகை. ஆப₄ரணமாகக்கொண்டிருக்கிற சிவந்த தாமரை போன்ற கண்ணையுடையவன். "அணிகொள்" என்று - வடிவுக்கெல்லாம் ஆப₄ரணமாயிருக்கிற என்னுதல், தனக்குத் தானே ஆப₄ரணமாயிருக்கிற என்னுதல். f உப₄யத்தையும் தந்த்ரேண அருளிச்செய்கிறார் (இக்கண்ணழகு இத்யாதி₃) g முற்படத் திருக்கண்களைச் சொன்னதுக்கு பா₄வம் (முதலுறவு இத்யாதி₃) த்₃ருஷ்டிப₃ந்த₄ம் முன்னாகவிறே கலப்பது என்று கருத்து. h "செங்கனிவாய் - அண்ணல்" என்று அந்வயித்து பா₄வம் (முறுவலாலே இத்யாதி₃) "'செந்தாமரைக்கண்ணன், செங்கனிவாய்' என்றவிடத்திலே—2. '**லோசநாப்₄யாம் பிப₃ந்நிவ — வசஸா ஸாந்த்வயித்வைநம்**' என்றாற்போலேயிருக்கிறது" என்று அருளிச்செய்வர். சிவந்த கனிபோன்ற திருப்பவளத்தையும்,

---

A 8-7-7.

ஈ— சொல்லுகிறது. i (தெண்ணிறைச் சுனைநீர்த் திருவேங்கடத்து) j தெளிந்து நிறைந் திருந்துள்ள நீரையுடைய சுனையையுடைய திருமலையிலே. k வடிவேயன்றிக்கே திருமலையும் ஸ்ரமஹரமாயிருக்கிறபடி. l "அணிகொள் செந்தாமரைக் கண்ணன்" என்றத்தோடு, "செங்கனிவாய்" என்றத்தோடு, "கருமாணிக்கம்" என்றத்தோடு, "தெண்ணிறைச் சுனைநீர்" என்றத்தோடு வாசியற்றிருக்கிறதாயிற்று இவர்க்கு. m அதுவும் அந்நிலத்திலே உள்ளதொன்றாகையாலே. n (எண்ணில் தொல்புகழ்) o1. "यथा रत्नानि जलधेरसंख्येयानि पुत्रक!। तथा गुणा ह्यनन्तस्य" (யத₂ா ரத்நாநி ஜலதே₄: அஸங்க்₂யேயாநி புத்ரக!। தத₂ா கு₃ணா ஹ்யநந்தஸ்ய) என்கிறபடியே அஸங்க்₂யேயமாய், ஸ்வாப₄ாவிகமான கு₃ணங்களையுடைய. p (வானவர் ஈசனே) q கு₃ணங்களை அநுப₄விப்பித்து நித்யஸூரிகளுடைய ஸத்தையை நிர்வஹித்துக்கொண்டு போருகிறவன். r கண்ணழிவற்ற ருசியுடையாரைத் தன்னை அநுப₄விப்பிக்கும் என்கை. 3.

அ—க்ஷிணோதி தம்ருதே து கத₃ம் ப₄வேம ||" என்று கண்டுகொள்வது. i,j "தெண்ணிறை-நீர்-சுனை - திருவேங்கடத்து" இத்யந்வயம் ஹ்ருதி₃ நித₄யாஹ (தெளிந்து நிறைந்திருந்துள்ள இதி) k "கருமாணிக்கம்" என்கிற கீழ்ப்பத₃த்தையுங்கூட்டித் தாத்பர்யம் (வடிவே இத்யாதி₃) l விக்₃ரஹாநுப₄வம் விஹாய ஸராம்ஸி கிமர்த்த₂மநுப₄வதி? இத்யத்ராஹ (அணிகொள் இத்யாதி₃) 2. "உத்பு₂ல்ல பங்கஜ தடாகமிவோபயாதி". m அது எத்தாலே என்ன (அதுவும் இத்யாதி₃) "அந்தமில்புகழ்"(2) இத்யத்ர ப்ரத்யேகமேகைககு₃ணஸ்யைவ அநவதி₄த்வமுச்யதே; "எண்ணில் தொல்புகழ்" இத்யத்ர - தாத்₃ருஸாநாம் கு₃ணாநாம் அஸங்க்₂யேயத்வமுச்யதே இத்யதோ ந-பௌநருக்த்யம். n,o "எண்ணில்" என்றதுக்கு ப்ரமாணம் (யதே₂த்யாதி₃) n,p,q "எண்ணில் தொல் புகழ் - வானவர் ஈசன்" இதி பத₃ஸங்க₃திம் ஹ்ருதி₃ நித₄யாஹ (கு₃ணங்களை அநுப₄விப்பித்து இதி) r அவதாரிகாயாம் தடஸ்த₂ஶங்காயா உத்தரத்வேநோக்தம் ப₄ாவம் க₃ாதே₂ாபந்யாஸாந்தேऽபி பராம்ருஶ்ய, தது₃பரி ஸாபேக்ஷாணாம் ஸர்வேஷாம் ஸ்வாநுப₄வம் த₃த₃ாதி கிம்? ஸ்ரீவேங்கடநாத₂ாநுப₄வகைங்கர்யேச்ச₂வ: கியந்தோ தே₃ஶாந்தரஸ்த₂ாத்₃ருஶ்யந்தே இத்யத்ராஹ (கண்ணழிவற்ற இதி) ஏதத்₃வாக்யம் அவதாரிகோக்தப₄ாவாபேக்ஷயா ப₄ாவாந்தரபரம் இதி ச வத₃ந்தி. அவதாரிகையிலே ஸௌலப்₄யபரமாக அருளிச்செய்து, இங்கே - பரத்வபரமாக அருளிச்செய்தது ப₄ாவாந்தரம். இப்பக்ஷத்தில் மேலிற்பாட்டோடு ஸங்க₃தி சேரும். ஏகார்த்த₂பக்ஷே—"அண்ணல்மாயன் இத்யாரப்₄ய, வானவர் ஈசனை-எந்தை தந்தை தந்தைக்கு-நாம் - ஒழிவில் காலமெல்லாம் உடனாய் மன்னி வழுவிலா அடிமைசெய்யவேண்டும்" இதி பூர்வேணாந்வய:. "அண்ணல் - வடிவுதன்னிலே ஸ்வாமி என்று தோற்றும்படியாய், மாயன் -

ஜீ—கறுத்த மாணிக்கம்போலே உஜ்ஜ்வலமான வடிவையும் உடையவன். i,j ஶப்₃த₃ார்த்த₂ம் (தெளிந்து இத்யாதி₃) "நிறை-நீர்-சுனை" இத்யந்வய:. k "கருமாணிக்கம்" என்றத்தையுங்கூட்டி ப₄ாவம் (வடிவே இத்யாதி₃) l விக்₃ரஹாநுப₄வத்தைவிட்டுச் சுனைகளை வர்ணிக்கிறதென்? என்ன (அணிகொள் இத்யாதி₃) m அது எத்தாலே என்ன (அதுவும் இத்யாதி₃) o "எண்ணில்" என்றதுக்கு ப்ரமாணம் (யதே₂த்யாதி₃) 1. "தத₂ா கு₃ணா ஹ்யநந்தஸ்ய அஸங்க்₂யேயா மஹாத்மந:" இதி மாத்ஸ்யபுராணே. n,p,q கீழ்ப்பத₃த்தையுங்கூட்டி ப₄ாவம் (கு₃ணங்களை இத்யாதி₃) r "வானவர் ஈசன்" என்றதுக்கு, அவதாரிகையிலே - ஸௌலப்₄யபரமாக அருளிச்செய்து இங்கே - பரத்வபரமாக அர்த்த₂ாந்தரம் (கண்ணழிவற்ற இத்யாதி₃) இப்பக்ஷத்தில் மேலில் பாட்டோடே

ப்ர—o1. (மூன்றாம் பாட்டு) (அண்ணல் மாயன் இத்யாதி₃) (எண்ணில் தொல்புகழ்) मात्स्ये पुराणे—"यथा रत्नानि जलधेरसंख्येयानि पुत्रक!। तथा गुणा ह्यनन्तस्य असंख्येया महात्मनः॥"

4. ஈசன் வானவர்க் கென்ப னென்றாலது
தேச மோதிரு வேங்கடத் தானுக்கு
நீச னேனிறை வொ(யொ)ன்றுமி லேனென்கட்
பாசம் வைத்த பரஞ்சுடர்ச் சோதிக்கே.

---

ஆ— 4. வ்யா:—(ஈசன்) ஸ்வரூபத்தினாலும், ஸ்வப₄ாவத்தினாலும், மற்றும் ஸர்வப்ரகாரத்தினாலும் "இனியில்லை" என்னும்படி தண்ணியனாயிருந்த என்பக்கலிலே ஸங்க₃த்தைப் பண்ணி, எனக்குத் தன்னை போ₄க்₃யமாகத் தந்தருளின மஹாகு₃ணத்தையுடைய அவனுக்கு, 'A அயர்வறும் அமரர்களுக்குத் தன்னைக்கொடுக்கும்' என்னும் இது ஓர் ஏற்றமோ ? என்கிறார். 4.

---

ஒ— அவ:— நாலாம் பாட்டில்—அதிநிக்ருஷ்டனான என்பக்கலிலே ஸங்க₃த்தைப் பண்ணினவனுக்கு 'Aஅயர்வறும் அமரர்களுக்கு ஆத்மதா₃நம் பண்ணினான்' என்னும் இது ஓர் ஏற்றமோ? என்கிறார்.

வ்யா:— (நீசனேன் நிறைவொன்றுமிலேன்) அநாத்மகு₃ணத்துக்கெல்லாம் ஓர் ஆகரமாய், ஆத்மகு₃ணக₃ந்த₄மில்லாதேன். (என்னென்று தொடங்கி) என் பக்கலிலே ஸங்க₃த்தைப்பண்ணி ஸம்ஶ்லேஷிக்கையாலே அத்யுஜ்ஜ்வலனாயிருக்கிறவனுக்கு. 4.

---

ப— 4 அவ:— அநந்தரம், நித்யஸூரிஸேவ்யத்வமாகிற ஆதி₄க்யம்—என்னை அங்கீ₂கரித்த அஶ்ஶீலத்தையுடையவனுக்குத் தேஜஸ்ஸோ ? என்கிறார்.

---

அ—தத₃நுரூபமான ஆஶ்சர்யகு₃ணவிபூ₄தியுக்தனாய். தெண்ணிறைச் சுனைநீர்-தெளிந்து ப்ரகாஶமான நிறத்தையுடைய சுனைநீரையுடைத்தான" (ப161) என்று பன்னீராயிரத்திலே. 3.

---

ஜீ—ஸங்க₃தி சேரும்; ஏகார்த்த₂மாதல். "அண்ணல் இத்யாரப்₄ய, வானவர் ஈசனை-எந்தை தந்தை தந்தைக்கு - வழுவிலா அடிமைசெய்யவேண்டும் நாம்" இதி பூர்வேணாந்வய:. 3.

---

ஆதே₃— மூன்றும் பாட்டு. ஸர்வஸ்வாமியாய், ஸௌந்த₃ர்யஶீலாதி₃களாலே ஆஶ்சர்யபூ₄தனாய் வேறொரு ஒப்பனை வேண்டாதே தனக்குத் தானே ஆப₄ரணமாய், விகாஸாதி₃களாலே தாமரையை ஒரு வகைக்கு ஒப்புச் சொல்லலாயிருக்கிற கண்ணழகையுடையவனாய், சிவந்து கனிந்த திருப்பவளத்தையும் உடையவனாய், இவற்றுக்குப் பரப₄ாக₃மான நீலரத்நம் போன்ற திருமேனியுடைய திருவேங்கடமுடையான்—தெளிந்து நிறைந்துள்ள நீரையுடைய சுனையையுடைய திருமலையிலே அஸங்க்₂யேயமாய், ஸ்வாப₄ாவிகமான கு₃ணங்களையுடையனாய், நித்யஸூரிகளை ஸ்வாநுப₄வத்தாலே நிர்வஹிக்குமவன் என்கிறார் " அண்ணல் " இத்யாதி₃யால். 3.

---

A 1-1-1.

**ப— வானவர்க்கு**—நித்யஸூரிகளுக்கு, **ஈசன்**—நிர்வாஹகன், **என்பன்**—என்று சொல்லாநிற்பன்; **என்றால்** — இப்படி சொன்னால், **நீசனேன்** — (ஹேயகுணங்களால் பூர்ணனாகையாலே) தண்ணியனாய், **நிறைவு**—(ஸத்குணங்களாலே வரும்) பூர்த்தி, **ஒன்றுமிலேன்** — ஒன்றுமின்றியேயிருக்கையாலே, **என்கண்** — (தன்னுடைய ஹேயப்ரத்யநீக கல்யாணைகதாநத்வத்துக்கு ப்ரதிபடஸ்வபாவனான) என் பக்கலிலே, **பாசம்**—நிரவதிக ஸங்கத்தை, **வைத்த**—வைத்து, **பரஞ்சுடர்**—(அத்தாலே) நிரதிசயஔஜ்ஜ்வல்யவிசிஷ்டமான, **சோதிக்கு**—தேஜோமய திவ்ய விக்ரஹயுக்தனாய், **திருவேங்கடத்தானுக்கு**—(இந்நீர்மைக்குச் சிரமஞ்செய்த) திருமலையில் நிலையையுடையவனானவனுக்கு, **அது** — (வானவர்க்கு ஈசனென்ற) அது, **தேசமோ**—தேஜஸ்ஸோ? 4.

---

**இ— அவ** :— நாலாம் பாட்டில் — அத்யந்தம் நீசனான என்பக்கலிலே ஸங்கத்தைப் பண்ணினவனுக்கு 'நித்யஸூரிகளுக்குத் தன்னைக்கொடுத்தான்' என்னும் இது ஓர் ஏற்றமோ? என்கிறார்.

வ்யா :— **(ஈசன் இத்யாதி)** நித்யஸூரிகளுக்கு நிர்வாஹகன் என்பன். **(என்றால் அது தேசமோ)** A அயர்வறும் அமரர்களதிபதி என்கை ஏற்றமன்றோ என்னில்; அது ஸ்ரீவைகுண்டநாதனுக்கு ஏற்றமத்தனைபோக்கித் திருவேங்கடமுடையானுக்குத் தேஜஸ்ஸோ? திருமலையையிட்டுத் தன்னை நிரூபிக்க வேண்டும்படி நிற்கிறவனுக்கும் இது ஓர் ஏற்றமோ? B கானமும் வானரமும் வேடுமான இவற்றுக்கு ஓலக்கங்கொடுக்கிறவனுக்கு நித்யஸூரிகளுக்கு ஓலக்கங்கொடுக்கை ஏற்றமோ? முடிசூடினவனைத் தட்டியிலேயிருந்தபடி சொல்லுகை ஏற்றமோ? திருவேங்கடமுடையானுக்கு ஏற்றமாக நீர் நினைத்ததென்? என்ன **(நீசனேன் இத்யாதி)** என்பக்கல் ஸங்கத்தைப் பண்ணின இதிறே. அநாத்மகுணங்களுக்கு ஆகரமாய், ஆத்மகுணகந்தமில்லாதவன். **(என்கண் பாசம் வைத்த)** வானவர்க்கு ஈசனானவன் என்கண் பாசம்வைத்தான். அவர்களோடு கலந்தது அவர்கள் ஸத்தைக்காக; என்னோடு கலந்தது தன் ஸத்தையுண்டாகைக்காக. "தன் விஷயத்திலே பாசமுண்டாம்படி என்னைப்பண்ணினான்" என்றும் சொல்லுவர். **(பரஞ்சுடர்ச் சோதிக்கே)** என்னோட்டைக் கலவியாலே அத்யுஜ்ஜ்வலனானபடி. ஸங்கத்தாலே கலந்தான் என்னுமிடம் வடிவிலே தோற்றியிருக்கை. 4.

---

**ஈ— அவ:— நாலாம் பாட்டு. a நித்யஸூரிகளுக்குத் தன்னைக் கொடுத்தவன் என்றார்-கீழ்; b அத்யந்தஹேயனான என்பக்கலிலே ஸங்கத்தைப் பண்ணினவனுக்கு**

---

**அ—** நாலாம் பாட்டு. (ஈசன் இத்யாதி) a "வானவர் ஈசன்" என்கையாலே (நித்யஸூரிகளுக்கு இத்யாதி) b "நீசன" என்று தொடங்கி - "திருவேங்கடத்தானுக்கு - வானவர்க்கு ஈச

---

**ஜீ—** நாலாம் பாட்டு. (ஈசன் இத்யாதி) a "வானவர் ஈசன்" என்றத்தைப்பற்ற (நித்யஸூரிகளுக்கு இத்யாதி) b "நீசனேன்" இத்யாரப்ய, "சோதியான - திருவேங்கடத்தானுக்கு -

A 1-1-1. B நான்-திருவ 47.

**ஈ—யென்று-அசித்தும் தன்னடையே வரும். e அவைதன்னை எடாதொழிவானென்? என்னில்,f அப்ராத$_4$ாந்யத்தாலும் g ப்ரகரணப$_3$லத்தாலும் தன்னடையே வரும் h என்னுமிடங்கொண்டும். சமயமென்கிறது-வ்யவஸ்தை$_2$களை. i அசித்தினுடைய பரிணாமாதி$_3$களையும் சேதநத்தினுடைய ஸுகி$_2$த்வ து$_3$:க்கி$_2$த்வங்களையும் நினைக்கிறது. j (தோய்விலன்) k சேதநாசேதநங்கள் "தான்" என்கிற சொல்லுக்குள்ளே அடங்கும்படி அவற்றோடே கலந்துநிற்கச்செய்தே, அவற்றினுடைய தோ$_3$ஷங்கள் தன்பக்கல் தட்டாதபடிநிற்கும். l சேதநர்க்கு அசித்$_3$க$_3$தமான பரிணாமாதி$_3$களில்லையேயாகிலும், அந்த அசித்ஸம்ஸர்க்க$_3$த்தாலே ஸுகி$_2$த்வ து$_3$:க்கி$_2$த்வங்கள் உண்டாகாநின்றதே; அப்படியே இச்சேதநாசேதநங்கள் எங்கும் புக்கு வ்யாபித்துநின்றால், தத்$_3$க$_3$ததோ$_3$ஷம்**

---

அ—ஆபி$_4$த$_4$ாநிகஸ்யைவ ந்யாய்யத்வாத் கிமர்த்த$_2$ம் நோபாத்தமித்யபி$_4$ப்ராயேண ஶங்கதே(அவை தன்னை இதி) fஆக்ஷேபகப$_3$ஹுத்வாத$_3$ாபி$_4$த$_4$ாநிகவத் பரிஸ்பு$_2$ரதீத்யபி$_4$ப்ராயேண அநுபாத்தம் இத்யபி$_4$ப்ராயேணாஹ (அப்ராத$_4$ாந்யத்தாலும் இதி) g (ப்ரகரணப$_3$லத்தாலும்) கீழே ஒக்க எடுத்து அநுப$_4$ாஷிக்கிற ப்ரகரணப$_3$லத்தாலும் என்றபடி. h (என்னுமிடங்கொண்டும்) என்ற ஶப்$_3$த$_3$த்துக்கு அர்த்த$_2$மில்லை. *i* வ்யவஸ்தை$_2$கள்தான் ஏதென்ன? (அசித்தினுடைய இத்யாதி$_3$) *j* "தோய்வு" என்று - ஸ்பர்ஶமாய், "இல்" என்று - இல்லாமையாய், சேதநாசேதநக$_3$தமான தோ$_3$ஷஸ்பர்ஶமில்லாதவன் என்றபடி. k (சேதநாசேதநங்கள் இதி) பா$_3$ல்யயௌவநாத்$_3$யவஸ்த$_2$ா யத$_2$ா ஜீவாத்மாநம் ந ஸ்ப்ருஶந்தி தத்$_3$வதி$_3$தி ப$_4$ாவ:. ப்ரஸக்தஸ்ய ஹி ப்ரதிஷேத$_4$:, தத்$_3$க$_3$ததோ$_3$ஷப்ரஸக்தியுண்டாயே பரிஹரிக்கவேணுமே என்னில்; ருமாக$_3$தகாஷ்ட$_2$வத் பாதகிஸம்ஸர்க்க$_3$ாத் பாதகித்வவத் வர ப்ரஸக்தியும் உண்டே என்றபடி. அசித்$_3$க$_3$ததோ$_3$ஷஸங்க்ரமணத்துக்கு "ருமாக$_3$தகாஷ்ட$_2$வத்" என்கிறது த்$_3$ருஷ்டாந்தம்; சேதநதோ$_3$ஷம் தத்ஸம்ஸர்க்க$_3$ாத் வரும் என்றதுக்கு த்$_3$ருஷ்டாந்தம் "பாதகிஸம்ஸர்க்க$_3$ாத் பாதகித்வவத்" என்றது. l தத்ர ஶங்கதே (சேதநர்க்கு இதி) "அவரவர் சமயந்தோறும் தோய்விலன்" என்று - தத்ஸம்ஸ்ருஷ்டனாயிருக்கச்செய்தேயும் அவற்றினுடைய தோ$_3$ஷம் தன்பக்கல் தட்டாதபடி நிற்குமென்று சொல்லி, இங்கு த்$_3$ருஷ்டாந்தமும் - "ஆவிசேர்" இத்யாதி$_3$யாலே மூலகாரர் அருளிச்செய்திருக்கச்செய்தேயும், (சேதநர்க்கு அசித்$_3$க$_3$தமான) இத்யாதி$_3$ வாக்யத்தாலே ஶங்கித்துப் பரிஹரிக்கிற வ்யாக்$_2$யாதாவுக்குக் கருத்து என்னென்னில்; சேதநாசேதந ஸம்ஸர்க்க$_3$க்ருதமான தத்தத்$_3$தோ$_3$ஷங்கள் இவனைக் கிட்டாது என்னுமத்தை த்$_3$ருஷ்டாந்த முகே$_2$ந ஸாதி$_4$க்கிறவிடத்தில் - ஶரீரக$_3$தமான பா$_3$ல்யயௌவநாதி$_3$ தோ$_3$ஷங்கள் ஈஶ்வரனுக்கு, ருமாக$_3$தகாஷ்ட$_2$வத் - உப்பளத்திலே விழுந்த மரம்போலே வாராதோவென்னில்; வேணுமாகில், தத்$_3$தோ$_3$ஷங்கள் வாராதென்று "ஆவிசேர்" இத்யாதி$_3$ த்$_3$ருஷ்டாந்தப$_3$லங்கொண்டு ஸாதி$_4$க்கிறார், இனி அந்த ஶரீரக$_3$தமான பா$_3$ல்யயௌவநாதி$_3$கள் ஆத்மாவுக்கு இல்லையேயாகிலும் அசித்ஸம்ஸர்க்க$_3$க்ருதமான ஸுகி$_2$த்வது$_3$:க்கி$_2$த்வங்களுண்டாகிறவோபாதி ஈஶ்வரனுக்கும் தோ$_3$ஷம் வாராதோ என்கிற ஶங்கையும் பரிஹரணீயமொன்றாகையாலே அது மூலகாரர்க்கு விவக்ஷிதமென்னுமிடந்தோற்ற அருளிச்செய்கிறார் என்று கருத்து. m அபஹதபாப்மத்வாதி$_3$கு$_3$ணயோகி$_3$தயா நித்யஶுத்$_3$த$_4$த்வாந்ந ஸ்ப்ருஶதீதி பரிஹரதி (அவற்றால்

---

ஜீ—(அவை தன்னை இத்யாதி$_3$) h(என்னுமிடங்கொண்டும்) என்ற ஶப்$_3$த$_3$த்துக்கு அர்த்த$_2$மில்லை. *i* வ்யவஸ்தை$_2$கள்தானேதென்ன (அசித்தினுடைய இத்யாதி$_3$) *j* "தோய்வு" என்று-ஸ்பர்ஶமாய், "இல்" என்று-இல்லாமையாய், சேதநாசேதநக$_3$தமான தோ$_3$ஷஸ்பர்ஶமில்லாதவன் என்றபடி. k (சேதநாசேதநங்கள் இதி) பா$_3$ல்யயௌவநாத்$_3$யவஸ்த$_2$ா யத$_2$ா ஜீவாத்மாநம் ந ஸ்ப்ருஶந்தி, தத்$_3$வத் இதி ப$_4$ாவ:. l தத்ர ஶங்கதே (சேதநர்க்கு இத்யாதி$_3$) n1. "ஸம்பே$_4$ாக$_3$ ப்ராப்திரிதி

ஈ-இவனை ஸ்பர்ஶியாதோ? என்றால்; m அவற்றால் அஸம்ஸ்ப்ருஷ்டனாயிருக்கும். n எல்லாம் செய்தாலும் இவற்றுக்கு ஸுகி₂த்வது₃:க்கி₂த்வங்களின்றியிலேயிருக்க, இவ்வசித் தோட்டைச் சேர்த்தியாலேயன்றோ உண்டாகிறது. o அப்படி இவனுக்கும் கூடாதோ? என்னில்; p கூடாது, அதுக்கடி-q ப்ரவேஶஹேது விஶேஷத்தாலே. r இவனைப்போலே கர்மமடியாகவன்றிக்கே அநுக்₃ரஹமடியாகவிறே அவனுக்கு இவற்றோட்டை ப்ரவேஶமிருப்பது. s சிறைக்கூடத்திலே சிறையனும் கிடந்தான், ராஜகுமாரனுமிருந்தான்; சிறையன் கர்மமடியாக ப்ரவேசிக்கையாலே து₃:க்க₂ஹேதுவாயிற்று, ராஜகுமாரன் இச்சை₂யாலே ப்ரவேசிக்கையாலே போ₄க₃ரூபமாயிருந்தது; t 1. "समानं वृक्षं परिषस्वजाते-अनश्नन्न्यः"

---

அ—அஸம்ஸ்ப்ருஷ்டனாயிருக்கும் இதி) n ஜீவஸ்யாபி ப்ரஜாபதி வாக்யே-அபஹதபாப்மத்வாதி₃ப்ரதிபாத₃நாத் 2. "ஸம்பத்₃யாவிர்ப₄வஸ் ஸ்வேந ஶப்₃தா₃த்" 3. "பரம் ஜ்யோதிருபஸம்பத்₃ய ஸ்வேந ரூபேணாபி₄நிஷ்பத்₃யதே" இத்யாதி₃ப்₄யஶ்ச ஜீவஸ்யாப்யபஹதபாப்மத்வாதெ₃ள ப்ரஸித்₃தே₄ ஸத்யபி ஹி ஸுகி₂த்வ து₃:க்கி₂த்வாத₃யோ ப₄வந்தி; தத்₃வத் பரமாத்மந: கிம் ந ஸ்யாதி₃த்யபி₄ப்ராயேண ஶங்கதே (எல்லாம் செய்தாலும் இதி) யத்₃வா, இந்த ஶங்காபரிஹாரம் ஸூத்ரகாரராலும் 4. "ஸம்போ₄க₃ப்ராப்திரிதி சேந்ந வைஶேஷ்யாத்" என்கிற ஸூத்ரத்திலே விஶத₃மாக ப்ரதிபாதி₃க்கப்பட்டதே, அந்த ஸூத்ரார்த்த₂த்தை ஹ்ருதீ₃கரித்துக்கொண்டு அருளிச்செய்கிறார் (எல்லாம் செய்தாலும் இத்யாதி₃) o (அப்படி இவனுக்கும் கூடாதோ என்னில்) என்கிறவிது 4. "ஸம்போ₄க₃ப்ராப்திரிதி சேத்" என்றதுக்கு அர்த்த₂ம். சேதநாசேதநங்களோட்டை ஸம்ஸர்க்க₃த்தாலே அவற்றினுடைய ஸுக₂து₃:க்க₂ாநுப₄வப்ராப்தி ஈஶ்வரனுக்குமுண்டென்று சொல்லுகிறாயாகில் என்றபடி. p,q 4. "ந வைஶேஷ்யாத்" என்றதுக்கு அர்த்த₂ம் (கூடாதித்யாதி₃) 4. "ஸம்போ₄க₃ப்ராப்திரிதிசேந்ந வைஶேஷ்யாத்" அஸ்ய ஸூத்ரஸ்ய பா₄ஷ்யம் — 5. "ஜீவஸ்யேவ பரஸ்யாபி ப்₃ரஹ்மணஶ் ஶரீராந்தர்வர்த்தித்வமப்₄யுபக₃தஞ்சேத் தத்₃வதே₃வ ஶரீரஸம்ப₃ந்த₄ப்ரயுக்த ஸுக₂து₃:க்கோ₂பபோ₄க₃ப்ராப்திரிதி சேத், தந்ந, ஹேதுவைஶேஷ்யாத். ந ஹி ஶரீராந்தர்வர்த்தித்வமேவ ஸுக₂து₃:கோ₂பபோ₄க₃ஹேது:, அபிது புண்யபாபரூபகர்மபரவஶத்வம். தத்₃தி₄ அபஹதபாப்மந: பரமாத்மனோ ந ஸம்ப₄வதி. ததா₂ச ஶ்ருதி: — 1. 'தயோரந்ய: பிப்பலம் ஸ்வாத்₃வத்த்யநஶ்நந்நந்யோ அபி₄சாகஶீதி' இதி" இதி. q,r ப்ரவேஶஹேது விஶேஷந்தன்னை உபபாதி₃க்கிறார் (இவனைப்போலே இத்யாதி₃) s உபபாதி₃தமான ப்ரவேஶஹேதுவிஶேஷந்தன்னை லௌகிகத்₃ருஷ்டாந்தத்தாலே த்₃ருடீ₄கரிக்கிறார் (சிறைக்கூடத்திலே இத்யாதி₃) t யுக்திதஸ் ஸாதி₄தே'ர்த்தே₂ ப்ரமாணம் த₃ர்ஶயதி(ஸமாநம் வ்ருக்ஷமிதி)1...t,z"(சேதநர்க்குஅசித்₃க₃தமான

---

ஜீ—சேந்ந வைஶேஷ்யாத்" என்ற ஸூத்ரத்தை உட்கொண்டு உக்தார்த்த₂விவரணம் (எல்லாம் செய்தாலும் இத்யாதி₃) o (அப்படி இவனுக்குங்கூடாதோ? என்னில்) என்கிறது.4. "ஸம்போ₄க₃ப்ராப்திரிதி சேத்" என்றதின் அர்த்த₂ம். p, q 4. "ந வைஶேஷ்யாத்" என்றதின் அர்த்த₂ம் (கூடாது இத்யாதி₃) ஸூத்ரார்த்த₂ஸ்து - பா₄ஷ்யே, 5. "ஜீவஸ்யேவ பரஸ்யாபி ப்₃ரஹ்மணஶ் ஶரீராந்தர்வர்த்தித்வமப்₄யுபக₃தஞ்சேத் தத்₃வதே₃வ ஶரீரஸம்ப₃ந்த₄ப்ரயுக்த ஸுக₂து₃:க்கோ₂பபோ₄க₃ப்ராப்தி: இதி சேத், தந்ந; ஹேதுவைஶேஷ்யாத். நஹி ஶரீராந்தர்வர்த்தித்வமேவ ஸுக₂து₃:க்கோ₂பபோ₄க₃ஹேது:, அபிது புண்யபாபரூபகர்மபரவஶத்வம். தத்₃தி₄ அபஹதபாப்மந: பரமாத்மனோ ந ஸம்ப₄வதி. ததா₂ ச ஶ்ருதி:. 1. 'தயோரந்ய: பிப்பலம் ஸ்வாத்₃வத்த்யநஶ்நந்நந்யோ அபி₄சாகஶீதி' இதி" இதி. q,r ஹேதுவிஶேஷம் ஏதென்ன (இவனைப்போலே இத்யாதி₃) s உபபாதி₃த ப்ரவேஶ ஹேதுவிஶேஷத்தை லௌகிக த்₃ருஷ்டாந்தேந த்₃ருடீ₄கரோதி (சிறைக்கூடத்திலே இத்யாதி₃) t ஸாதி₄தே'ர்த்தே₂ ப்ரமாணம் த₃ர்ஶயதி (ஸமாநம்

ஈ—(ஸமாநம் வ்ருக்ஷம் பரிஷஸ்வஜாதே-அநஶ்நந்நந்ய:) என்றுநின்றதிறே. (புலனைந்துக்கும் u சொலப்படான்) ஶ்ரோத்ராதி$_3$கள் ஐந்துக்கும் விஷயதயா சொல்லப்படான் என்னுதல்; v அன்றிக்கே, நினைத்திறே சொல்லுவது. அச்சொலவுக்கும் முன்பில் நினைவை லக்ஷித்து, $v_2$ அவற்றால் ஸ்மரிக்கப்படான் என்னுதல். பின்னை அவன்தான் இருக்கும்படியென்? என்னில் w (உணர்வின்மூர்த்தி, $w_2$ ப்ரகாஶத்தையே வடிவாக வுடையனாயிருக்கும். / (மூர்த்திஶப்$_3$த$_3$ம் - ஸ்வரூபவாசி) x எல்லாம் செய்தாலும் இவற்றோடுண்டான ஸம்ஸர்க்க$_3$ம் மெய்யாயிருக்க, இவற்றினுடைய தே$_3$ாஷம் தன்பக்கல் தட்டாதபடியிருக்கும் என்னும் இது கூடுமோ? என்னில் y (ஆவிசேர் இத்யாதி$_3$) ஆவியுண்டு-ப்ராணாஶ்ரயமான ஶரீரம். அத்தோடு சேர்ந்திருந்துள்ள, உயிருண்டு-ஆத்மா. அதின்பக்கல் அந்த ஶரீரக$_3$தமான ப$_3$ால்யயௌவநாதி$_3$களொன்றாலும் ஒரு ஸம்ப$_3$ந்த$_4$முமில்லையாம்படியாக அநுஸந்தி$_4$க்கிற அநுஸந்த$_4$ாநமானது அந்த ஆத்மாவுக்குக் கூடாநின்றபின்பு, அப்பொருள் z அவனையும் கூடத் தட்டில்லை. இங்ஙனன்றிக்கே. "இதுக்கு வேறேயும் a இரண்டுபொருள் சொல்லுவர்கள்" என்று அருளிச்செய்வர்-b அவன்பக்கலிலே $b_2$ ப$_4$க்தியுண்டாகில் அவனைக் கிட்டலா

அ—என்று தொடங்கி) (அநஶ்நந்நந்ய:) என்னுமளவும்-'ஆவிசேர்' இத்யாதி$_3$யான மூலவாக்யத்தால் பரிஹரித்ததின்மேலே வந்த ஶங்காபரிஹாரமாகையாலே, 'அப்பொருள் அவனையுங்கூடத் தட்டில்லை' என்ற வாக்யாநந்தரம் அநுஸந்தி$_4$த்தால் மிகவும் சேரும்" என்று அருளிச்செய்வர். u,v (அன்றிக்கே இத்யாதி$_3$) "சொல்" என்கிறது - நினைவை லக்ஷிக்கிறது. புலனைந்துக்கும் ஸ்மரிக்கப்படாதவன் - இந்த்$_3$ரியஜந்யாநுப$_4$வஜந்யஸ்ம்ருதிக்கு விஷயமாகாதவன், ஶப்$_3$த$_3$வாசி ஶப்$_3$த$_3$ம்-ஶப்$_3$த$_3$ஜநகஸ்ம்ருதியை லக்ஷிக்கிறது. $w_2$ப்ரகாஶத்தையே-ஜ்ஞாநத்தையே. w உணர்வில் மூர்த்தி - உணர்விலே உண்டான மூர்த்தியையுடையவன், அதாவது - ஸ்வரூபத்தையுடையவன் என்றபடி. x "ஆவிசேர்" என்கிற உத்தரார்த்த$_4$த்துக்கு அவதாரிகை (எல்லாம் செய்தாலும் இத்யாதி$_3$) y உயிரினுள் - உயிரினிடத்திலே. ஆல் - அசை. பாவனை - அநுஸந்த$_4$ாநம். "அதனை" என்றது - அந்த ஆத்மாவுக்கு என்றபடி. "அவனையும் கூடலாம்" என்றது - பரமாத்மாவுக்கும் கூடலாம் என்றபடி. a (இரண்டுபொருள் சொல்லுவர்கள்) இதி ப்ரதிஜ்ஞாய, அர்த்த$_2$த்ரயாபி$_4$த$_4$ாநம் ப்ரதிபாத$_3$நவேளாயாம் அதி$_4$கார்த்த$_2$ஸ்பு$_2$ரணாத்$_3$வா; ஏகஸ்யைவ - ஸாத$_4$நாந்தரகோடி:, ப்ரபத்திகோடிரிதி கோடித்$_3$வயவிவக்ஷயா வா. b (அவன்பக்கலிலே ப$_4$க்தியுண்டாகில் இதி) ஆவியிலே-ஜீவாத்மாவிலே, சேர்ந்திருக்கிற உயிரினிடத்திலே-A உலகங்கட்

ஜீ—வ்ருக்ஷம் இத்யாதி$_3$) l...t.z"(சேதநர்க்கு அசித்$_3$க$_3$தமான) என்று தொடங்கி (அநஶ்நந்நந்ய:) என்னுமளவும் - 'ஆவிசேர்' இத்யாதி$_3$யான மூலவாக்யத்தால் பரிஹரித்ததின்மேலே வந்த ஶங்காபரிஹாரமாகையாலே 'அப்பொருள் அவனையுங்கூடத் தட்டில்லை' என்ற வாக்யாநந்தரே அநுஸந்தி$_4$த்தால் மிகவும் சேரும்" என்று அருளிச்செய்வர். $v_2$அவற்றால் ஸ்மரிக்கப்படான் - இந்த்$_3$ரியங்களால் அறியப்படான். w (உணர்வின்மூர்த்தி) உணர்வு-ஜ்ஞாநம். மூர்த்திஶப்$_3$த$_3$ம்-ஸ்வரூபவாசி. உணர்விலேயான ஸ்வரூபத்தையுடையவன். ஸ்வயம்ப்ரகாஶஜ்ஞாநஸ்வரூபன் என்றபடி. x "ஆவிசேர்" இத்யாத்$_3$யுத்தரார்த்த$_4$ாவதாரிகை (எல்லாம் செய்தாலும் இத்யாதி$_3$) இவ்வாக்யத்திலே-"ருமாக$_3$தகாஷ்ட$_2$வத், பாதகிஸம்ஸர்க்க$_3$ாத் பாதகித்வவத்" என்ற த்$_3$ருஷ்டாந்தத்$_3$வயம் அநுஸந்தே$_4$யம். அசித்$_3$க$_3$ததே$_3$ாஷஸங்க்ரமணத்துக்கு த்$_3$ருஷ்டாந்தம்-"ருமாக$_3$தகாஷ்ட$_2$வத்" என்றது; சேதநக$_3$ததே$_3$ாஷம் தத்ஸம்ஸர்க்க$_3$த்தால் வருமென்றதுக்கு த்$_3$ருஷ்டாந்தம் - "பாதகிஸம்ஸர்க்க$_3$ாத் பாதகித்வவத்" என்றது. ருமா-உப்பளம். y உயிரினுள்-உயிரினிடத்தில். ஆல்-

/ ( ) இவ்வடைப்பிலுள்ளது அரும்பதவுரைக்குச் சேராது. A 8-1-5.

ச-மென்றும்,cபுறம்புண்டான-உபாயாந்தரங்களிலுண்டான பற்றடையவிட்டு அவனையே பற்றில் அவனைக் கிட்டலாமென்றும். d அன்றியே, d$_2$ அந்திமப்ரத்யயமுண்டாமாகில் அவனைக் கூடலாம் என்றுமாம். e இத்தை எம்பெருமானார் கேட்டருளி; "கீழ் -

---

அ—கெல்லாம் ஒருயிரான பரமாத்மாவினிடத்திலே பரமாத்மவிஷயமாக ப$_2$லஸங்க$_3$கர்த்ருத்வத்யாக$_3$ பூர்விகையாய், விஜாதீயப்ரத்யயதிரஸ்காரபூர்வகஸஜாதீயப்ரத்யயப்ரவாஹரூபையாய்.தைலத$_4$ராவத$_3$விச்சி$_2$ந்நையாய், ஸ்மர்யமாணத்யர்த்த$_2$ப்ரியத்வேந ஸ்வயமபி நிரதிஶயப்ரியையாய், த$_3$ர்ஶநஸமாநாகாரையான அந்த ப$_4$க்திரூபப$_4$ாவனையை, கூடில் - பெறில், அவனையுங்கூடலாம் இதி ஶப்$_3$த$_3$ார்த்த$_2$:. c (புறம்புண்டான உபாயாந்தரங்களிலுண்டான பற்றடைய விட்டு அவனையே பற்றில் அவனைக்கிட்டலாம்) என்றதுக்கு ஶப்$_3$த$_3$ார்த்த$_2$ம் - ஆவியுண்டு - ஆத்மா, அத்தோடே சேர்ந்திருந்துள்ள உயிருண்டு-பரமாத்மா, அவன்பக்கலிலே உபாயாந்தரங்களிலுண்டான பற்றை யடைய விட்டு, அவனே உபாயமென்கிற அத்$_4$யவஸாயமானது ஜீவாத்மாவுக்குக் கூடிற்றாகில் அவனைக் கிட்டாலாமென்று. d (அன்றியே அந்திமப்ரத்யயம் இத்யாதி$_3$) ஆவிசேருகிறவளவிலே-தே$_3$ஹவியோக$_3$ஸமயத்திலே, உயிரினுள் - ஜீவாத்மாவின்பக்கலிலே, ஆதுமோர் பற்றிலாத - ப்ரக்ருதிப்ராக்ருதங்களில் ஸங்க$_3$மற்ற, பாவனையதனை - அந்த ப$_4$ாவனையை; அதாவது - அந்திமஸ்ம்ருதி. கூடுமாகில் என்றபடி. b$_2$ யத்$_3$வா, (ப$_4$க்தியுண்டாகில்) பற்றிலாமை - விஷயவைராக்$_3$யம். d$_2$ (அந்திமப்ரத்யயம்) பற்றிலாமை - ஸ்மரியாமை. மேல் மூன்று பக்ஷத்திலும், ஆபி$_4$முக்$_2$யார்த்த$_2$ம், அதில், அடியில் பக்ஷத்$_3$வயத்தில், ப்ராணாத$_4$ாரமான பரமாத்மாவிலே என்றபடி; 1. **"யஸ்மிந் த்$_3$யௌ: ப்ருதி$_2$வீ சாந்தரிக்ஷமோதம் மநஸ்ஸஹ ப்ராணைஶ்ச ஸர்வைஸ் தமேவைகம் ஜாநத$_2$ாத்மாநம்"** என்றுநின்றதிறே பரமாத்மாவை. இங்கே "ஆவிசேருயிர்" என்கிறது-2. **"ப்ராணஸ்ய ப்ராண:"** என்றத்தைக் கடாக்ஷித்து. த்ருதீயபக்ஷத்தில், ப்ராணன் அடங்குகிற அவஸ்த$_2$ாபந்நமான ஆத்மாவிலே என்றபடி; மூன்று பக்ஷத்திலும், பாவனையதனை என்று - முழுச்சொல்; ப$_4$ாவனையை என்றபடி. பாவனை - ப்ரத$_2$மபக்ஷத்தில் நிதி$_3$த்$_4$யாஸநம். த்$_3$விதீயபக்ஷத்தில் உபாயாத்$_4$யவஸாயம். த்ருதீயபக்ஷத்தில் ஸ்ம்ருதி. e (இத்தை) என்றது-

---

ஜீ—அசை-அவ்யயம். பாவனை,-அநுஸந்த$_4$ாநம். அதனை,-அந்த ஆத்மாவுக்கு. இது அர்த்த$_2$ சதுஷ்டயஸாத$_4$ாரணம். அவனையும்-அந்தப் பரமாத்மாவுக்கும். a அர்த்த$_2$த்ரயம் சொல்லாநிற்க, (வேறேயும் இரண்டு பொருள்) என்றது-ப$_4$க்தி ப்ரபத்திகளிரண்டையும் ஏககோடியாகநினைத்து. ப$_4$க்திபரமானபோது, "ஆவி" என்று - ஆத்மா. "உயிர்" என்று-பரமாத்மா. ஆத்மாவோடு சேர்ந்த பரமாத்மாவின் பக்கலிலே ப்ரயோஜநாந்தரங்களொன்றிலும் ஒரு பற்றில்லாத தைலத$_4$ாராவத$_3$விச்சி$_2$ந்ந ஸ்ம்ருதி ஸந்தாநரூபமான பாவனையுண்டு - ப$_4$க்தி, அது அந்த ஆத்மாவுக்குக் கூடில் அவனையும் கிட்டலாம் இதி ஶப்$_3$த$_3$ார்த்த$_2$:. ப்ரபத்தியோஜனையில், ஆதுமோர் பற்றிலாத பாவனை-உபாயாந்தரங்களொன்றிலும் ஒரு பற்றின்றிக்கே இருக்கிற ப$_4$ாவனை. தத$_3$கோபாயத்வாத்$_4$யவஸாயவிஶேஷமென்றது விஶேஷம். அந்திமஸ்ம்ருதிபக்ஷத்தில், ஆவி - ப்ராணனானது, ஶரீரத்தைவிட்டு ஆத்மாவிலே சேருகிறவளவிலே என்னுதல்; பரமாத்மாவின் பக்கலிலே சேருகிறவளவிலே என்னுதல். ஆதுமோர் பற்றிலாத - வ்யதிரிக்தவிஷயங்களொன்றிலும் ஒரு ஸங்க$_3$மில்லாத. பாவனை - அந்திமஸ்ம்ருதி என்றபடி. பாவனை - ப்ரத$_2$மபக்ஷத்தில், நிதி$_3$த்$_4$யாஸநம்; த்$_3$விதீயபக்ஷத்தில், உபாயாத்$_4$யவஸாயம்; த்$_3$ருதீயபக்ஷத்தில் அந்திமஸ்ம்ருதி. எம்பெருமானார் நிர்வாஹத்தில் அநுஸந்த$_4$ாநம் இதி பே$_4$த$_3$:. "ஆதுமோர்பற்றிலாத" என்றதுக்கு - ஶரீரக$_3$தமான ப$_3$ால்யாதி$_3$தோ$_3$ஷங்களொன்றிலும் ஒரு ஸம்ப$_3$ந்த$_4$மில்லாத என்றும், ப$_4$க்திபக்ஷத்தில், ப்ரயோஜநாந்தரங்களில் பற்றிலாத என்றும், ப்ரபத்தி பக்ஷத்தில், உபாயாந்தரங்களில் பற்றின்றிக்கே என்றும், அந்திமஸ்ம்ருதிபக்ஷத்தில், வ்யதிரிக்தவிஷயங்களில் ஸங்க$_3$மில்லாத என்றும் பே$_4$த$_3$ம். e இத்தை-கீழ்ச்சொன்ன மூன்று அர்த்தத்தை$_2$யும். f இத்தையே

11. கூடிவண் டறையுந் தண்டார் கொண்டல்போல் வண்ணன் றன்னை
மாடலர் பொழிற்கு ருகூர் வண்சட கோபன் சொன்ன
பாடலோ ராயி ரத்து ளிவையு மொரு பத்தும் வல்லார்
வீடில போக மெய்தி விரும்புவ ரமரர் மொய்த்தே.

ஆழ்வார் திருவடிகளே ஶரணம்.

ஆ— 11. வ்யா:— (கூடி) இத்திருவாய்மொழி வல்லார் ஸர்வகாலமும் ப₄க₃வத் கைங்கர்யத்தைப்பெற்று A அயர்வறும் அமரர்களுக்குப் பரமபே₄ாக்₁யராவர் என்கிறார் 11.

திருக்குருகைப்பிரான் பிள்ளான் திருவடிகளே ஶரணம்.

ஒ— அவ:— நிக₃மத்தில், இப்பத்தும் கற்றவர்கள் நித்யகைங்கர்யத்தைப்பெற்று A அயர்வறும் அமரர்களாலே விரும்பப்படுவர் என்கிறார்.

ஈ—வ்யாப்தியைச் சொல்லிநின்றபின்பு, இனி-வ்யாப்யவஸ்துக₃தமான தோ₃ஷங்கள் வ்யாபகனானவனுக்குத் தட்டாதென்னுமிடம் அவஶ்யம் சொல்லவேணும். ஆனபின்பு f இத்தையே சொல்லிற்றாக அமையும்" என்று அருளிச்செய்வர். 10.

அ—"இங்ஙனன்றிக்கே" என்று தொடங்கிச் சொன்ன மூன்று அர்த்த₂த்தையும். f (இத்தையே சொல்லிற்றாக அமையும் என்றது) ஶரீரக₃தமான பா₃ல்யாதி₃கள் சேதநனுக்கு வாராதாப்போலே- சேதநாசேதநதோ₃ஷமும் ஈஶ்வரனுக்கு வாராதென்று முந்துற அருளிச்செய்த அர்த்த₂மே சொல்லிற்றாக அமையும் என்றபடி. 1. "ந ஸ்தா₂நதோऽபி பரஸ்யோப₄யலிங்க₃ம் ஸர்வத்ர ஹி" இதி ஸூத்ரம், 2. "அபேக்ஷிதவிதே₄ரநபேக்ஷிதவித₄ாநஸ்ய தூர்ப்ப₃லத்வாத்" இதி ந்யாயஶ் சாத்ர விவக்ஷித:. 10.

ஜீ—சொல்லிற்றாக அமையும்) என்றது - ஶரீரக₃தமான பா₃ல்யாதி₃கள் சேதநனுக்கு வாராதாப் போலே, சேதநாசேதநக₃ததோ₃ஷமும் ஈஶ்வரனுக்கு வாராதென்று முந்துற அருளிச்செய்த அர்த்த₂மே சொல்லிற்றாக அமையும் என்றபடி. எம்பெருமானார் நிர்வாஹமொழிந்த யோஜநா த்ரயத்திலும், அதனை என்று - பா₄வனைக்கு விஶேஷணமாய், "அந்த பா₄வனை" என்று- அப்பன் ஸ்ரீகோஶத்தின்படி. 10.

ஆதே₃— பத்தாம் பாட்டு. சேதநாசேதநங்களுடைய தானென்கிற சொல்லுக் குள்ளே அடங்கும்படி ப்ரகாரமாகத் தான் ப்ரகாரியாய், அந்தச் சேதநாசேதநங்க ளுடைய வ்யவஸ்தை₂கள்தோறும் ஸ்பர்ஶமில்லாதவன்; ஶ்ரோத்ராதி₃கள் ஐந்துக்கும் விஷயதயா சொல்லப்பட்டான்; ப்ரகாஶத்தையே வடிவாகவுடைத்தா யிருக்கும் இது கூடுமோ? என்னில்; ஶரீரத்தோடு சேர்ந்திருந்துள்ள ஆத்மாவின் பக்கல் அந்த ஶரீரக₃தமான பா₃ல்யயௌவநாதி₃ தோ₃ஷங்களொன்றாலும் ஒரு ஸம்ப₃ந்த₄மில்லையாம்படி அநுஸந்திக்கிற அநுஸந்த₄ாநமானது அவ்வாத்மாவுக்குக் கூடாநின்றபின்பு அப்பொருள் அவனையும் கூடத் தட்டில்லை என்கிறார் "யாவையும் யவரும்" இத்யாதி₃யால். 10.

A 1-1-1.

ஒ— வ்யா:— (கூடிவண்டு என்று தொடங்கி) வண்டுகளெல்லாம் கூடிவந்து அலைக்கும்படியான பே4ாக்3யதையையுடைத்தான மாலையையும், வர்ஷுகவலாஹகம் போலேயிருக்கிற நிறத்தையுமுடையவனை. இத்திருவாய்மொழியிற்பேசின விபூ4தி தோளில் தோள்மாலையோடும் நிறத்தோடுமொக்கத் தகுதியென்னுமிடத்தை - நிக3மத்திலே சொல்லுகிறது என்று கருத்து. "ஏவம்வித4தி3வ்யரூபத்தை யுடையனுய்க்கொண்டு என்றும் திருநாட்டிலே எழுந்தருளியிருக்கும்" என்றும் சொல்லுவர். "அஶேஷதோ3ஷ ப்ரத்யநீகனுய், ஆஶ்ரிதரோடு நித்யஸம்ஶ்லேஷ ஸ்வபா4வனுய், ஆஶ்ரிதஜநஸமஸ்த து3:க்க2ாபநோத3நஸ்வபா4வனுய், பரமோத3ாரனு யிருக்கும்" என்றும் சொல்லுவர். மாடு-பர்யந்தம். பாடல்-க3ாநம். 11.

நஞ்ஜீயர் திருவடிகளே ஶரணம்.

---

ப— அவ:— அநந்தரம், இத்திருவாய்மொழிக்குப் ப2லமாக அவிச்சி2ந்ந ப4க3வத3நுப4வத்தை அருளிச்செய்கிறுர்.

**வண்டு** — வண்டுகள், **கூடி** — கூடி, **அறையும்** — (மது4பாநப்ரீதியாலே) ஶப்3தி3க்கிற, **தண்**—குளிர்ந்த,**தார்**—திருமாலையையுடையவனுய்,**கொண்டல்போல்**—காளமேக4ம்போலேயிருக்கிற, **வண்ணன்தன்னை**—நிறத்தையுடையனுனவனை,**மாடு**—சுற்றும், **அலர்**—அலர்ந்த, **பொழில்**—சோலைகளையுடைத்தான, **குருகூர்**—திருநகரிக்கு நிர்வாஹகரான, **வண் சடகோபன்** — ஆழ்வார், **சொன்ன**—அருளிச்செய்த, **பாடல்**—இசையோடு கூடின, **ஓர்**—அத்3விதீயமான, **ஆயிரத்துள்**—ஆயிரத்துக் குள்ளும், **ஒரு**—அத்3விதீயமான, **இவையும் பத்தும்**—(அஸாதா4ரண விக்3ரஹத்தோடு பாதியாக அகி2லவிபூ4தி · ப்ரகாரத்வத்தை ப்ரதிபாதி3த்த) இப்பத்தையும், **வல்லார்**—அப்4யஸிக்கவல்லவர்கள், **வீடில**—அவிச்சி2ந்நமான, **போகம்**—ப4க3வத3நுப4வத்தை, **எய்தி**—பெற்று, **அமரர்**—நித்யஸூரிகள், **மொய்த்து**—மொய்த்துக் கொண்டு, **விரும்புவர்**—விரும்பும்படியாவர்கள்.

இது - அறுசீர் ஆசிரியவிருத்தம். 11.

வாதி3கேஸரி அழகிய மணவாளச்சீயர் திருவடிகளே ஶரணம்.

---

இ— அவ:— நிக3மத்தில், இப்பத்தைக் கற்றவர்கள் நித்யகைங்கர்யத்தைப் பெற்று நித்யஸூரிகளாலே விரும்பப்படுவர் என்கிறுர்.

வ்யா:— (**கூடி இத்யாதி3**) கிண்ணகத்தில் இழிவாரைப்போலே, வண்டுகள் திரண்டு மது4பாநம்பண்ணி த்4வநிக்கிற தோள் மாலையையும் வர்ஷுக வலாஹகம் போலே ஶ்ரமஹரமான வடிவையுமுடையவனையாயிற்றுக் கவிபாடிற்று. கீழ்ச் சொன்ன விபூ4தி தோள்மாலையோபாதி தகுதியாயிருக்கும் என்றதாயிற்று. (**மாடலர் இத்யாதி3**) பர்யந்தமடைய அலர்ந்த பொழிலையுடைய திருநகரி. (**பாடல் ஓராயிரம்**) பாடல் - க3ாநம். "புஷ்பம் பரிமளத்தோடே" அலரும்போலே "இசைமுன்னுகத்

இ—தோற்றின ஆயிரம். (வீடில போகமெய்தி) விச்சே2த3மில்லாத கைங்கர்யபோ4க3த்தைப் பெற்று. (விரும்புவர் இத்யாதி3) நித்யஸூரிகள் சூழ்ந்துகொண்டு ஆதரிக்கும்படி ஆவர், தத்3யத்வாராரேண லீலாவிபூ4தியை அநுஸந்தி4க்குமது தங்களதேயாகையாலே, இங்கேயிருந்து இவ்வநுஸந்தா4நமுடையார் சென்றால் ஆத3ரிப்பர்கள். 11.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே ஶரணம்.

---

ஈ— அவ:— a நிக3மத்தில் — இத்திருவாய்மொழி கற்றவர்கள் நித்யகைங்கர்யத்தைப்பெற்று A அயர்வறும் அமரர்களாலே விரும்பப்படுவர்கள் என்கிறார்.

வ்யா:— b (கூடிவண்டறையும் இத்யாதி3) c கீழ் - பரக்கச்சொன்ன விபூ4தியடைய, தோளில் தோள்மாலையோபாதி அவனுக்குத் தகுதியாயிருந்தபடியைச் சொல்லுகிறது. d கிண்ணகத்திலே இழிவாரைப்போலே வண்டுகளானவை e திரண்டு மது4பாநம்பண்ணி f த்4வநியாநின்றுள்ள ஶ்ரமஹரமான மாலையையும், ஶ்ரமஹரமான மேக4ம்போலேயிருக்கிற திருமேனியையுமுடைய f2 ஸர்வேஶ்வரனையாயிற்றுக் கவி பாடிற்று. g (மாடலர் இத்யாதி3) பர்யந்தங்களிலே அலர்ந்த பொழிலையுடைய திருநகரிக்கு நிர்வாஹகராய், பரமோதா3ரரான h ஆழ்வார் அருளிச்செய்த. i (பாடலோராயிரம்) j புஷ்பம் பரிமளத்தோடே அலருமாபோலே இசையோடு கூடின ஆயிரத்திலும் வைத்துக்கொண்டு இப்பத்தையும் அப்4யஸிக்கவல்லவர்கள். (வீடில போகமெய்தி) ஒருநாளும் விச்சே2த3ஶங்கையில்லாத மோக்ஷஸுக3த்தை ப்ராபித்து. k (விரும்புவரமரர் மொய்த்தே) l அமரராலே மொய்த்து விரும்பப்படுவர். m லீலாவிபூ4தியை

---

அ— நிக3மம். (கூடியித்யாதி3) a "இவையுமொருபத்தும்" என்று தொடங்கி, "அமரர் மொய்த்தே" என்ற பத3ங்களைக் கடாக்ஷித்து அவதாரிகை (நிக3மத்தில் இத்யாதி3) b,c "பொருவில் சீர்ப் பூமியென்கோ"(1) இத்யாரப்4ய, "யாவையும் யவரும் தானாய்"(10) இத்யந்தநோக்தவிபூ4தியுக்தப4க3வத்ஸ்வரூபாநுவாத3த3ஶாயாம் துளஸீத3ாமவைஶிஷ்ட்யாபி4தா4நஸூசிதமர்த்த2மாஹ (கீழ் பரக்கச் சொன்ன இதி) d கிண்ணகம் - ப்ரவாஹம். b,e கூடி-திரண்டு. b,f அறைகை-ஶப்3தி3க்கை. f2,h,j ப்ரதிபாத்3யவக்த்ருப்ரப3ந்த4வைலக்ஷண்யாநி ஸூசிதாநீத்யபி4ப்ராயேணோக்தம் (ஸர்வேஶ்வரனையாயிற்றுக் கவிபாடிற்று, ஆழ்வாரருளிச்செய்த, புஷ்பம் பரிமளத்தோடே இதி ச) c (கீழ் பரக்கச் சொன்ன) என்றவிடத்திலே-1. "யஸ்யாயுதாயுதாம்ஶாம்ஶே விஶ்வஶக்திரியம் ஸ்தி2தா" 2. "மேரோரிவாணுர் யஸ்யைதத்3ப்3ரஹ்மாண்ட3மகி2லம் மூநே" என்று அருளிச்செய்வர். g மாடு-பர்யந்தம். i பாடல் - கா3நம். m நித்யஸூரீணாமத்யாத3ரணீயா ப4வந்தீத்யத்ர ஹேதுமாஹ (லீலாவிபூ4தியை இதி) k,l "விரும்புவரமரர் மொய்த்தே" இத்யத்ர (அமரராலே மொய்த்து விரும்பப்படுவர்) இதி வாக்யாவதாரிகா 3. "ஜரத்3க3வ: கம்ப3லபாது3காப்4யாம் த்3வாரி ஸ்தி2தோ

---

ஜீ— நிக3மம். (கூடி இத்யாதி3) a "இவையுமொருபத்தும்" இத்யாதி3 மேலெல்லாம் கடாக்ஷித்து அவதாரிகை. b,c இப்போது மாலையோட்டைச்சேர்த்தி சொன்னதுக்கு ப்ரயோஜநம் ஏதென்ன (கீழ்பரக்க இத்யாதி3) d கிண்ணகம்-ப்ரவாஹம். b,e கூடி-திரண்டு. b,f அறைகை-ஶப்3தி3க்கை. c (கீழ் பரக்கச் சொன்ன) என்றவிடத்திலே - 1. "யஸ்யாயுதாயுதாம்ஶாம்ஶே விஶ்வஶக்திரியம் ஸ்தி2தா" 2. "மேரோரிவாணுர் யஸ்யைதத்3ப்3ரஹ்மாண்ட3மகி2லம் மூநே" என்றது அநு

---

A 1-1-1.

ஈ—ததீ$_3$யத்வாகாரத்தாலே அநுஸந்தி$_4$ப்பார் நித்யஸூரிகளாகையாலே, "தாங்கள் அநுப$_4$விக்கக்கடவ அநுப$_4$வத்தை ஸம்ஸாரத்தேயிருந்துவைத்து இப்படியிருப்பதொரு ஜ்ஞாநபாகம் பிறந்து அநுஸந்தி$_4$ப்பதே" என்று ஆழ்வார்பக்கல் பண்ணின ப்ரேமாதிஶயத்தாலே; அவருடைய ப்ரப$_3$ந்த$_4$ங்களை அப்$_4$யஸித்தவர்களை, ஸர்வேஶ்வரனைவிட்டு இவர்களை நெருங்கி ஆத$_3$ரியாநிற்பர்கள் நித்யஸூரிகள்.

முதற்பாட்டில் — இத்திருவாய்மொழியில் பரக்க அருளிச்செய்த அர்த்த$_2$த்தை ஸங்க்$_3$ரஹேண அருளிச்செய்தார்; இரண்டாம் பாட்டில் — கீழ்ச்சொன்ன பூ$_4$தங்களினுடைய கார்யத்தை க்ரமத்திலே பேசினர்; மூன்ரும் பாட்டில் — ஜக$_3$த$_3$ாகாரனாய் நின்ற நிலையோடே அஸாத$_4$ாரண விக்$_3$ரஹத்தைச் சேர்த்து அநுப$_4$வித்தார்; நாலாம் பாட்டில்—உஜ்ஜ்வலமான மாணிக்யாதி$_3$ பத$_3$ார்த்த$_2$ங்களை விபூ$_4$தியாகவுடையவன் என்ருர்; அஞ்சாம் பாட்டில் — ரஸவத்பத$_3$ார்த்த$_2$ங்களை விபூ$_4$தியாகவுடையனாயிருக்கிறபடியை அருளிச்செய்தார்; ஆரும் பாட்டில் — வேத$_3$ம் தொடக்கமான இயலுமிசையுமான ஶப்$_3$த$_3$ராஶியை விபூ$_4$தியாகவுடையன் என்ருர்; ஏழாம் பாட்டில் — ஐஶ்வர்யாதி$_3$ புருஷார்த்த$_2$ங்களை விபூ$_4$தியாகவுடையன் என்ருர்; எட்டாம் பாட்டில் — ஜக$_3$த்தில் ப்ரத$_4$ாநரான ப்$_3$ரஹ்மருத்$_3$ராதி$_3$களை விபூ$_4$தியாகவுடையன் என்ருர்; ஒன்பதாம் பாட்டில் — அவனுடைய விபூ$_4$தி விஸ்தாரங்கள் தனித்தனியே பேசமுடியாமையாலே, சேதநாசேதநங்களை விபூ$_4$தியாகவுடையனென்று ப்ரயோஜகத்திலே அருளிச்செய்தார்; பத்தாம் பாட்டில் — இவற்றுக்கும்அந்தராத்மாவாய் வ்யாபித்துநின்ருல்,தத்$_2$க$_3$ததே$_3$ாஷை: அஸம்ஸ்ப்ருஷ்டனென்ருர்; நிக$_3$மத்தில்—இது கற்ருர்க்குப் ப$_2$லஞ்சொல்லித் தலைக்கட்டினர். 11.

வடக்குத்திருவீதிப்பிள்ளை திருவடிகளே ஶரணம்.

---

அ—க$_2$ாயதி மத்$_2$ரகாணி! தம் ப்$_3$ராஹ்மணீ ப்ருச்ச$_2$தி புத்ரகாமா ராஜக் குமாயாம் லஶஜஸ்ய கோர்ऽக்க$_4$: ||" இதிவத்$_3$வர்த்ததே இத்யவிஜ்ஞாதத்$_3$ராமிட$_3$ஶைலீநாம் புருஷாணும் ஶங்கா. 11.

ஜீயர் திருவடிகளே ஶரணம்.

---

ஜீ—ஸந்தே$_4$யம். g மாடு - பர்யந்தம். m அமரர் விரும்புகைக்கு அடியேதென்ன (ஶீலாவிபூ$_4$தியை இத்யாதி$_3$) k,l அமரர் - அமரராலே. விரும்புவர் - விரும்பப்படுவர். 11.

ஜீயர் திருவடிகளே ஶரணம்.

---

ஆதே$_3$—பதினேராம் பாட்டு. வண்டுகளானவை திரண்டு மது$_4$பாநம் பண்ணி த்$_4$வநியாநின்றுள்ள ஶ்ரமஹரமான மாலையும், மேக$_4$ம்போலே திருமேனியுமுடையவனை, பர்யந்தங்களிலே அலர்ந்த பொழிலையுடைய திருநகரிக்கு நிர்வாஹகராய், பரமோத$_3$ாரரான ஆழ்வார் அருளிச்செய்த இசையோடே கூடின ஆயிரத்திலும் வைத்துக்கொண்டு இப்பத்தையும் அப்$_4$யஸிக்கவல்லவர்கள் ஒருநாளும் விச்சே$_2$த$_3$ஶங்கையில்லாத மோக்ஷஸுக$_2$த்தை ப்ராபித்து நித்யஸூரிகளாலே மொய்த்து ஆத$_3$ரிக்கப்படுவர் என்று உக்தார்த்த$_2$த்தை நிக$_3$மிக்கிருர் "கூடி" இத்யாதி$_3$யால். 11

ஜீயர் திருவடிகளே ஶரணம்.

## த்3ரமிடோ3பநிஷத் ஸங்க3தி - புகழுநல்

१. सर्वं जगत्समवलोक्य विभोश्शरीरं तद्वाचिनश्च सकलानपि शब्दराशीन् ।
तान्भूतभौति ::: स्तान्कथयन् पदार्थान्दास्यं चकार वचसैव मुनिश्चतुर्थे ॥ २४॥

1. ஸர்வம் ஜக3த் ஸமவலோக்ய விபோ4ஶ் ஶரீரம்
தத்3வாசிநஶ்ச ஸகலாநபி ஶப்3த3ராஶீந் ।
தாந் பூ4தபௌ4திகமுக2ாந் கத2யந் பதா3ர்த்த2ாந்
தா3ஸ்யம் சகார வசஸைவ முநிஶ்சதுர்த்தே2 ॥

வாதி3கேஸரீ அழகிய மணவாளச்சீயர் திருவடிகளே ஶரணம்.

---

## த்3ரமிடோ3பநிஷத் தாத்பர்யரத்நாவளி - புகழுநல்

२. भूतैस्तत्कार्यभूतैश्शुभनिजवपुषा दीप्तिमद्भिः पदार्थैः
पथ्यास्वादोपपन्नैः श्रुतिमुखसुभगाशेषशब्दप्रपञ्चैः ।
नानाकारैः पुमर्थैर्जगदधिपतिभिश्चेतनाचेतनौघैः
जुष्टं दोषैरदुष्टं निखिलतनुतया संप्रतुष्टाव तुष्टः ॥ २७॥

2. பூ4தைஸ் தத்கார்யபூ4தைஶ்ஶுப4நிஜவபுஷா தீ3ப்திமத்3பி4: பதா3ர்த்தை2:
பத்2யாஸ்வாதோ3பபந்நைஶ் ஶ்ருதிமுக2ஸுப4கா3ஶேஷஶப்3த3ப்ரபஞ்சை: ।
நாநாகாரை: புமர்த்தை2ர் ஜக3த3தி4பதிபி4ஶ் சேதநாசேதநௌகை4ர்
ஜுஷ்டம் தோ3ஷைரது3ஷ்டம் நிகி2லதநுதயா ஸம்ப்ரதுஷ்டாவ துஷ்ட: ॥

வ்யா:— (1) (பூ4தை:) [பொருவில்சீர்ப்பூமி இத்யாதி3] ப்ருதி2வ்யாதி3பஞ்சபூ4தங்களோடும்; (2) (தத்கார்யபூ4தை:) [குன்றங்களனைத்தும் இத்யாதி3] ப்ருதி2வ்யாதி3கார்யங்களான பர்வத மேக4 நக்ஷத்ர வித்3யா ஶப்3த3ங்களோடும்; வித்3யாஸ்வரூபையான உக்தி வாயுவினாலே அபி4வ்யங்க்3யையாகையாலே வித்3யைகளை வாயுகார்யமென்றது, "ஞானநல்லாவி" என்றவிடத்தில், ஆவியென்று - லக்ஷணையாலே ஶரீரத்தைச் சொல்லி, அத்தாலே - ஜ்ஞாநத்துக்கு ஶரீரமென்று ஜ்ஞாநஸாத4நமான ஶப்3த3த்தைச் சொன்னபடி; (3) (ஶுப4நிஜவபுஷா) [பங்கயக்கண்ணனென்கோ இத்யாதி3] நிரதிஶய ஸௌந்த3ர்யவிஶிஷ்ட தி3வ்யமங்க3ளவிக்3ரஹத்தோடும்; (4) (தீ3ப்திமத்3பி4: பதா3ர்த்தை2:) [சாதிமாணிக்கம் இத்யாதி3] நிர்மலங்களான மாணிக்ய கநக முக்தா வஜ்ர தீ3பங்களோடும்; (5) (பத்2யாஸ்வாதோ3பபந்நை:) [நச்சுமாமருந்தம் இத்யாதி3] ஹிதங்களாயும் மது4ரங்களாயுமிருக்கிற ஔஷத4ாம்ருதகு3டஷட்3ரஸயுதாந்நக்4ருத மது4 ப2ல க்ஷீரங்களோடும்; (6) (ஶ்ருதிமுக2ஸுப4க3ாஶேஷஶப்3த3ப்ரபஞ்சை:) [நான்கு வேதப்பயன் இத்யாதி3] ஶ்ருதிஸ்ம்ருதீதிஹாஸ புராண லௌகிக கா3நாதி3ஶப்3த3ங்களோடும்; (7) (நாநாகாரை: புமர்த்தை2:) [ஊனமில்செல்வம் இத்யாதி3] ப்ருத2க்3வித4ங்களான ஐஶ்வர்யஸ்வர்க்க3 மோக்ஷ புருஷார்த்த2ங்களோடும்; (8) (ஜக3த3தி4பதிபி4:) [ஒருவனென்றேத்தநின்ற இத்யாதி3] லோகத்தில் ப்ரதா4நரான ஶர்வசதுர்முக2ர்களோடும்; (9) (சேதநாசேதநௌகை4ர் ஜுஷ்டம்) [யாவையும் யவரும் தானே] சேதநாசேதந ஸமூஹங்களோடும் கூடினவனைய்; (10) (தோ3ஷைரது3ஷ்டம்) [அவரவர் சமயந்தோறும் தோய்விலன் இத்யாதி3] தத்3க3ததோ3ஷை: அஸம்ஸ்ப்ருஷ்டனாயிருக்கிற எம்பெருமானை, "புகழுநல்லொருவன்" என்கிற த3ஶகத்திலே ஸர்வஶரீரகனை ஆழ்வார் ஸ்தோத்ரம்பண்ணியருளினார் என்கிறார். 3.4.

வேதா3ந்தாசார்யர் திருவடிகளே ஶரணம்.

## திருவாய்மொழி நூற்றந்தாதி

24. புகழொன்று மாலைப் பொருள்களும் தானாய்
நிகழ்கின்ற நேர்காட்டி நிற்க—மகிழ்மாறன்
எங்கு மடிமைசெய விச்சித்து வாசிகமாய்
அங்கடிமை செய்தான்மொய்ம் பால்.

பெரியஜீயர் திருவடிகளே ஶரணம்.

---

**அவ:— இருபத்துநாலாம் பாட்டு. (புகழொன்றுமால்)** கீழ் — பாரித்த கைங்கர்யத்துக்கு அநுகு₃ணமாக அவன் ஸர்வாத்மபா₄வத்தைக் காட்ட, அத்தைப் பேசி அடிமைசெய்த பாசுரத்தை அநுவதி₃த்தருளிச்செய்கிறார். எங்ஙனே யென்னில்; கீழ் இவர் **1. " அஹம் ஸர்வம் கரிஷ்யாமி "** என்று பாரித்தபடியே ஸர்வாத்மபா₄வத்தைக்காட்டி அடிமைகொள்வதாக ஒருப்பட்ட ஸர்வேஶ்வரனுக்கு. உத்₃யோக₃மாத்ரத்திலே வயிறுநிறையும் அவன் ப்ரக்ருதிக்கும், வாசிகத்துக்கு மேற்பட்ட அடிமைசெய்யமாட்டாத தம் ப்ரக்ருதிக்கும் சேர வாசிகமான அடிமை செய்து தலைக்கட்டுகிற "புகழுநல்லொருவ"னின் அர்த்த₂த்தை "புகழொன்றுமால்" என்று தொடங்கி அருளிச்செய்கிறார்.

**வ்யா:— (புகழொன்றுமால்)** கீழ் A எண்ணில் தொல்புகழ் வானவரீசனை 'புகழுநல்லொருவன்" என்று - ஸர்வைஸ்ஸ்துத்யனுமது ஶத்₃ருஶமாய்ச்சேரும்படியான ஸர்வேஶ்வரன். B பொழிலேழும் காவல்பூண்டபடியாலே புகழும் பொருந்தியிருக்குமிறே. அன்றிக்கே, இவரை அடிமைகொள்ளுகையால் வந்த C அந்தமில் புகழ் பொருந்தின என்றுமாம். **(எப்பொருள்களுந்தானாய் நிகழ்கின்ற நேர் காட்டி நிற்க)** ஸமஸ்தவஸ்துக்களும் தான் என்னும்படி ஸர்வஶப்₃த₃வாச்யனாய் வர்த்திக்கிற ப்ரகார ப்ரகாரிபா₄வத்தை ப்ரகாசிப்பித்துக்கொண்டு இவர்க்கு ஜ்ஞாந ஸாக்ஷாத்காரமாம்படிநிற்க. அதாவது - "பொருவில்சீர்ப்பூமியென்கோ" (1) என்று தொடங்கி அருளிச்செய்த பூ₄தங்கள், "குன்றங்களனைத்துமென்கோ, மேவுசீர் மாரியென்கோ" (2) என்று தொடக்கமான பௌ₄ளதிகங்கள், "சாதிமாணிக்கமென்கோ" (4) இத்யாதி₃யால் - உஜ்ஜ்வலமான மாணிக்யாதி₃கள், "அச்சுதன்— அச்சுவைக்கட்டியென்கோ" (5) இத்யாதி₃யால்-ரஸவத்பதா₃ர்த்த₂ங்கள், "நான்கு வேதப்பயனென்கோ சமயநீதிநூலென்கோ நுடங்கு கேள்வியிசையென்கோ" (6) என்று - ஜ்₃ஞாநாதி₃ஶப்₃த₃ராசிகள், "வானவராதி" (7) இத்யாதி₃யில் - மோக்ஷாதி₃ புருஷார்த்த₂ங்கள், "ஒளிமணிவண்ணன்" (8) இத்யாதி₃யில் - ஜக₃த்ப்ரதா₄நரான ப்₃ரஹ்மருத்₃ராதி₃கள், இவற்றுக்கடையக் காரணமான "யாவையும் யவரும் தானே" (9) என்கிற - ப்ரக்ருதி புருஷர்கள், இவற்றையடைய விபூ₄தியாக வுடையனாய். இவற்றிலே அந்தராத்மதயா வ்யாபித்து, "தோய்விலன்" (10) என்று- தத்₃க₃தது₃ோஷை: அஸம்ஸ்ப்ருஷ்டனாயிருக்கிறபடியையும் என்கை. **2. "ஜக₃த்**

---

A 3-3-3. B திருநெடு-10. C 3-3-2.

# திருவாய்மொழி மூன்றும்பத்து ஐந்தாம் திருவாய்மொழி
# மொய்ம்மா ப்ரவேசம்

**ஆ—** (மொய்ம்மாம் பூம்பொழில்) ஏவம்பூ₄தனை எம்பெருமானுடைய ஆஶ்ரிதவாத்ஸல்யாதி, கல்யாணகு₃ணங்களை அநுப₄வித்து, அவ்வநுப₄வஜநிதமான ப்ரீத்யதிஶயத்தாலே அப்ரக்ருதிங்க₃தராய்க்கொண்டு அக்கு₃ணங்களைச் சொல்லிப் பிதற்றி, ஊர் பல புக்கும் புகாதும் உலோகர் சிரிக்கநின்றுடி ஆர்வம்பெருகிக் குனிக்குமவர்களுடைய மாஹாத்ம்யத்தையும், இப்படி செய்யாதாருடைய அவஸ்துத்வத்தையும் சொல்லுகிறார்.

---

**ஒ— அஞ்சாம் திருவாய்மொழியில் — மது₄வநம்புக்க ஹநுமத்ப்ரமுக₂ரான முதலிகளைப்போலே ப₄க₃வத்₃கு₃ண ப₃லாத்க்ருதராய்க்கொண்டு அடிமைசெய்யப்பெற்று ஹ்ருஷ்டராய்க்களித்த ஆழ்வார், ஸ்ரீகீ₃தையில் எம்பெருமான் தே₃வாஸுர விப₄ாக₃ம்**

---

**தீ-நூ—ஸர்வம் ஶரீரம் தே ஸ்தை₂ர்யம் தே வஸுத₄ாதலம்। அக்₃நி: கோப: ப்ரஸாத₃ஸ்தே ஸோம: ஸ்ரீவத்ஸலக்ஷண!॥"** என்னும்படியே, இப்படி "புகழுநல்லொருவனென்கோ பொருவில்சீர்ப்பூமியென்கோ"(1) என்று தொடங்கி, "நான்முகக்கடவுளென்கோ" (8) என்னுமளவும் ஸமஸ்தவஸ்துக்களும் "தான்" என்னும்படி ப்ரகாரமாக வர்த்திக்கிற ப்ரகாரியைக் காட்டிக்கொணடுநிற்க. **(மகிழ்மாறன்)** வகுளத₄ரரான ஆழ்வார். **(எங்குமடிமை செயவிச்சித்து)** ஸர்வதே₃ஶ ஸர்வகால ஸர்வாவஸ்தை₂களிலும் திருவேங்கடமுடையான் திருவடிகளிலே அடிமைசெய்ய இச்சி₂த்து. **(வாசிகமாயங்கடிமை செய்தான்)** அப்படி ஆசைப்பட்ட அவ்விஷயத்திலே-அவ்விடத்திலே "என்கோ, என்கோ" என்று வாசிகமான அடிமைசெய்தார். **(மொய்ம்பால்) 1. "ய ஆத்மத₃ா ப₃லத₃ா:"** A "வலந்தரும்" B "நிலைப்பெற்றென்னெஞ்சம் பெற்றது நீடுயிரே" என்று - அவன் தந்த ஆத்மபூலத்தாலே ஸத்தையுண்டானலிறே ஸம்ருத்₃தி₄யை அபேக்ஷிப்பது. **மொய்ம்பு** - மிடுக்கு ; C "கண்ணவானென்றும் மண்ணோர் விண்ணோர்க்கு" என்றும், D "வானோர்க்கும் மண்ணோர்க்கும் வைப்பு' என்றும், E "கண்ணையேழுலகுக்கு உயிராயவெங்கார்வண்ணனை விண்ணோர்தாம் பரவும் பொழில் வேங்கடவேதியனை"என்றும், F"தாய்தந்தையுயிராகின்றாய்—பாகின்ற தொல்புகழ் மூவுலகுக்கும் நாதனே பரமா தண்வேங்கடமேகின்றாய்" என்றும், G "திருவேங்கடத்தானுக்கு — என்கண்பாசம்வைத்த பரஞ்சுடர்ச்சோதிக்கு" என்றும், H" அம்பரம் " இத்யாதி₃யாலும்—அவனுடைய உப₄யவிபூ₄தி நிர்வாஹகத்வத்தையும், அந்தர்வ்யாப்தியையும், ஸர்வகால வர்த்தித்வத்தையும்அருளிச்செய்கையாலே, வ்யாப்த்யநுஸந்த₄ாநரூப வாசிககைங்கர்யம் I திருவேங்கடத்தென்னனையென்னப்பனெம்பெருமானுக்கேயிறே ஏற்றிருப்பது, அத்தைப்பற்றவிறே "அங்கடிமை செய்தான்" என்று இவர் அருளிச்செய்தது. 24.

பெரியஜீயர் திருவடிகளே ஶரணம்.

---

A பெரியதிரு 1.1-9. B 3-2-10. C 1-8.3. D நான்-திருவ 45. E பெரியதிரு 1-9-10. F 2-6-10. G 3-3-4. H பெரியதிரு 1-8.8. I 3-9-1.

ஓ—பண்ணியருளி ஆஸுரப்ரக்ருதிகளை நிந்தி3த்து தை3வப்ரக்ருதிகளைக் கொண்டாடி ஞற்போலே, அறிவில்லாதாரையும், ப4க3வத்ஸம்ப3ந்தி4களன்றிக்கே ஶிஷ்டாபி4 மாநிகளாயிருப்பாரையும், சதிரடிப்பாரையும், அப3ஹுஶ்ருதரையும், எம்பெருமானை ஆஶ்ரயித்து ப்ரயோஜநாந்தரபரரானவர்களையும், ராக்ஷஸப்ரக்ருதிகளையும், ஆஸுர ப்ரக்ருதிகளையுமகப்பட ஆரேனுமாக எம்பெருமானுடைய கு3ணங்களை அநு ஸந்தி4த்தால் பரவஶராய், கும்பிடுநட்டமிட்டாடிக் கோகுகட்டுண்டுழலாதாரை நிந்தி3த்து, ப4க3வத்3கு3ணப்ரஸ்தாவத்திலே கலங்கும் ப்ரக்ருதியானவர்களுடைய படி நமக்கு நினைக்கவும் பேசவும் நிலமல்லவென்று இவர்களைக் கொண்டாடுகிறார்; ஸாத்விகாக்3ரணிகளாயிருக்கிற ஆழ்வார்க்குக் களிக்கையும், சிலரை இகழ்கையும் கூடினபடியென்? என்னில்; "விஷயால்வாத3த்தாலே பிறந்த த3ர்ப்பமும், ஒரு ஹேதுவின்றியேயிருக்க, சிலரை இகழ்கையுமாகாது" என்றுயிற்று ஶாஸ்த்ரஞ் சொல்லுகிறது; ப4க3வத்3தா3ஸ்யாநுப4வத்தால் வந்த களிப்பும், அதில்லாதாரை இகழ்கையும் ஶாஸ்த்ரங்களோடு அவிருத்3த4மென்னுமிடமும், முக்தருடையவும் ஸ்ரீநாரத3ப4க3வானுடையவும் வ்ருத்தாந்தங்களிலே ப4க3வத3நுப4வஜநிதமான ப்ரீதியில் அவை ஆமென்றும் கொள்வது.

---

ப— அஞ்சாம் திருவாய்மொழியில்—கீழ்ச்சொன்ன ப4க3வத்ப்ரகாரதயா ஶேஷ த்வத்தில் தமக்குப் பிறந்த ரஸாதிஶயத்தாலே அத்யந்தஹ்ருஷ்டராய், ப்ரதிஸம் ப3ந்தி4யான ஶேஷியினுடைய ஆபந்நிவாரகத்வத்தையும், அஸுரநிரஸந ஸாமர் த்2யத்தையும், ஆர்த்தஸம்ரக்ஷணத்தையும், அபி4மதவிரோதி4நிவர்த்தகத்வத்தையும், அவதாரப்ரயோஜநத்தையும், அதிஶயித போ4க்3யதையையும், ஆஶ்ரிதபக்ஷபாதத் தையும், அர்ச்சாவதாரஸௌலப்4யத்தையும், உப4யவிபூ4திநாத2த்வத்தையும், விலக்ஷண விக்3ரஹயோக3த்தையும் அநுஸந்தி4த்து ப்ரீதிப்ரகர்ஷத்தாலே ஸம்ப்4ராந்தராகாதாரை நிந்தி3த்தும், உகந்து ஆடுவது பாடுவதாவாரை உகந்தும் இந்த ஶேஷத்வஸாரஸ்யத்தை உபபாதி3க்கிறார்.

---

இ— அஞ்சாம் திருவாய்மொழியில் — கீழ் தமக்குண்டான ப4க3வத3நுப4வ ப்ரீதி ப்ரகர்ஷத்தாலே களித்து, அதுக்கு தூ3ரஸ்த2ரானவரை இகழ்ந்து, அதுக்குக் கூட்டர ஞரைக் கொண்டாடுகிறார். A முந்நீர் ஞாலத்தில் இவர்க்குண்டான ஶோகம் நமக்கு நிலமாகிலாயிற்று இந்த ஹர்ஷமும் நமக்கு நிலமாவது. வீதராக3ராயிருப்பார்க்கு ஶோகஹர்ஷங்களும் தத்ப்ரயுக்தமான ராக3த்3வேஷங்களும் ஶாஸ்த்ரங்களிலே நிஷேதி4யாநிற்க, ஸாத்விகாக்3ரேஸரரான இவர்க்கு இவை கூடினபடி எங்ஙனே யென்னில்; விஷயச்செருக்காலே வந்த ஹர்ஷமும் தத3பா4வத்திற்பிறக்கும் ஶோக மும், தத்ப்ரயுக்தமான ராக3த்3வேஷமுமாயிற்று ஶாஸ்த்ரங்களில் நிஷேதி4த்தது; ப4க3வத3நுப4வத்தால் வந்த ஹர்ஷமும், அதுக்கு தூ3ரஸ்த2ரை நிந்தி3க்கையும், இவ்வநுப4வத்துக்குக் கூட்டானரைக் கொண்டாடுகையும் ஶாஸ்த்ரஸித்3த4ம். இதுதான் முக்தர்பக்கலிலும், 1. "सर्वसंशयनिर्मुक्तो नारदस्सर्वधर्मवित्" (ஸர்வஸம்ஶய

---

**இ—நிர்முக்தோ நாரத$_3$ஸ்ஸர்வத$_4$ர்மவித்)** என்கிற ஸ்ரீநாரதப$_4$க$_3$வான் பக்கலிலும், மது$_4$வநமழித்த திருவடி முதலான முதலிகள் பக்கலிலும் காணலாம்; இவரும் ப$_4$க$_3$வத$_3$நுப$_4$வ ப$_3$லாத்க்ருதராய், அஜ்ஞரையும், விஷயப்ரவணரையும், ப$_4$க$_3$வத் ஸம்ப$_3$ந்த$_4$மின்றிக்கே ஶிஷ்டாபி$_4$மாநிகளானவரையும், பரபரக்கு அற்று அவிஶேஷ ஜ்ஞரானவரையும், எம்பெருமானை ஆஶ்ரயித்து ப்ரயோஜநாந்தரபரரானவரையும், ராக்ஷஸப்ரக்ருதிகளையும், ஆஸுரப்ரக்ருதிகளையும் நிந்தி$_3$த்து, ப$_4$க$_3$வத்$_3$கு$_3$ண ப்ரஸ்தாவத்திலே விக்ருதராயிருக்குமவர்களைக கொண்டாடுகிறார்.

---

**ஈ— a புகழுநல்லொருவனிலே - ப$_4$க$_3$வத$_3$நுப$_4$வத்தைப் பண்ணி, அத்தால் வந்த ஹர்ஷப்ரகர்ஷத்தாலே களித்து, அதில்லாதாரை நிந்தி$_3$த்து, உடையாரைக் a$_2$ கொண்டாடிச் சொல்லுகிறது - மொய்ம்மாம் பூம்பொழில்; b இவர்க்கு A முந்நீர்ஞாலத்தில் ப்ரக்ருதி ஸம்ப$_3$ந்த$_4$த்தை அநுஸந்தி$_4$த்தும், இதரவிஷய ப்ராவண்யத்தை அநுஸந்தி$_4$த்தும் ஶோகித்த ஶோகம் சிலர்க்கு நிலமாகிலாயிற்று—இத்திருவாய்மொழியில் - ப$_4$க$_3$வத$_3$நுப$_4$வத்தாலே ஹ்ருஷ்டரான இவருடைய ஹர்ஷம் சிலர்க்கு நிலமாவது; c இவரும் ப$_4$க$_3$வத$_3$நுப$_4$வம் பண்ணுகிறாராகில் நாமும் அவ்விஷயத்திலே கைவைத்தோமாகில், இவர்க்கு இங்ஙனிருப்பானென் ? நமக்கு இங்ஙனிராதொழிவானென் ? என்னில்; c$_2$ நாமாகிறோம் கண்டார்க்கு ஒளிக்கவேண்டுமவையாய், c$_3$ ஶாஸ்த்ரங்களெல்லாம் ஒருமுகம்செய்து நிஷேதி$_4$க்கிறவையாய், முதல் தன்னிலே கிடையாதவையாய், c$_4$ கிடைத்தாலும் நிலைநில்லாதவையாய், அநந்தரம் நரகத்திலே**

---

**அ—** மொய்ம்மாம் பூம்பொழில் ப்ரவேஶம். a ஸர்வாத்மப$_4$ாவத்தைச் சொன்ன அனந்தரம், ப$_4$க$_3$வத்$_3$விஷயத்தில் அந்வயமுடையாரைக் கொண்டாடி அதில்லாதாரை நிந்தி$_3$க்கிறதுக்கு ஹேது அருளிச்செய்கிறார் (புகழுநல்லொருவனிலே இத்யாதி$_3$) a,a$_2$ (புகழுநல்லொருவனிலே என்று தொடங்கி, கொண்டாடிச் சொல்லுகிறது மொய்ம்மாம் பூம்பொழில் என்னுமளவும்) ஸங்க்ஷேபம். b "ஹர்ஷப்ரகர்ஷத்தாலே" இத்யுக்தஹர்ஷப்ரகர்ஷாவதி$_4$ம் த்$_3$ருஷ்டாந்தமுகே$_2$ந த$_3$ர்ஶயதி (இவர்க்கு முந்நீர்ஞாலத்தில் இதி) c,d அவாங்மநஸகோ$_3$சரமான ஶோகஹர்ஷங்கள் நமக்குண்டாகவேண்டாவோ என்று ஶங்கித்து, அதில்லாமைக்கு ஹேது நமக்கு இதரவிஷய ப்ராவண்யம் பள்ளமடையாயிருக்கையாலே என்று பரிஹரிக்கிறார் (இவரும் இத்யாதி$_3$) இவ்வாக்யாநந்தரம் - இவராகிறார் ப$_4$க$_3$வத்$_3$விஷயத்தினுடைய லாப$_4$ாலாப$_4$ங்களில் பிறக்கும் ஶோகஹர்ஷங்களொழிய அறியாதபடி B "நின்னலாலிலேன் காண்" என்னும் C ஆராதகாதலையுடையவர், ஆகையாலே இவர்க்கு இங்ஙனுண்டாகக் கூடும் - என்று வாக்யஶேஷம் அத்$_4$யாஹர்த்தவ்யம்.

---

**ஜீ—** மொய்ம்மா ப்ரவேஶே. a ஸங்க்$_3$ரஹ ஸங்க$_3$தி (புகழுநல் இத்யாதி$_3$) b இத்திருவாய்மொழியிலோடுகிற ஹர்ஷத்துக்கு அவதி$_4$ ஏதென்ன (இவர்க்கு முந்நீர் இத்யாதி$_3$) c$_2$ (நாமாகிறோம்) இத்யாதி$_3$ வாக்யாநந்தரம்—இவ்வாழ்வாராகிறார் ப$_4$க$_3$வத்$_3$விஷயலாப$_4$ாலாப$_4$ங்களில் பிறக்கும் ஶோகஹர்ஷங்களொழிய மற்றொன்றறியாதே B "நின்னலாலிலேன்" என்னும்படியான C ஆராதகாதலையுடையராகையாலே இவர்க்கு இங்ஙனிருக்கக்கூடும் — என்று வாக்யஶேஷத்தை அத்$_4$யாஹரித்துக்கொள்வது. d (ஶோகஹர்ஷங்களோயாயிற்றறிவது இதி) "ஆகையால் இந்த இதரவிஷய ப்ராவண்யமே ப$_4$க$_3$வத்$_3$விஷய லாப$_4$ாலாப$_4$ங்களில் பிறக்கும் ஶோகஹர்ஷங்களில்லாமைக்கு அடி" என்று ஶங்கைக்குப் பரிஹாரம். c$_3$ (ஶாஸ்த்ரங்களெல்லாம் ஒருமுகஞ்செய்து நிஷேதி$_4$க்கிற;

---

A 3-2. B 2-3-7. C 2-1-11.

ஈ—முட்டி அநர்த்த2த்தை விளைக்கக்கடவதான இதர்விஷயங்களுடைய லாப4ாலாப4ங்

அ—ட3(ஶாஸ்த்ரங்களெல்லாம்)என்றது-1."தஸ்மாதே3வம்வித் ஶாந்தோ தா3ந்த உபரதஸ் திதிக்ஷுஸ் ஸமாஹிதோ பூ4த்வா ஆத்மந்யேவாத்மாநம் பஶ்யேத்" என்றும், 2. "நாவிரதோ து3ஶ்சரிதாந்நாஶாந்தோ நாஸமாஹித: | நாஶாந்தமாநஸோ வாபி ப்ரஜ்ஞாநேநைநமாப்நுயாத் ||" என்றும், 3. "அங்க3ாரஸத்3ருஶீ நாரீ க்4ருதகும்ப4ஸம: புமாந் | தஸ்மாந்நாரீஷு ஸம்ஸர்க்க3ம் தூ3ரத: பரிவர்ஜயேத் ||" என்றும், 4. "விஷஸ்ய விஷயாணாம் ச தூ3ரமத்யந்தமந்தரம் | உபபு4க்தம் விஷம் ஹந்தி விஷயா: ஸ்மரணாத3பி ||" என்றும், 5. "ப3லவாநிந்த்3ரியக்3ராமோ வித்3வாம்ஸமபி கர்ஷதி | மாத்ரா ஸ்வஸ்ரா து3ஹித்ரா வா ந விவிக்தாஸநோ ப4வேத் ||" இத்யாதி3யையும் கடாக்ஷித்து. 1. "ஶாந்தோ தா3ந்த:"என்றது-ஶமத3மங்களையுடையவன்; 1. "உபரத:" என்றது-"ஶமத3மங்களுமுண்டு" என்று இறுமாந்திராதவன்; 1. "திதிக்ஷு:" க்ஷமாவான்; 1. "ஏவம்வித்" ப்3ரஹ்மோபாஸநவித் என்றபடி. 2. " து3ர்சரிதாத3விரத ஏநம் நாப்நுயாத், அஶாந்த ஏநம் நாப்நுயாத், அஸமாஹித ஏநம் நாப்நுயாத், அஶாந்தமாநஸோऽப்யேநம் நாப்நுயாத்; கிந்து ப்ரஜ்ஞாநேநைநமாப்நுயாத் " என்றபடி. ட4 6. "ஶம்பாசலம் ப3ஹுளது3:க்க2மநர்த்த2ஹேது: அல்பீய இத்யபி விம்ருஷ்டிஷு த்3ருஷ்டதே3ாஷம் | து3ர்வாஸநாத்3ரடி4மதஸ் ஸுக2மித்3ரியோத்த2ம் ஹாதும் ந மே மதிரலம் வரத3ாதி4ராஜ ||" இத்யாதி3யைக் கடாக்ஷித்து (கிடைத்தாலும் இத்யாதி3) 7. "கௌ3ளடீ3 பைஷ்டீ ச மாத்4வீ ச" 8. "ஸ்த்ரியோ ஹி நரகத்3வாரம்" இத்யாதி3. A "அடியார்கள் குழாங்களை-உடன்கூடுவதென்று கொலோ" இதி ஸமூஹிபூ4யாநுப4விதும் யோக்3யஸ்ய, 9. "த்4யாயீத" 10. "உபாஸீத" இத்யாதி3பி4ஶ் ஶாஸ்த்ரைரைககண்ட்2யேந விதீ4யமாநஸ்ய 11. "ப4க்தாநாம் த்வம் ப்ரகாஶஸே" B "பத்துடை அடியவர்க்கெளியவன்" இத்யத்யந்தஸுலப4ஸ்ய 12. " தச்ச ஸம்ஸ்ம்ருத்ய ஸம்ஸ்ம்ருத்ய " 13. "ந ச புநராவர்த்ததே" இதி ப்ரகாரேண 14. "நிரஞ்ஜந: பரமம் ஸாம்யமுபைதி" இத்யுச்யமாநாப்4யுத3யாவஹஸ்ய ப4க3வத்3விஷயஸ்ய லாப4ாலாப4ஜநிதாவஸ்ய ஶோகஹர்ஷௌ; அயம் பராங்குஶார்யஶ்ச 15. "ப3ால்யாத் ப்ரப்4ருதி ஸுஸ்நிக்3தே4ா லக்ஷ்மணோ லக்ஷ்மிவர்த்த4ந:" இதிவத் C "அறியாக்காலத்துள்ளே அடிமைக்கண் அன்புசெய்வித்து" D "மூலையோ முழுமுற்றும் போந்தில" இதி ப்ரகாரேண ப3ால்யாத்ப்ரப்4ருதி E "உண்ணும்சோறு பருகுநீர் தின்னும் வெற்றிலையுமெல்லாம் கண்ணன்" இதி ப4க3வதே3கத4ாரகபோஷகபோ4க்3ய:, தஸ்மாத் F "உண்டுகளித்தேற்கும்பரென்குறை" இதி ப்ரகாரேணுதிஹ்ருஷ்டோ ப4வதி; தஸ்மாத் பராங்குஶார்யஹர்ஷஸ்ய ச அஸ்மதீ3யஹர்ஷஸ்ய ச கத2ம் ஸாம்யம் ப4வேத் ? இதி ப4ாவ:. e 16. "நித்யஞ்ச ஸமசித்தத்வமிஷ்டாநிஷ்டோபபத்திஷு | மயி சாநந்யயோகே3ந ப4க்திரவ்யபி4சாரிணீ ||" 17. "ஶமத3மநியதாத்மா ஸர்வபூ4தாநுகம்பீ விஷயஸுக2விரக்தோ

ஜீ—வையாய்) என்றது-1. "தஸ்மாதே3வம்வித் ஶாந்தோ தா3ந்த உபரதஸ் திதிக்ஷுஸ் ஸமாஹிதோ பூ4த்வா ஆத்மந்யேவாத்மாநம் பஶ்யேத்" 2. "நாவிரதோ து3ஶ்சரிதாந்நாஶாந்தோ நாஸமாஹித: | நாஶாந்தமாநஸோ வாபி ப்ரஜ்ஞாநேநைநமாப்நுயாத் ||" 3. "அங்க3ாரஸத்3ருஶீ நாரீ க்4ருதகும்ப4ஸம: புமாந் | தஸ்மாந்நாரீஷு ஸம்ஸர்க்க3ம் தூ3ரத: பரிவர்ஜயேத் ||" 5. "மாத்ரா ஸ்வஸ்ரா து3ஹித்ரா வா ந விவிக்தாஸநோ ப4வேத் | ப3லவாநிந்த்3ரியக்3ராமோ வித்3வாம்ஸமபி கர்ஷதி ||" 4. "விஷஸ்ய விஷயாணாஞ்ச" இத்யாதி3யைப்பற்ற. 1. "உபரத:"-"ஶமத3மங்களுண்டு" என்னும் அபி4மாநமில்லாதவன். 1. "திதிக்ஷு:"-க்ஷமாஶீல:. ட4 6. "ஶம்பாசலம்" இத்யாதி3யைப்பற்ற (கிடைத்தாலும் இத்யாதி3) ஊ(ஶாஸ்த்ரங்கள் ஆகாதென்று நிஷேதி4த்தஶோகஹர்ஷங்கள்)என்றது 16. "நித்யஞ்ச ஸமசித்தத்வமிஷ்டாநிஷ்டோபபத்திஷு" 18. "அநவஸாத3ாநுத்3த4ர்ஷேப்4ய:"

A 2-3-10. B 1-3-1. C 2-3-3. D திருவிருத்தம் 60. E 6-7-1. F 10-8-7.

ஈ—களில் பிறக்கும் d ஶோகஹர்ஷங்களேயாயிற்று அறிவது. e வீதராக$_3$ராய் ஸாத்விகாக்$_3$ரேஸரராயிருக்கிற இவர்க்கு e$_2$ ஶாஸ்த்ரங்கள் "ஆகாது" என்று நிஷேதி$_4$த்த ஶோகஹர்ஷங்கள் கூடினபடி எங்ஙனேயென்னில்; இவரது ஶாஸ்த்ரங்களிலே நிஷேதி$_4$த்த ஶோகஹர்ஷங்களன்று; ஸமஸ்த கல்யாண கு$_3$ணாத்மகனான ஸர்வேஶ்வரனை அநுப$_4$வித்து, அவ்வநுப$_4$வஜநிதப்ரீதியாயிற்று-இவர்க்கு e$_2$ ஹர்ஷமாகிறது; "இப்படி வகுத்த விஷயத்தை அநாதி$_3$காலம் இழந்து இதரவிஷயப்ரவணராய் அநர்த்த$_2$ப்படுவோமே!" என்னுமதாயிற்று ஶோகம். f "காமம் ஆகாது" என்று நிஷேதி$_4$யாநிற்கச்செய்தயும், 1. "निदिध्यासितव्यः" (நிதி$_3$த்$_4$யாஸிதவ்ய:) என்று கொண்டு - ப$_4$க$_3$வத்காமத்தை ஶாஸ்த்ரங்கள் விதி$_4$யாநின்றதிறே; g இனி முக்தரும்

அ—ஜ்ஞாநதீ$_3$ப்த: ப்ரஶாந்த: | அஸியதஸியதாங்கோ நைவ ஹ்ருஷ்டோ ந ருஷ்ட: ப்ரவஸித இவ கே$_3$ஹே வர்த்ததே யஸ் ஸ முக்த: ||" 2. "துல்யநிந்த$_3$ாஸ்துதிர் மௌநீ" 3. "துல்யோ மித்ராரிபக்ஷயோ:" 4. "துல்யப்ரியாப்ரியோ தீ$_4$ர:" 5. "ஸமது$_3$:க்க$_2$ஸுக$_2$ம் தீ$_4$ரம் ஸோ$(\mathrm{S})$ம்ருதத்வாய கல்பதே" இத்யாதி$_3$வசநஜாதஞ்ச, 6. "விவேகவிமோகாப்$_4$யாஸக்ரியா கல்யாணாநவஸாத$_3$ாநுத்$_3$த$_4$ர்ஷேப்$_4$யஸ்ஸம்ப$_4$வாந்நிர்வசநாச்ச" இத்யத்ர அநுத்$_3$த$_4$ர்ஷஶப்$_3$த$_3$ார்த்த$_2$ாபி$_4$த$_4$ாநாவஸரே 7. "அதிஸந்தோஷஶ்ச விரோதீ$_4$த்யர்த்த$_2$:" இதி ப$_4$ாஷ்யகாரோக்திஞ்ச ஹ்ருதி$_3$ நித$_4$ாய ஶங்கதே (வீதராக$_3$ராய் இதி) e$_2$ இவ்விடத்தில் ஹர்ஷமென்றது-ப$_4$க$_3$வத்காமத்தை. f இதரவிஷயங்களில் காமமாகாது, ப$_4$க$_3$வத்$_3$விஷயத்தில் காமமாம் என்றதுக்கு நியாமகவசனம் (காமம் இத்யாதி$_3$) யத்$_3$வா, விஷயபே$_4$த$_3$ாத$_3$விரோத$_4$ம் த்$_3$ருஷ்டாந்தமுகே$_2$ந த$_3$ர்ஶயதி (காமமாகாதென்று இதி) அதாவது - 8. "ஶாந்தோ த$_3$ாந்த:" இத்யாதி$_3$யாலே - காமமாகாதென்று நிஷேதி$_4$த்திருக்கச்செய்தேயும், 1. "நிதி$_3$த்$_4$யாஸிதவ்ய:" என்று - ப$_4$க$_3$வத்காமமுபாதே$_3$யமென்றாற்போலே, "இதரவிஷயங்களைப் பற்றிவருகிற ஶோகஹர்ஷங்களே த்யாஜ்யமொழிய ப$_4$க$_3$வத்$_3$விஷயத்தில் ஶோகஹர்ஷங்கள் அநுபாதே$_3$யமன்று" என்று ஒருருவிலே அருளிச்செய்வர். ஆக, ப$_4$க$_3$வத்$_3$விஷயத்தில் ஶோகஹர்ஷங்கள் உபாதே$_3$யங்கள் என்றபடி. g ப$_4$க$_3$வத்$_3$விஷயாதீ$_4$ந ஹர்ஷப்ரகர்ஷஸ்த்யாஜ்யோ ந இத்யத்ர 9. "நிரஞ்ஜந: பரமம் ஸாம்யமுபைதி" இதி ஸகலதோ$_3$ஷவிநிர்முக்தாந் முக்தாம்ஶ்ச, ப்ரக்ருதிமண்ட$_3$ல ஏவ ஜ்ஞாநாதி$_4$கத்வேந ப்ரஸித்$_3$த$_4$ம் நாரத$_3$ஞ்ச, 10. "அந்யத்ர பீ$_4$ஷ்மாத்$_3$க$_3$ாங்கே$_3$யாத் அந்யத்ர ச ஹநூமத: | ஹரிணீகு$_2$ரமாத்ரேண சர்மணா மோஹிதம் ஜக$_3$த் ||" இதி விரக்தாக்$_3$ரேஸரத்வேந உச்யமாநம் ஹநூமந்தஞ்ச, பே$_4$ாக$_3$ப்ரவணாந் வாநரவீராம்ஶ்ச, தத்ர விஶேஷஜ்ஞம் ஸுக்$_3$ரீவஞ்ச த்$_3$ருஷ்டாந்தத்வேநாஹ (இனி முக்தரும் இத்யாதி$_3$நா) h (அஹம் இத்யாதி$_3$) பரிபந்தி$_2$ந:-

ஜீ—2. "துல்யநிந்த$_3$ாஸ்துதிர் மௌநீ" 3. "துல்யோ மித்ராரிபக்ஷயோ:" 4. "துல்யப்ரியாப்ரியோ தீ$_4$ர:" 5. "ஸமது$_3$:க்க$_2$ஸுக$_2$ம் தீ$_4$ரம் ஸோ$(\mathrm{S})$ம்ருதத்வாய கல்பதே" இத்யாதி$_3$யைப்பற்ற. f ப$_4$க$_3$வத்$_3$விஷயத்தைப்பற்றி வந்தவையானாலும் ஶோகஹர்ஷங்கள் த்யாஜ்யமன்றோ? என்ன (காமம் இத்யாதி$_3$) அதாவது–8. "ஶாந்தோ த$_3$ாந்த:" இத்யாதி$_3$யாலே-காமத்தை நிஷேதி$_4$க்கச்செய்தேயும் 1. "நிதி$_3$த்$_4$யாஸிதவ்ய:" என்று - விதி$_4$க்கையாலே ப$_4$க$_3$வத்காமம் உத்$_3$தே$_3$ஶ்யமானவோபாதி இதர விஷயங்களைப் பற்றிவரும் ஶோகஹர்ஷங்கள் த்யாஜ்யமானாலும் ப$_4$க$_3$வத்$_3$விஷயத்தைப் பற்றிவரும் ஶோகஹர்ஷங்கள் உத்$_3$தே$_3$ஶ்யமென்றபடி. g ப$_4$க$_3$வத்$_3$விஷயத்தில் ஹர்ஷபர்யாயமான காமம் த்யாஜ்யமன்று என்னுமதுக்கு அநுஷ்ட$_2$ாநம் காட்டுகிறார் (இனி முக்தரும்

ப்ர—(மோரய்மா ப்ரவேஶ) 1. बृहदारण्यके (४-४) मैत्रेयीब्राह्मणे "आत्मा वा अरे द्रष्टव्यः श्रोतव्यो मन्तव्यो निदिध्यासितव्यः"

ஈ—ப$_4$க$_3$வத$_3$நுபூ$_4$வத்தாலே 1. “अहमन्नमहमन्नमहमन्नम्” (அஹமந்நமஹமந்நமஹமந்நம்) என்று களியாநிற்பர்களிறே; g$_3$ 2. “सर्वसंशयनिर्मुक्तो नारदस्सर्वधर्मवित्” (ஸர்வஸம்ஶய நிர்முக்தோ நாரத$_3$ஸ்ஸர்வத$_4$ர்மவித்) என்று சொல்லப்படுகிற நாரத$_3$ாதி$_3$களும் ப$_4$க$_3$வத்ஸந்நிதி$_4$யிலே வந்தவாறே ஆடுவது பாடுவதாகாநிற்பர்களிறே; விரக்தரில் தலையான திருவடியும் பிராட்டியைக்கண்டுவந்த ஹர்ஷத்தாலே முதலிகளைப்பார்த்து “நீங்கள் மது$_4$வநத்தையழித்து பு$_4$ஜியுங்கோள்; h 3. ‘अहमावारयिष्यामि युष्माकं परिपन्थिनः’ (அஹமாவாரயிஷ்யாமி யுஷ்மாகம் பரிபந்தி$_2$நः) என்று-காத்திருந்த த$_3$தி$_4$முக$_2$ாதி$_3$களை நான் i தொட்டுத்தருகிறேன்” என்றுனிறே; j மஹாராஜர்க்கு “ உம்முடைய காவற்காடு j$_2$ அழிந்தது” என்று அறிவிக்க, “நம்மோடு பண்ணிப்போன ஸமயமுந்தப்பி, நாம்தாம் ‘தீக்ஷ்ணத$_3$ண்ட$_3$ர்’ என்று அறியச்செய்தேயும் இவர்கள் காவற்காட்டை அழிக்கும்போது, j$_3$4. “ नैषामकृतकृत्यानामीदृशस्स्यादुपक्रमः ” (நைஷாமக்ருதக்ருத்யாநா

அ—ஶத்ருக்களை. i தொட்டுத்தருகிறேன்-ப்ரஹரித்துத்தருகிறேன் என்றபடி. j...m (மஹாராஜர்க்கு என்று தொடங்கி, போமாயிற்று என்னுமளவும்) ப்ராஸங்கி$_3$கம் என்னவுமாம். k (அப்போது பிறந்த

ஜீ—இத்யாதி$_3$) g$_2$(ஸர்வஸம்ஶயேத்யாதி$_3$) ப$_4$ாரதே ராஜஸூயே 2. “ஆவித்$_4$யத$_3$ஜிநம் ஹ்ருஷ்டோ ப$_4$விஷ்யத்$_3$பூ$_4$தஜல்பக:” இதி பூர்வார்த்த$_4$ம். 3. “இஷ்டம் மது$_4$வநம் ஹ்யேதத் ப$_4$க்ஷயிஷ்யத$_2$ வாநரா: | அஹமாவாரயிஷ்யாமி யுஷ்மாகம் பரிபந்தி$_2$ந:” இதி ஸுந்த$_3$ரகாண்டே$_3$. பரிபந்தி$_2$ந:—ஶத்ருக்களை. i தொட்டு-ப்ரஹரித்து. j$_3$ (நைஷாமித்யாதி$_3$) 4. “வநம் யத$_3$ாபி$_4$பந்

ப்ர—1. तैत्तिरीयकोपनिषदि(भृ-१०)“हा वुहा वुहा वु अहमन्नमहमन्नमहमन्नम् अहमन्नादोऽहमन्नादोऽहमन्नादः”

g$_2$2. महाभारते राजसूये “आविष्यदजिनं हृष्टो भविष्यद्भूतजल्पकः। सर्वसंशयनिर्मुक्तो नारदस्सर्वधर्मवित्”

h3. श्रीमत्सुन्दरकाण्डे (६२) “तानुवाच हरिश्रेष्ठो हनूमान्मारुतात्मजः। इष्टं मधुवनं ह्येतद्भक्षयिष्यथ वानराः॥ १ ॥ अव्यग्रमनसो यूयं मधु सेवत वानराः। अहमावारयिष्यामि युष्माकं परिपन्थिनः॥ २॥”

j$_2$4. (அழிந்ததென்று அறிவிக்க) (रा-सु-६३) “ततो मूर्ध्ना निपतितं वानरं वानरर्षभः। दृष्ट्वैवोद्विग्नहृदयो वाक्यमेतदुवाच ह॥ १ ॥ उत्तिष्ठोत्तिष्ठ कस्मात्त्वं पादयोः पतितो मम। अभयं ते भवेद्वीर सत्यमेवाभिधीयताम्॥ २॥ स तु विश्वासितस्तेन सुग्रीवेण महात्मना। उत्थाय सुमहाप्राज्ञो वाक्यं दधिमुखोऽब्रवीत्॥ ३॥ नैवर्क्षरजसा राजन् न त्वया नापि वालिना। वनं निसृष्टपूर्वं हि भक्षितं तच्च वानरैः॥ ४॥ एवं विज्ञाप्यमानं तं सुग्रीवं वानरर्षभम्। अपृच्छत्तं महाप्राज्ञो लक्ष्मणः परवीरहा॥ ११॥ किमयं वानरो राजन् वनपः प्रत्युपस्थितः। कृत्वार्थमभिनिर्दिश्य दुःखितो वाक्यमब्रवीत्॥ १२॥ एवमुक्तस्तु सुग्रीवो लक्ष्मणेन महात्मना।

ஈ மீத்₃ருஸஸ்ஸ்யாது₃பக்ரம:) என்று-ஸர்வதா₂ பிராட்டியைத் திருவடிதொழுதார்களாக வேணுமென்று. k அப்போது பிறந்த ஹர்ஷம் இருந்தவிடத்தில் இருக்கவொட்டாமே k₂ வாலானது ருஶ்யமூகபர்வதத்தின் கொடுமுடியிலே சென்று அறைந்ததாயிற்று, l நடுவே "காவற்காடு" என்றென்று உண்டாயிற்று ராஜபுத்ரர்களுடைய ஜீவநா த்₃ருஷ்டமாயிற்று. அன்றாகில் முதலிகளுடைய ஹர்ஷம் ராஜபுத்ரர்கள் m முதுகோடே போமாயிற்று. n அல்பம் வெற்றிலைச்சாறு மிடற்றுக்குக் கீழேயிழிந்தவன் தன்னைத்

அ—ஹர்ஷம்) என்றது-1. "ப்ரீதிஸ்பீ₂தாக்ஷௌ" இத்யாதி₃யைப்பற்ற. k₂(வாலானது) என்றது 2. "ததஶ்ஶ்ருத்வா நிநாத₃ம் தம் கபீநாம் கபிஸத்தம: | ஆயதாஞ்சிதலாங்கூ₃ல: ||" என்றத்தைப் பற்ற. l வாநராணாம் ஹர்ஷாதிஶயப்ரயுக்தவிகாரம் பராம்ருஶந், மத்₄யே மது₄வநாவஸ்தி₂திம் லாப₄த்வேநாநுஸந்த₃த₄ாதி (நடுவே காவற்காடென்று இதி) நடுவே இத்யாதி₃ - ப₄ட்டர் ஶ்ரீஸூக்தி; ரஸோக்தி. இதுக்குத் தாத்பர்யம்-முதலிகளுடைய ஹர்ஷத்துக்குப் போக்குவீடாக நடுவே ஒரு காவற்காடில்லாவிடில் ராஜபுத்ரர்களை வந்தணைப்பர்கள்; ஸுகுமாரமான திருமேனி யாகையாலே தீங்குவரும்; ஆகையாலே இதுண்டானது இவர்களுடைய ப₄ாக்₃யப₂லம் என்ற படி. m (முதுகோடே இதி) ராஜபுத்ரயோ: ராமலக்ஷ்மணயோரதிஸுகுமாரவிக்₃ரஹத்வாத் வாந ராணாம் ஸஸம்ப்₄ரமாஶ்லேஷேணாப்யதிக்₃லாநிர் ப₄விஷ்யதி கபிகரகுஸுமஸ்ரஜ இவேதி ப₄ாவ:. "முதுகோடே போமென்றது - முதலிகள் ஹர்ஷாதி₄க்யத்தாலே வந்து குதிக்கும்போது இவர்க ளுடைய முதுகொடிந்துபோம் என்றபடி" என்றும் சொல்லுவர்கள். n பராங்குமார்யஸ்ய ஏதா த்₃ருஹர்ஷாதிஶயஹேதும் லௌகிகத்₃ருஷ்டாந்தபூர்வகஞ்சாஹ (அல்பம் வெற்றிலைச்சாறு இத்யாதி₃) யத்₃வா, இப்படி இவர்க்கு அதிமாத்ரமான ஹர்ஷம் கூடுமோ? என்ன; கிம் புநர்ந்யாயத்தாலே கூடும் என்கிறார் (அல்பம் இத்யாதி₃) அத₂வா, இப்படி உந்மஸ்தகமான

ஜீ-நாஸ்தே ஸாதி₄தம் கர்ம வாநரை:"இத்யுத்தரார்த்த₄ம். k(அப்போது பிறந்த ஹர்ஷம்)என்றது-1. "ப்ரீதிஸ்பீ₂தாக்ஷௌ ஸம்ப்ரஹ்ருஷ்டௌ குமாரௌ த்₃ருஷ்ட்வா ஸித்₃த₄ார்த்தௌ வாநராணாம் ச ராஜா | அங்கை₃ஸ்ஸம்ஹ்ருஷ்டை: கர்மஸித்₃தி₄ம் விதி₃த்வா ப₃ாஹ்வோரா ஸந்நாம் ஸோऽதிமாத்ரம் நநந்த₃||"இத்யாதி₃யைப்பற்ற. 2. "ததஶ்ஶ்ருத்வா நிநாத₃ம் தம் கபீநாம் கபிஸத்தம: | ஆயதாஞ்சிதலாங்கூ₃லஸ்ஸோऽப₄வத்₃த்₄ருஷ்டமாநஸ: ||" என்றத்தைப்பற்ற (வாலானதித்யாதி₃) l ப்ராஸங்கி₃கம் (நடுவே இத்யாதி₃) ப₄ட்டர் ரஸோக்தி. m முதுகோடே போம் - தீங்குவரும். n இப்படி அத்யந்தஹர்ஷங்கூடுமோ? என்ன கிம்புநர்ந்யாயத்தாலே

ப்ர—लक्ष्मणं प्रत्युवाचेदं वाक्यं वाक्यविशारदः ॥ १३ ॥ आर्य लक्ष्मण संप्राह वीरो दधिमुखः कपिः। अङ्गदप्रमुखैर्वीरैः भक्षितं मधु वानरैः ॥ १४ ॥ नैषामकृतकृत्यानामीदृशः स्यादुपक्रमः ॥ १५ ॥ वनं यदाभिपन्नास्ते साधितं कर्म वानरैः। दृष्टा देवी न सन्देहो न चान्येन हनूमता ॥ १६ ॥ नह्यन्यस्साधने हेतुः कर्मणोऽस्य हनूमतः ॥ १७½ ॥

kl. (அப்போது பிறந்த ஹர்ஷம்) (रा-सु-६३) प्रीतिस्फीताक्षौ संप्रहृष्टौ कुमारौ दृष्ट्वा सिद्धार्थौ वानराणां च राजा। अङ्गैस्संहृष्टैः कर्मसिद्धिं विदित्वा बाह्वोरासन्नां सोऽतिमात्रं ननन्द ॥ २६ ॥

k₂ (வாலானது) (रा-सु-६४) ततश्श्रुत्वा निनादं तं कपीनां कपिसत्तमः। आयताञ्चितलाङ्गूलः सोऽभवद्धृष्टमानसः ॥ ३४½ ॥

ஈ—தானறிகிறிலன்; Aஉள்கலந்தார்க்கு ஓர் அமுதமாய், Bஅமுதிலுமாற்ற வினியனாய், C "எனக்கே தன்னைத் தந்த கற்பகமென்னமுதம்" என்று தாமே n2 முற்றூட்டாக இவ் வம்ருதத்தை பு4ஜித்த இவர்க்கு ஹர்ஷமுண்டாகச் சொல்லவேண்டாவிறே. o இப்படிப் பட்ட ப4க3வத3நுப4வத்தால் வந்த ப்ரீதிப்ரகர்ஷத்தாலே, o(1)முதலிலே இதில் அறிவில் லாதாரையும், o(2)அறிவுண்டாய்ப் புறம்பே அந்யபரராயிருப்பாரையும், o(3)ஶிஷ்டாபி4 மாநங்கொண்டாடி "அநுஷ்ட2ாநகாலங்களில் திருநாள் ஸேவிக்கலாகாது" என்று இருப்பாரையும், o (4) அறிவுண்டாய், புறம்பே பரபரக்கற்று "அதுக்கும் o2 இதுக்கும் வாசியென்?"என்று, ஸமாநபு3த்3தி4பண்ணியிருப்பாரையும், o(5)தங்களை ஆஸ்திகராக பு3த்3தி4பண்ணி அவ்வாஸ்திக்யத்துக்குப் புறம்பே விநியோக3ம் என்றிருப்பாரையும், o (6 ரஜஸ்தமஸ்ஸுக்களுக்கு அநுரூபமான க்ஷுத்3ரப2லங்களைக் கொண்டுபோவாரையும், o(7)தத3ர்த்த2மாகத் தாமஸதே3வதைகளை ஆஶ்ரயிப்பாரையும் எடுத்து,"அவர்களுக்குப் புறம்பே எல்லா நன்மைகளுமுண்டேயாகிலும்,ப4க3வத்3கு3ணங்களை அநுஸந்தி4த்தால் அவிக்ருதராகில் அவர்கள் அவஸ்துக்கள்"என்று அவர்களை நிந்தி3த்து,p"ஒரு ஜந்ம வ்ருத்தஜ்ஞாநங்கள் இன்றிக்கேயிருக்கச்செய்தேயும் ப4க3வத்3கு3ணாநுப4வம்பண்ணி

---

அ—ஹர்ஷந்தான் பிறக்கும்படி எங்ஙனே? என்ன (அல்பம் இத்யாதி3) n2 முற்றூட்டு-க்ருத்ஸ்ந பே4ாஜநம்; யதே2ஷ்டமான பே4ாஜநம் என்றபடி. n,n2 (அல்பம்) என்றதுக்கு ப்ரதிகோடி (முற்றூட்டு); o இத்திருவாய்மொழியால் ப2லிதமான ப்ரமேயங்களை எழுவகையாகக் கொய்சுபிடித்து அருளிச்செய்கிறார் (இப்படிப்பட்ட இத்யாதி3) o (1), (2) (முதலிலே இதில் அறிவில்லாதாரையும்) இத்யாதி3 கோடித்3வயஸ்ய ப்ரத2மக3ாத2ாயாம் "தண்கடல் வட்டத்துள்ளீர்"(1) இத்யத்ரோச்யமாநார்த்த2த்3வயே ச ஹ்ருத3யம். o (3) (ஶிஷ்டாபி4மாநம்கொண்டாடி) இத்யாதே3: - பஞ்சமக3ாத2ாயாம் "ஓதியுணர்ந்தவர் முன்னா என் சவிப்பார் மனிசரே" (5) இத்யாதெ3ள ஹ்ருத3யம். o (4) (அறிவுண்டாயே புறம்பே பரபரக்கற்று) இத்யாதே3: - த்ருதீயக3ாத2ாயாம் ஹ்ருத3யம். o2 இதுக்கும்-ப4க3வத்ப்ரதிபாத3கங்களுக்குப்; D"தங்கள் வாய்கொண்டு மானிடம்பாடாதே" இத்யத்ராயமர்த்த2ஸ்ஸ்பஷ்ட:. o (5) (தங்களை ஆஸ்திகராக பு3த்3தி4பண்ணி) இத்யாதே3: சதுர்த்த2க3ாத2ாயாம் ஹ்ருத3யம். தத்ர க்3ராமணிஶப்3த3ஸ்ய வைஷ்ணவக்3ராமணிபரத்வாத்,அந்யேஷாம் ப்ரபந்நஜந ஸப4ாயாமாக3மநப்ரஸங்க3ாப4ாவாத். o (6) (ரஜஸ்தமஸ்ஸுக்களுக்கு) இத்யாதே3: ஸப்தமக3ாத2ாயாம் நவமக3ாத2ாயாஞ்ச ஹ்ருத3யம். o (7) (தத3ர்த்த2மாகத் தாமஸதே3வதைகளை ஆஶ்ரயிப்பாரையும்) இத்யஸ்ய-"முனிவின்றி"(6) இத்யத்ர ஹ்ருத3யம். E"தன்னேட்டையானொருவனுக்கோருத்கர்ஷம் சொல்லுகையன்றிக்கே" இதி வாக்யே ஸ்பஷ்டோऽயமர்த்த2:. p "முனிவின்றி ஏத்திக்குனிப்பார் முழுதுணர் நீர்மையினாரே" (6) "ஆர்வம் பெருகிக்குனிப்பார் அமரர்தொழப் படுவாரே" (8) இத்யேதே ஹ்ருதி3 நித4ாயாஹ (ஒரு ஜந்மவ்ருத்தஜ்ஞாநங்கள் இத்யாதி3) 1."விஷ்ணௌ ரத்2யாஸு சாயாதே ஆஸ்த2ாநஞ்சாஸ்தி2தே ஸதி | மத்4யே ஸந்த்4யாமநுப்ராப்தா

---

ஜீ—ப2லிப்பிக்கிறார் (அல்பமித்யாதி3) n2 முற்றூட்டாக-க்ருத்ஸ்ந பே4ாஜநமாக; யதே2ஷ்டாநுப4வமாக இத்யர்த்த2:. o இத்திருவாய்மொழியால் ப2லிதமான ப்ரமேயங்களை ஏழுவகையாக ஸங்க்3ரஹித்தருளிச்செய்கிறார் (இப்படிப்பட்ட இத்யாதி3) o (3) (ஶிஷ்டாபி4மாநம் கொண்டாடி) என்றது-"ஓதியுணர்ந்தவர்"(5) இத்யாதி3யைப்பற்ற. o (6) (க்ஷுத்3ரப2லங்களைக் கொண்டுபோவாரையும் என்றது) "அமரத்துணியவல்லார்"(9) என்ற கேவலரைப்பற்ற. o (1) (முதலிலே இதில் அறிவில்லாதாரையும்) இத்யாதி3களுக்கும் - பாட்டுக்களின் வ்யாக்2யாநங்களில் கண்டுகொள்வது.

---

A 1-6-5. B 1-6-6. C 2-7-11. D ஈடு 3-5-3. E ஷ்டி 3-6-6.

ஈ—c, செவ்வித்தாமரைபோலே இருந்துள்ள திருக்கண்களையுடையனும். (உலகேழும் இத்யாதி₃) d வடிவழகில் புண்ட₃ரீகாக்ஷத்வம்போலே கு₃ணங்களில் ப்ரளயாபத்ஸக₂த்வமும். (வையம் இத்யாதி₃) வையமென்கிறது-பூ₄மியை. வானமென்கிறது உபரிதந லோகங்களை. மனிசரென்கிறது - வையத்திலுள்ளாரை. தெய்வமென்கிறது - வானத்திலுள்ளாரை. மற்றுமென்கிறது - திர்யக்ஸ்த₂ாவரங்களை. திரிய, மற்றும் என்கிறது-அவற்றுக்கு ஆரம்ப₄கமான பூ₄தபஞ்சகங்களை. திரிய மற்றுமென்கிறது-அவைதனக்கும் காரணமான மஹத₃ாதி₃களை. முற்றுமென்கிறது-கீழ்ச்சொன்னவை எல்லாவற்றையும். e "முற்றுமாய் வெளிப்பட்ட இவற்றை செய்யசூழ் சுடர்ஞானமாய்-படைத்தான்" என்னுதல்; f அன்றிக்கே, A "தனிமாப்புகழே எஞ்ஞான்றும் நிற்கும்படியாய்த் தான்தோன்றி" என்றும், 1. "बहु स्याम्" (ப₃ஹு ஸ்யாம்) என்றும் சொல்லுகிறபடியே முற்றவுமுண்டாகைக்காக g இவையாய்க்கொண்டு தான்தோன்றி இவற்றைப் படைத்தான் என்னுதல். h அப்போது, வெளிப்பட்டு என்கிறது-ஸ்ருஷ்ட்யுந்முக₂னாய்த் தோற்றி என்றபடி. (செய்ய இத்யாதி₃) ஞானத்துக்குச் செவ்வையாவது - வருத்தமற்றிருக்கை. அன்றிக்கே, செவ்வையாவது - i2. "यथापूर्वमकल्पयत्" (யத₂ாபூர்வமகல்பயத்) என்கிறபடியே தத்தத்கர்மாநுரூபமாகப் படைத்த செவ்வையாதல்.

---

அ—என்றும், 3."கு₂ம்பீ₄ர" இத்யாதி₃யை (செவ்வி) என்றும் அருளிச்செய்கிறார். "செய்ய" என்று-செம்மையைச் சொல்லுகையாலே, அதிலே இத்தனையும் விவக்ஷிதம் என்று கருத்து. d "செய்ய தாமரைக்கண்ணனாய்" என்ற அநந்தரம், "உலகேழுமுண்ட அவன்" என்றதுக்கு வாஸனை (வடிவழகில் இத்யாதி₃) e,f யத்₃வா, வடிவழகில் ஆகர்ஷகத்வம் ஸாத₄ர்ம்யம்; "முற்றுமாய் வெளிப்பட்டு இவை படைத்தான்" என்றதுக்கு இரண்டர்த்த₂ம் - முற்றுமாய் ப்ரமாண ப்ரதிபந்நங்களான இவற்றைப்படைத்தான் என்னுதல், முற்றுமுண்டாகைக்காக இவையாய்க்கொண்டு தான் தோன்றி இவற்றைப் படைத்தான் என்னுதல். e முந்தின அர்த்த₂ம் அருளிச்செய்கிறார் (முற்றுமாய் வெளிப்பட்ட இவற்றைச் செய்ய சூழ்சுடர் ஞானமாய்ப் படைத்தான் என்னுதலென்று) f இரண்டாமர்த்த₂ம் அருளிச்செய்கிறார் (அன்றிக்கே இத்யாதி₃) ஞானமாய்-ஜ்ஞானத்தையுடையனும் என்றபடி. g (இவையாய்க்கொண்டு தான்தோன்றி) வெளிப்பட்டின் அர்த்த₂ம். இத்தால்-குலாலாதி₃களைப்போல் அன்றிக்கே, சித₃சித்₃விஶிஷ்டனாய்க்கொண்டு ஸ்ருஷ்டிக்கும் என்றபடி. h இந்த அர்த்த₂த்துக்கு வெளிப்படுகையும் - ஸ்ருஷ்டியாய், படைக்கையும் - ஸ்ருஷ்டியாம்போது பௌநருக்த்யம் வருமென்று அத்தைப் பரிஹரிக்கிறார் (அப்போது என்று தொடங்கி) J முந்தின அர்த்த₂த்துக்கு "வெளிப்பட்டு இவை" என்றதுக்கு அர்த்த₂ம் அருளிச்செய்கிறார் (வெளிப்பட்டு

---

ஜீ—d "செய்யதாமரைக் கண்ணனாய்" என்ற அநந்தரம், "உலகேழுமுண்ட அவன்" என்றதுக்கு வாஸனை (வடிவழகில் இத்யாதி₃) e முற்றுமாய் வெளிப்பட்ட இவற்றை - முற்றுமாய் ப்ரமாண ப்ரதிபந்நமான இவற்றை. f அர்த்த₂ாந்தரம் (அன்றிக்கே தனிமா இத்யாதி₃) இந்த அர்த்த₂த்துக்கு "வையம்" என்று தொடங்கி, முற்றுமாய் - முற்றுமுண்டாகைக்காக என்றபடி. g (இவையாய்க்கொண்டு) இவையுண்டாக்குகைக்காக. h இந்தப் பக்ஷத்திலே "வெளிப்பட்டு" என்றதுக்கு

---

ப்ர— (செய்ய) i2. तैत्तिरीयके श्रीनारायणे (१) "सूर्याचन्द्रमसौ धाता यथापूर्वमकल्पयत् । दिवं च पृथिवीञ्चान्तरिक्षमथो सुवः ॥"

---

A 8-10-7.

ஈ—(சூழ்) கார்யஜாதத்தையெல்லாம் வ்யாபித்திருக்கை. (சுடர்) A மழுங்காத ஞானமாய் விமத₃தமமாயிருக்கை. $i_2$ (ஞானமாய்) இப்படிப்பட்ட ஸங்கல்பரூபஜ்ஞாநத்தையுடையனாய். j வெளிப்பட்டு இவை என்றது-ப்ரமாணப்ரதிபந்நமான இவை என்றபடி. k ஆக, இதுக்குக்கீழ் ஜக₃த்காரணத்வஞ்சொல்லிற்று. மேல் - நித்யவிபூ₄தியுக்தனாயிருக்கிறபடி சொல்லுகிறது. (மின்னும் இத்யாதி₃) லீலாவிபூ₄தியுக்தனானதுக்கு மேல், $k_2$1. "अत्यर्कानलदीप्तं तत्स्थानम्" (அத்யர்க்காநலதீ₃ப்தம் தத் ஸ்த₂ாநம்) என்கிறபடியே செறிந்திருந்துள்ள தேஜஸ்ஸையுடைத்தான நித்யவிபூ₄தியுக்தனாயிருக்கும் இருப்பைச் சொல்லுகிறது. $k_3$(மெய்கொள் சோதி) தேஜ:ப்ரப்₄ருதி கல்யாணகு₃ணங்களையுடையன் என்னவுமாம். l தேஜஸ்ஸு குணங்களுக்கெல்லாம் உபலக்ஷணம். m இப்போது கு₃ணஞ்சொல்லுகிறதென்? என்றால்; கு₃ணாதி₄கவஸ்துவிறே ஆஶ்ரயணீயமாவது. (n ஒரு மூவராகிய $n_2$மூர்த்தியே) ப்₃ரஹ்மருத்₃ரர்களுடைய o ஶரீரத்தையும் ஆத்மாவையும் தனக்கு ஶரீரமாகக்கொண்டு அவற்றில் அந்தராத்மாவாய்நின்று p ஸ்ருஷ்டிஸம்ஹாரங்களைப்பண்ணியும், ஸ்வேந ரூபேண நின்று $p_2$ பாலநகர்மத்தைப் பண்ணியும்போருகிற ஸர்வேஶ்வரன். q மூர்த்திஶப்₃த₃ம்-பரத்வவாசி. அன்றிக்கே, ப்₃ரஹ்மருத்₃ரர்களோடே இந்த்₃ரனையுங்கூட்டி மூவரென்று சொல்லவுமாம். r மெய்

---

அ—இவை என்றது இத்யாதி₃) k (ஆக இதுக்குக் கீழ் இத்யாதி₃) "உண்ட" என்று 2. "அத்தா சராசரக்₃ரஹணாத்" என்றத்தைச் சொல்லவுமாமிறே. l "சோதி" என்றால் - தேஜஸ்ஸையன்றோ சொல்லுமென்ன (தேஜஸ்ஸு இத்யாதி₃) m (இப்போது இத்யாதி₃) இப்போது - உபதே₃ஶத₃ஶையிலே; அநுப₄வத₃ஶையன்றே, உபதே₃ஶத்திற்சொல்லுமவையெல்லாம் உபதே₃ஶ்யாநுகு₃ணமாயிருக்கவேணுமிறே என்று கருத்து. $n_2$,o (ஶரீரத்தையும்) என்றது-மூர்த்தி ஶப்₃த₃ார்த்த₂ம். ஸமபி₄வ்யாஹாரத்தாலே - அவர்களுடைய மூர்த்தியென்று தோன்றுமிறே. n, p ஸ்ருஷ்டி ஸம்ஹார பாலந கர்மங்கள் என்கிறது - ப்ராதா₄ந்ய வாசகமாய், மூவர்க்கு விஶேஷணமான ஒருவின் அர்த்த₂ம். ஸ்ருஷ்டி ஸ்தி₂தி ஸம்ஹாராணாம் ப்₃ரஹ்ம விஷ்ணு ருத்₃ரஸாத₄ாரணத்வேऽபி அயமேவ ஸ்ருஜதீ₃தி கத₂முச்யத இதி ஶங்கா ச "மூவராகிய மூர்த்தி" இத்யநேந நிரஸ்யதே. q மூர்த்திஶப்₃த₃ஸ்ய ஸர்வேஶ்வர வாசித்வம் கத₂ம்? இத்யத்ராஹ (மூர்த்திஶப்₃த₃ம்இதி) r இப்பாட்டுக்கு அந்வயமேது, க்ரியை ஏது? என்ன; ப்ரத₂மாவதாரிகைக்குச் சேர அருளிச்செய்கிறார் (மெய்கொள் இத்யாதி₂) இதுக்கு மேற்பாட்டிலே க்ரியை. 380b இரண்டாம்

---

ஜீ—அர்த்த₂ம் (அப்போது இத்யாதி₃) $i_3$ஞானமாய்-ஞானத்தையுடையனாய். j முந்தின அர்த்த₂த்திலே "வெளிப்பட்டு இவை" என்றதுக்கு அர்த்த₂ம் (வெளிப்பட்டு இவை என்றது இத்யாதி₃) m இப்போது-உபதே₃ஶவேளையிலே. n ஸ்ருஷ்டி ப்₃ரஹ்மாவுக்கும், ரக்ஷணம் ஸர்வேஶ்வரனுக்கும், ஸம்ஹாரம் ருத்₃ரனுக்கும் சொல்லாநிற்க, இவன் ஸ்ருஷ்டித்தான் என்கிறதென்? என்ன (ஒரு மூவராகிய மூர்த்தி என்று) அத்₃விதீயரான மூவராயிருக்கிற ஸர்வேஶ்வரன் இத்யர்த்த₂:. q மூர்த்திஶப்₃த₃ஸ்ய ஸர்வேஶ்வரவாசித்வம் எப்படி? என்ன (மூர்த்திஶப்₃த₃ம் இத்யாதி₃) r முந்தின அவதாரிகைக்குச் சேர அந்வயம் காட்டுகிறார் (மெய்கொள் சோதி இத்யாதி₃)

---

ப்ர— (மெய்கொள் சோதி) $k_2$1. महाभारते आरण्यपर्वणि (१६३) आर्ष्टिषेणवचनम्—
"अत्यर्कानलदीप्तं तत्स्थानं विष्णोर्महात्मनः। स्वयैव प्रभया राजन् दुष्प्रेक्ष्यं देवदानवैः ॥९॥"

**ஈ—கொள் சோதியோடாயினன் ஒரு மூவராகிய மூர்த்தி - பின்னும் - வையம் வானம் மனிசர் தெய்வம் மற்றும் மற்றும் மற்றும் முற்றுமாய் வெளிப்பட்டு இவற்றை - செய்யசூழ் சுடர்ஞானமாய் - படைத்தான் - செய்யதாமரைக்கண்ணனாய் உலகேழு முண்ட அவன்கண்டீர்; ஆனபின்பு அவனைப் 8 பரவுங்கோள். /(முற்றுமாயென்கிற ஸாமாநாதி4கரண்யம் - கார்யகாரணப4ாவத்தாலே; ஞானமாய் என்றவிடம் - கு3ண கு3ணிப4ாவத்தாலே.) 1.**

அ—அவதாரிகையில் "செய்யதாமரைக் கண்ணனாய் உலகேழுமுண்ட அவன் கண்டீர்" என்று - இப்பாட்டிலே க்ரியை. 1.

ஜீ—8 பரவுங்கோள் என்றது-மேலிற்பாட்டில் க்ரியையே இதுக்கும் க்ரியை என்றபடி. 380bத்3விதீயாவதாரிகைக்கும் அந்வயம் இதுவேயாய், "உலகேழுமுண்ட அவன் கண்டீர்"என்றே க்ரியாபத3ம். 384e "முற்றுமாய்" என்கிற ஸாமாநாதி4கரண்யம் கார்யகாரண ப4ாவநிப3ந்த4நம். i2 "ஞானமாய்" என்கிறவிடம் - கு3ணகு3ணி ப4ாவத்தாலே. n ஒரு மூவராகிய மூர்த்தி-"அத்3விதீயமான ப்3ரஹ்ம விஷ்ணு ஶிவாத்மக மூர்த்தி த்ரயத்தையுமுடையனானவன்" என்று உரையில் அர்த்த2ம். ப்3ரஹ்ம ருத்3ரேந்த்3ரர்களை ஶரீரமாகவுடைய ஸர்வேஶ்வரன் என்னுதல். n "மூவராகிய மூர்த்தி" என்கிற ஸாமாநாதி4கரண்யம் - கார்யகாரண ப4ாவநிப3ந்த4நம். k3 மொய்கொள்-செறிவையுடைய, சோதியோடாயினன் - செறிந்த தேஜோமயமான நித்யவிபூ4தியோடே கூடியிருக்கிறவன். k2 1. "அத்யர்க்காநலதீ3ப்தம் தத் ஸ்த2ாநம் விஷ்ணோர் மஹாத்மந: । ஸ்வயைவ ப்ரப4யா ராஜந் து3ஷ்ப்ரேக்ஷம் தே3வதா3நவை: ॥" இதி ஆரண்யபர்வணி ஆர்ஷ்டிஷேணவசநம். 2. "யதா2 கப்யாஸம் புண்ட3ரீகமேவமக்ஷிணீ" என்றதுக்கு ஸித்3த4ாந்தார்த்த2ம் மூன்று. "கம்" என்று - ஜலமாய், அப்யாஸம் என்கிறவிடத்தில் - அகாரம். 3. "வஷ்டி வாகு3ரிரல்லோபமவாப்யோருபஸர்கயோ:" என்கிற ஸூத்ரப்ரக்ரியையாலே லுப்தமாய், "ப்யாஸம்" என்றிருக்கிறதாய், கப்யாஸம் புண்ட3ரீகமென்று - ஜலத்தில் பிறந்திருக்கிற புண்ட3ரீகம்போலேயிருக்கிற திருக்கண்கள் என்னுதல்; இந்த அர்த்த2த்தில், 4. "அஸ-பு4வி" என்கிற த4ாது. அன்றிக்கே, "கம் பிப3தீதி-கபி:" என்று நாளத்தைச் சொல்லி, அதிலேயிருக்கிற தாமரை என்னுதல்; இந்த அர்த்த2த்தில், 5. "ஆஸ-உபவேஶநே" என்கிற த4ாது. அன்றிக்கே, "கம் பிப3தீதி கபி: ஸூர்ய:, தேந அஸ்யதே-க்ஷிப்யதே இதி கப்யாஸம்"—ஸூர்யனாலே அலர்த்தப்பட்ட தாமரைப்பூப்போலேயிருக்கிற திருக்கண்களென்னுதல்; இந்த அர்த்த2த்துக்கு, கபியென்று ஸூர்யனைச்சொல்லுமோ? என்ன; 6. "கபிர் பிப3ஸ்தி தேஜஸ்" என்னக்கடவதிறே. இந்த மூன்று அர்த்த2த்தையும், ஸ்ரீப4ாஷ்யகாரர் வேதா3ர்த்த2ஸங்க்3ரஹத்திலே 7. "க3ம்பீ4ராம்ப4ஸ்ஸமுத்3பூ4த ஸம்ம்ருஷ்டநாளரவிகரவிகஸித புண்ட3ரீக த3ளாமலாயதேக்ஷண:" என்று அருளிச்செய்தார். இதுக்குப் பூர்வபக்ஷார்த்த2ம் மூன்றுண்டு. அதாவது, கபியென்று - கிஞ்சித் என்றாய், கப்யாஸம் புண்ட3ரீகமென்று - ஈஷத்3விகஸிதமான தாமரைப்பூப்போலேயிருக்கிற திருக்கண்களென்னுதல்; அன்றிக்கே, 8. "கபி-சலனே" என்கிற த4ாதுவினாலே கபிஶப்3த3த்தாலே ஸூர்யனைச்சொல்லி, ஆஸமென்று-ஆதி3த்யனுடைய மண்ட3லமாய், புண்ட3ரீகமென்று-ஹ்ருத3யகமலமாய். ஆதி3த்யமண்ட3லமும் ஹ்ருத3யகமலமும் யாதொருபடி உபாஸ்யனான ஸர்வேஶ்வரனுக்கு வாஸஸ்தா2நமாயிருக்கும், ஏவம்-அப்படியே அக்ஷிகளும் உபாஸ்யனான ஸர்வேஶ்வரனுக்கு வாஸஸ்தா2னமாயிருக்கும் என்னுதல். அன்றிக்கே, கப்யாஸமென்று - மர்க்கடப்ருஷ்ட2த்தைச் சொல்லி, மர்க்கடப்ருஷ்ட2ம் போலேயிருக்கிற யாதொரு புண்ட3ரீகமுண்டு, அதுபோலேயிருக்கிற அக்ஷிகள் என்னுதல். இப்படி பூர்வபக்ஷத்திலே மூன்று அர்த்த2மும், ஸித்3த4ாந்தத்திலே மூன்று அர்த்த2மும் கண்டுகொள்வது. 1.

1/ (     ) பல ஸ்ரீகோஶங்களில் இல்லை.

2. மூவ ராகிய மூர்த்தி யைமுதன் மூவர்க் கு(ம்)முதல் வன்றன்னைச்
சாவ(ப) முள்ளன நீக்கு வானைத் தடங்க டற்கிடந் தான்றன்னைத்
தேவ தேவனைத் தென்னி லங்கை யெரியெ ழச்செற்ற வில்லியைப்
பாவ நாசனைப் பங்க யத்தடங் கண்ண னைப்பர வுமினே.

---

ஆ— 2. வ்யா:— (மூவராகிய) இதின்மேல் ஸமாச்ரயணீயனான எம்பெருமானுடைய எளிமையைச் சொல்லுகிறது. இப்படி த்ரிமூர்த்திரூபேண அவஸ்தி2தனாய், ஸர்வலோக நிர்வாஹகரான ப்3ரஹ்ம ருத்3ரேந்த்3ரர்களுக்கு நிர்வாஹகனாய், அவர்களுடைய வேத3ாபஹார கு3ருபாதக தை3த்யபீடா3த்3யாபத்3விமோசநகரனாய், க்ஷீரார்ணவ நிகேதனனாயிருந்துவைத்து ஆச்ரிதஸமாச்ரயணீயத்வார்த்த2மாக த3சரத2ாத்மஜனாய்வந்து அவதீர்ணனாய், இப்படி மநுஷ்யனாயிருக்கச்செய்தே, ரூபகு3ண விப4வசேஷ்டிதாதி2களால் மநுஷ்யரிற்காட்டில் தே3வர்கள் யாதொருபடி விலக்ஷணராயிருப்பார், அப்படியே தே3வர்களிற்காட்டிலும் விலக்ஷணனாய், ஆச்ரிதவிரோதி4நிரஸனைகபோ4க3னாய் த3ர்சந மாத்ரத்தாலே ஸர்வஜந்தூநாம் ஸர்வபாபக்ஷயகரனாயிருக்கிற எம்பெருமானைப் பரவுமினோ என்கிறார். 2.

---

ஓ— அவ:— இரண்டாம் பாட்டுத் தொடங்கி மேலெல்லாம் — அவனுடைய ஸௌலப்4யம் சொல்லுகிறது. இரண்டாம் பாட்டில்—இப்படி ஸர்வேச்வரனாயிருந்தானேயாகிலும், ஆச்ரயிப்பார்க்கு எளியனாகைக்காக அவர்களோடு ஸஜாதீயனாய் வந்து திருவவதாரம்பண்ணியருளின ஸ்ரீத3சரத2 சக்ரவர்த்தித் திருமகனை ஆச்ரயியுங்கோள் என்கிறார்.

வ்யா:— (மூவராகிய மூர்த்தியை) ப்ரஸ்துதமான ஸாமாநாதி4கரண்ய நிப3ந்த4நம் சொல்லுகைக்காகக் கீழ்ச்சொன்ன ஸாமாநாதி4கரண்யத்தை அநுப4ாஷிக்கிறது. ஜக3த்துக்கு ப்ரத4ாநரான ப்3ரஹ்மருத்3ரேந்த்3ரர்களுக்குக் காரணமானவனை; இஸ்ஸாமாநாதி4கரண்யம் - கார்யகாரண ப4ாவநிப3ந்த4நம் என்கிறது. (சாவமுள்ளன நீக்குவானை) அவர்களுக்குள்ள சாபங்களை அநாயாஸேந

---

ஆதே3— முதற்பாட்டு. அப்போதலர்ந்த செவ்விததாமரைபோலேயிருந்துள்ள திருக்கண்களையுடையனாய், பூ4மியும், உபரிதநலோகஙகளும், மநுஷ்யரும், தே3வதைகளும், திர்யக்ஸ்த2ாவரங்களும், பஞ்சபூ4தங்களும், மஹத2ாதி3களுமாகிற இவையெல்லாம் தானேயாய் வெளிப்பட்டு வருத்தமற்று, கார்யஜாதத்தையெல்லாம் வ்யாபித்து, விசத3மாயிருக்கிற ஸங்கல்பரூபஜ்ஞானத்தையுடையனாய், ஸ்ருஷ்டித்தவனாய், பின்னும் தேஜ:ப்ரப்4ருதிகல்யாணகு3ணங்களையுடையனாயிருக்கிறவன் ப்3ரஹ்மருத்3ராதி3களுடைய சரீரத்தையும் ஆத்மாவையும் தனக்கு சரீரமாகக் கொண்டு, அவற்றிலே அந்தராத்மாவாய்நின்று ஸ்ருஷ்டிஸம்ஹாரங்களைப்பண்ணியும், ஸ்வேநரூபேண நின்று பாலநகர்மத்தைப் பண்ணியும் போருகிற ஸர்வேச்வரன் என்கிறார்—"செய்யதாமரைக்கண்ணன்" இத்யாதி3யால். 1.

**ஒ—போக்குமவனை.** (தடங்கடற்கிடந்தான்தன்னை) **தே₃வர்களுடைய ஆபந்நிவாரணாதி₂களுக்காக அவர்களுக்கு அணித்தாகத் திருப்பாற்கடலிலே கண்வளர்ந்தருளினவனை.** (தேவதேவனை) **அங்குக் கண்வளர்ந்தருளுகிறது தே₃வர்களுக்கு ஸமாஶ்ரயணீயனாய். மநுஷ்ய ஸஜாதீயனாய்வந்து திருவவதாரம்பண்ணியருளினாலும், மநுஷ்யரிற்காட்டில் தே₃வர்கள் விலக்ஷணராயிருக்கிறாப்போலே தே₃வர்களிற்காட்டிலும் விலக்ஷணனானவனை என்றுமாம்.** (தென்னிலங்கை என்று தொடங்கி) **ராவணனுக்கு அஞ்சியிருந்த அக்₃நி தட்டும் தடையுமின்றிக்கே வ்யாபரிக்கும்படி தன் வில்வலியாலே லங்கையைச்செற்று, கையும் வில்லும் கண்டாருடைய ஸகலபாபங்களையும் போக்கும் ஸ்வபா₄வனாய், ஒரு பாபங்களையும் போக்காவிடிலும் காண்கையே ப்ரயோஜநம் போரும்படியான உத்பு₂ல்ல புண்ட₃ரீகதடாகம்போலேயிருக்கிற திருக்கண்களையும் உடையவனை.** **2.**

---

ஈ— 2. அவ:— அநந்தரம், ஸ்ருஷ்டமான ஜக₃த்தினுடைய ரக்ஷணார்த்த₂மாய் அவதாரகந்த₃மான க்ஷீரார்ணவஶாயி **ஆஶ்ரயணீயன் என்கிறார்.**

**மூவராகிய மூர்த்தியை—[1. "स ब्रह्मा स शिवस्सेन्द्रः" (ஸ ப்₃ரஹ்மா ஸ ஶிவஸ்ஸேந்த்₃ர:)** என்கிறபடியே] ப்₃ரஹ்மருத்₃ரேந்த்₃ரர்களும் **தான்** என்னலாம்படி **அவர்களுக்கு** ஶரீரியாயிருப்பானாய், **(ஶரீரபூ₄தராய்) முதல்**—லோகப்ரத₄ானரான, **மூவர்க்கு**—(அவர்கள்) மூவர்க்கும், **முதல்வன்தன்னை**—காரணபூ₄தனாய், **சாவம்**—(அவர்களுக்கு கு₃ருபாதகாதி₃) ஶாபங்கள், **உள்ளன**—உள்ளவற்றை, **நீக்குவானை**—போக்குமவனாய், (பின்பு, கூப்பீட்ட குரல்கேட்கும்படி), **தடம்**—இடமுடைத்தான, **கடல்**—க்ஷீராப்₃தி₄யிலே, **கிடந்தான்தன்னை**—கண்வளர்ந்தருளி, **தேவதேவனை**—(ராவணவத₄ார்த்தி₂களான) தே₃வர்களுக்கு ஆஶ்ரயணீயனாய்க்கொண்டு அவதரித்து, **தென்னிலங்கை**—லங்கையில், **எரி**—செல்லப்பெறாத அக்₃நி, **எழ**—தலையெடுக்கும்படி, **செற்ற**—ஶத்ருநிரஸனம்பண்ணின, **வில்லியை**—வில்லையுடையனாய், **பாவநாசனை**—(ஸேதுவில் வரத₃ாநாதி₃முக₂த்தாலே) பாபவிநாஶகனான, **பங்கயத்தடங்கண்ணனை**—புண்ட₃ரீகாக்ஷனை, **பரவுமின்**—ஸ்தோத்ர முக₂த்தாலே **ஆஶ்ரயியுங்கோள்.** 2.

---

**இ**— அவ:— இரண்டாம் பாட்டில் — இப்படி ஸர்வேஶ்வரனாயிருக்கிற இவனைக் கிட்டப்போமோ? என்னில்; ஆஶ்ரயணார்த்த₂மாக ஸஜாதீயனாய் வந்து அவதரித்த சக்ரவர்த்தித்திருமகனை **ஆஶ்ரயியுங்கோள் என்கிறார்.**

வ்யா:—**(மூவராகிய மூர்த்தியை)** ப்ரஸ்துதமான ஸாமாநாதி₄கரண்யத்துக்கு நிப₃ந்த₄நம் சொல்லுகைக்காக அநுப₄ாஷிக்கிறது. **(முதல் இத்யாதி₃)** ஜக₃த்துக்கு ப்ரத₄ாநரான ப்₃ரஹ்மருத்₃ரேந்த்₃ரர்களுக்குக் காரணமானவனை. இஸ்ஸாமாநாதி₄கரண்யம் - கார்யகாரணபா₄வநிப₃ந்த₄நம் என்கிறது. **(சாவம் இத்யாதி₃)** வேத₃ாபஹார கு₃ருபாதக தைத்₃யபீட₃ாதி₃களால் இவர்களுக்கு வரும் ஆபத்துக்களைப் போக்குமவனை. சாவமுள்ளன என்கிறது - அவன் க்ருபைக்கு இவர்கள் பண்ணும்

**ஙீ**—அபராத$_4$ம் போராது என்கை. **(தடம் இத்யாதி$_3$)** இன்னம் "இவர்களுக்கு இடர் வந்தபோது தூ$_3$ரஸ்த$_2$னாகவொண்ணாது" என்று க்ஷீராப்$_3$தி$_4$யிலே கண்வளர்ந் தருளினபடி. **(தேவதேவனை)** அங்குக் கிடக்கிறது ப்$_3$ரஹ்மாதி$_3$களுக்கு ஆஶ்ரய ணீயனாகைக்கு. அவர்கள் அபேக்ஷிக்க வந்து அவதரித்தபடி. **1. "सफलम्" (ஸப$_2$லம்)** இத்யாதி$_3$. **(தென்னிலங்கை இத்யாதி$_3$)** அக்$_3$நி புக ப$_4$யப்படும் ஊரிலே நினைத்தபடி புக்கு வ்யாபரிக்கப் பண்ணவல்ல வில்வலியை உடையவனை. **(தென்னிலங்கை எரி எழச்செற்ற வில்லியை - தேவதேவனை)** என்று மநுஷ்யத்வே பரத்வத்தைச் சொல்லிற்றாகவுமாம். நித்யஸூரிகள் ஏத்துகிறவனை ஆஶ்ரயியுங்கோள் என்றுமாம். **(பாவநாசனை)** ஹேயப்ரதிப$_4$டனை. கையும் வில்லுமாயிருக்கிறபடியைக் காண, ஸர்வருடைய பாபங்களும் போம். **2. "पावनस्सर्वलोकानां त्वमेव रघुनन्दन" (பாவநஸ்ஸர்வலோகாநாம் த்வமேவ ரகு$_4$நந்த$_3$ந).** **(பங்கயம் இத்யாதி$_3$)** பாபத்தை உண்டாக்கிலும் விடவொண்ணாத வடிவழகையுடையவனை. **3. "रामः कमलपत्राक्षः" (ராம: கமலபத்ராக்ஷ:).** **(பரவுமினோ)** **4."जितन्ते पुण्डरीकाक्ष"(ஜிதந்தே புண்ட$_3$ரீகாக்ஷ)** என்று அக்ரமமாகப் புகழுங்கோள். 2.

---

**ஈ— அவ:— இரண்டாம் பாட்டு. a ஜக$_3$த்காரணத்வ புண்ட$_3$ரீகாக்ஷத்வாதி$_3$களைச் சொல்லி, "ஆஶ்ரயியுங்கோள்" என்றுநின்றீர்; அவை பரத்வத்துக்கு ஏகாந்த மான லக்ஷணங்களாயிற்று; ஆனபின்பு எங்களாலே அவனை ஆஶ்ரயிக்கப் போமோ? என்ன; "அப்படிப்பட்டவன் தானே உங்களோடு ஸஜாதீயனாய், சக்ரவர்த்தித் திருமகனாய் வந்து அவதரித்தான், அங்கே ஆஶ்ரயியுங்கோள்" என்கிறார்.**

**வ்யா:**—b(மூவராகிய மூர்த்தியை) c **ப்ரஸ்துதமான ஸாமாநாதி$_4$கரண்யத்துக்கு நிப$_3$ந்த$_4$நம் சொல்லுகைக்காக - அநுப$_4$ாஷிக்கிறது.** (முதல் இத்யாதி$_3$) d **இஸ் ஸாமாநாதி$_4$கரண்யம் d$_2$ ஸ்வரூபேண அன்று, கார்யகாரணப$_4$ாவநிப$_3$ந்த$_4$நம் என்**

---

**அ—** இரண்டாம் பாட்டு. (மூவராகிய இத்யாதி$_3$) a கீழே - பரத்வத்தைச்சொல்லி, இங்கே அவதாரத்தைச் சொல்லுகையாலே - பரத்வத்துக்கு அந்யத$_2$ாஸித்$_3$தி$_4$ ஶங்கித்தவர்களுக்கு அவதாரம் ஆஶ்ரயணத்துக்கு ஏகாந்தமென்று பரிஹரித்ததாயிருக்கிறது என்கிறார் (ஜக$_3$த் காரணத்வ இத்யாதி$_3$) b,c முன்னே "மூவராகிய மூர்த்தி" என்று அநுப$_4$ாஷிக்கிறதுக்கு ப்ரயோஜநம் அருளிச்செய்கிறார் (ப்ரஸ்துதமான இத்யாதி$_3$) d இஸ்ஸாமாநாதி$_4$கரண்யம்— ஸ்வரூபைக்யபரம் என்கிற மாயாவாதி$_3$களை நிரஸிக்கைக்கு உறுப்பென்று அருளிச்செய்யா நின்றுகொண்டு, ஸாமாநாதி$_4$கரண்யத்துக்கு ஹேது இன்னதென்று அருளிச்செய்கிறார் (இஸ்ஸாமாநாதி$_4$கரண்யம் இத்யாதி$_3$) d$_2$ கார்யகாரணப$_4$ாவாதி$_3$ நிப$_3$ந்த$_4$நாந்தரத்தை அபேக்ஷி யாமல் ஸ்வரூபத்தை அபேக்ஷித்தால், ஸ்வரூபைக்யத்திலே பர்யவஸிக்கும் என்கிற தாத்பர்யத்

---

**ஜீ—** இரண்டாம் பாட்டு. (மூவராகிய இத்யாதி$_3$) a கீழே - பரத்வத்தைச்சொல்லி, இங்கே- அவதாரத்தைச் சொல்லுகையாலே - பரத்வத்துக்கு அந்யத$_2$ாஸித்$_3$தி$_4$ ஶங்கித்தவர்களுக்கு அவதாரம் ஆஶ்ரயணத்துக்கு ஏகாந்தமென்று பரிஹரித்ததாயிருக்கிறது என்கிறார் (ஜக$_3$த் காரணத்வ இத்யாதி$_3$) b,c புநஶ்ச, "மூவராகிய மூர்த்தி"என்று அநுப$_4$ாஷிக்கிறதுக்கு ப்ரயோஜநம் (ப்ரஸ்துதமான இத்யாதி$_3$) d ஸாமாநாதி$_4$கரண்யஸ்ய ஹேதுமாஹ (இஸ்ஸாமாநாதி$_4$கரண்யம்

ஈ—கிறது. ஜக3த்துக்குக் காரணபூ4தனுயிருந்துள்ள e தன்னேடு கூடின மூவர்க்கும் காரணபூ4தனுயுள்ளவனே. f ப்3ரஹ்மருத்3ரர்களுக்குக் காரணபூ4தனுகிறுன் தனக்குக் காரணபூ4தனுகையாவதென்? என்னில்; தான் இவர்களுக்குக் காரணபூ4தனுனவோபாதி, தனக்கு அவ்வருகு காரணுந்தரமின்றிக்கேயிருக்கும் என்றபடி; g 1. "आत्मेश्वरम्" (ஆத்மேஶ்வரம்) என்கிறபடியே. h அன்றிக்கே, இந்த்3ரனையுங் கூட்டி, ஜக3த்துக்கு ப்ரத4ானரையிருந்துள்ள ப்3ரஹ்மருத்3ரேந்த்3ரர்களுக்கும் காரணபூ4தனுயுள்ளவனே என்றுமாம். i (சாவமுள்ளன நீக்குவானை) j2. "वेदापहार-गुरुपातकदैत्यपीडा" (வேத3ாபஹார கு3ருபாதக தை3த்யபீட3ா) என்றுற்போலே சொல்லுகிறவற்றைப் போக்கும் ஸ்வப4ாவனுயுள்ளவனே. k (உள்ளன) l போக்குகிற அவன் பாரிப்புக்கு இவை அல்பமாயிருக்கிறபடி. m (தடங்கடல் இத்யாதி3) n "இன்னம்

---

அ—தாலே (ஸ்வரூபேண அன்று என்கிறது) e (தன்னேடு கூடின) ஶரீர ஸம்யோஜந முகே2நவிறே அவர்களுக்குக் காரணமாகிறது, இது பின்னை ஸ்வாவதாரத்துக்கும் ஒக்குமிறே. f அப்4யுச்சய பரிஹாரங்களை ஶங்கா பூர்வகமாக அருளிச்செய்கிறுர் (ப்3ரஹ்ம ருத்3ரர்களுக்கு என்று) g ஸ்வாத்மாநம் ப்ரதி காரணத்வேऽபி4ஹிதே - ஸ்வஸ்ய காரணுந்தரநிஷேத4: ப2லதி கிம்? இத்யத்ராஹ (ஆத்மேஶ்வரம் இதி) h (அன்றிக்கே இத்யாதி3) ஏவஞ்ச, "முதல்" இத்யஸ்ய - காரணபூ4தா இதி ச, ப்ரத4ாநாநி இதி ச அர்த்த2த்3வயம். i, j சாவமுள்ளன என்றது-ப்3ரஹ்ம ருத்3ரேந்த்3ரர்கள் மூவர்க்குமுண்டான து3:க்க2ங்களை என்கிறுர் (வேத3ாபஹார இத்யாதி3) சாபம்என்றது- சாபம்போலே அநுப4ாவ்யமான து3:க்க2ங்களைச் சொல்லுகிறது, k, l வேத3ாபஹாராத்3யாபத்துக்கள் பூ4யிஷ்ட2மாயிருக்க, "உள்ளன" என்று லகு4வாகச் சொல்லுகிறதென்? என்ன (போக்குகிற அவன் இத்யாதி3) "சாவம் நீக்குவான்" என்ன அமைந்திருக்க, "உள்ளன" என்கையாலே - உள்ளத்தைப் போக்கினுன், இல்லாததுக்கு என்செய்வானென்று தோன்றுமிறே; அத்தாலே பாரிப்பினுடைய மிகுதியும், சாபத்தினுடைய ப2ல்கு3த்வமும் தோன்றுகிறது. l, m, n "சாவமுள்ளன நீக்குவானை" என்ற அநந்தரம், "தடங்கடல் கிடந்தான்தன்னை" என்று

---

ஜீ—இத்யாதி3) f தடஸ்த2ஶங்கையை அநுவதி3த்துப் பரிஹரிக்கிறுர் (ப்3ரஹ்மருத்3ரர் இத்யாதி3) h (அன்றிக்கே இந்த்3ரனையும் இதி) ஏவஞ்ச, "முதல்" என்றதுக்கு — காரணபூ4தர், ப்ரத4ான பூ4தரென்று அர்த்த2த்3வயம். i, j சாவமுள்ளன நீக்குவானை - சாபம்போலே அநுப4ாவ்யமான வேத3ாபஹாராதி3 து3:க்க2ங்களுள்ளவற்றைப் போக்குமவனை; தை3த்யபீடை3-இந்த்3ரனுக்காதல்; கு3ருபாதக தை3த்யபீடை3கள் இரண்டும் - ருத்3ரனுக்காதல்; தலையிலே கையை வைக்க வந்த வ்ருகாஸுராதி3பீடை3யுண்டிறே k, l வேத3ாபஹாராத்3யாபத்துக்கள் ப3ஹுவாயிருக்க, "உள்ளன" என்று - லகு4வாகச் சொல்லுகிறதென்? என்ன (போக்குகிற அவன் இத்யாதி3) 'சாவம் நீக்குவானை' என்ன அமைந்திருக்க, "உள்ளன" என்கையாலே-உள்ளத்தைப்போக்கினுன், இல்லாததுக்கு என்செய்வான் என்று தோன்றுமிறே; அத்தாலே பாரிப்பினுடைய மிகுதியும், ஶாபத்தினுடைய ப2ல்கு3த்வமும் தோன்றுகிறது. i, m, n "சாவமுள்ளன நீக்குவானை" என்ற அனந்தரம்,

---

ப்ர— (இரண்டாம் பாட்டு) (மூவராகிய இத்யாதி3) (முதல்வன் தன்னை)
g 1. नारायणानुवाके (११) "पतिं विश्वस्यात्मेश्वरं शाश्वतं शिवमच्युतम्"

(சாபம் இத்யாதி3) j2. स्तोत्रे "वेदापहारगुरुपातकदैत्यपीडाद्यापद्विमोचनमहिष्ठफलप्रदानैः। कोन्यः प्रजापशुपती परिपाति कस्य पादोदकेन स शिवः स्वशिरोधृतेन॥"

ஈ—இவற்றுக்கு ஆபத்துவந்தபோது நம்மைத் தேடித் திரியவொண்ணுது" என்று ஏற்கவே கடலில் இடங்கொண்டவனை. o (தேவதேவனை) p ப்₃ரஹ்மாதி₃களுக்கு ஆஶ்ரயணீயனுய்க்கொண்டாயிற்றுக் கண்வளர்ந்தருளுகிறது. p₂ (தென்னிலங்கை எரியெழச்செற்ற வில்லியை) q அவர்கள் கூப்பீடுகேட்டு எழுந்திருந்து செய்யும் தொழில் சொல்லுகிறது. r அக்₃நியானது ராவணப₄யத்தாலே ப்ரவேஶிக்க மாட்டாத ஊரிலே, r₂ தான் நினைத்தபடி வ்யாபரிக்கப்பண்ணவல்ல வில்வலியை யுடையவனை. s (தேவதேவனை - தென்னிலங்கை எரியெழச் செற்ற வில்லியை) என்று s₂ மநுஷ்யத்வே பரத்வஞ்சொல்லிற்றுகவுமாம். t நித்யஸூரிகள் ஏத்துகிறவனை ஆஶ்ரயியுங்கோள் என்றுமாம். u (பாவநாசனை) v கையும் வில்லுமாயிருக்கிற படியைக்காண, ஸர்வருடைய பாபங்களும் போம். w1. "पावनस्सर्वलोकानां त्वमेव

---

அ—சொல்லுகிறதுக்கு ப்ரயோஜநம் (இன்னம் இத்யாதி₃) m,o,p "தடங்கடல் கிடந்தான் தன்னை" என்ற பத₃த்தோடே "தேவதேவனை" என்று கூட்டினதுக்குத் தாத்பர்யம் (ப்₃ரஹ்மாதி₃களுக்கு இத்யாதி₃) q ஆஶ்ரயித்த ப்₃ரஹ்மாதி₃களுக்குப் ப₂லம் கொடுக்கைக்காக, சக்ரவர்த்தித் திருமகனுய் வந்து அவதரித்தான் என்கிருர் (அவர்கள் இத்யாதி₃) r "எரியெழச் செற்ற வில்லியை" என்றதுக்கு வாஸனை (அக்₃நியானது இத்யாதி₃) s "தேவதேவனை" என்கிற இத்தை - சக்ரவர்த்தித் திருமகனுக்கு விஶேஷணமாக்கி, அத்தாலே ப₂லித்ததொரு தாத்பர்யத்தை அருளிச்செய்கிருர் (தேவதேவன் இத்யாதி₃) s₂2. "பு₄வாந் நாராயணோ தே₃வ:" என்று ப்₃ரஹ்மாதி₃கள் ஸ்தோத்ரம் பண்ணும்படியான மநுஷ்யத்வே பரத்வத்தை என்றபடி. t "தேவதேவன்" என்றதுக்கு - நித்ய ஸூரிகள் என்று அர்த்தா₂ந்தரம் விவக்ஷித்து அருளிச்செய்கிருர் (நித்யஸூரிகள் இத்யாதி₃) இவர்கள் ஏத்தினமைக்கு ப்ரமாணம்—A "பரதனும் தம்பி சத்துருக்கனனும்" இத்யாதி₃ கண்டு கொள்வது. n யத்₃வா, (இன்னம் இவற்றுக்கு) "தென்னிலங்கை" என்ற உத்தர ஸமபி₄வ்யாஹார தாத்பர்யம். p (ப்₃ரஹ்மாதி₃களுக்கு) பூர்வோத்தர ஸமபி₄வ்யாஹார நிப₃ந்த₄நம்.

---

ஜீ—"தடங்கடல் கிடந்தான் தன்னை" என்று சொல்லுகிறதற்கு ப்ரயோஜநம் (இன்னம் இத்யாதி₃) m,o,p கீழ்ப்பத₃த்தோடே கூட்டி ப₄ாவம் (ப்₃ரஹ்மாதி₃களுக்கு இத்யாதி₃) q ஆஶ்ரயித்த ப்₃ரஹ்மாதி₃ களுக்குப் ப₂லம்கொடுக்கைக்காக, சக்ரவர்த்தித் திருமகனுய் வந்து அவதரித்தான் என்கிருர் (அவர்கள் இத்யாதி₃) r "எரியெழச் செற்ற வில்லியை" என்றதுக்கு வாஸனை (அக்₃நியானது இத்யாதி₃) p₂ தென்னிலங்கையிலே செல்லப்பெருத அக்₃நியானது தலையெடுக்கும்படி ஶத்ரு நிரஸநம்பண்ணின வில்லையுடையவனை. s "தேவதேவன்" என்கிற இத்தை சக்ரவர்த்தித் திருமகனுக்கு விஶேஷணமாக்கி, அத்தால் ப₂லித்த தாத்பர்யம் (தேவதேவன் இத்யாதி₃) s₂2. "பு₄வாந் நாராயணோ தே₃வ:" என்று - ப்₃ரஹ்மாதி₃கள் ஸ்தோத்ரம்பண்ணும்படியான மநுஷ்யத்வே பரத்வத்தை என்றபடி. t "தேவதேவன்" என்றதுக்கு நித்யஸூரிகளாலே ஸ்தோத்ரம்பண்ணப் படுமவன் என்று அர்த்தா₂ந்தரம் (நித்யஸூரிகள் இத்யாதி₃; இவர்கள் ஏத்தினமைக்கு A "பரதனும் தம்பி சத்துருக்கனனும்" இத்யாதி₃யை ப்ரமாணமாக அநுஸந்தி₄ப்பது. p₂,u,v "தென்னி லங்கை" இத்யாதி₃யோடே, "பாவநாசனை" என்றத்தையும் கூட்டி ப₄ாவம் (கையும் வில்லுமாய் இத்யாதி₃) w பாபங்கள் போம் என்கைக்கு ப்ரமாணம் (பாவந இத்யாதி₃) உத்தர ஸ்ரீராமாயணே த்₃வ்யஶீதிதமே அக₃ஸ்த்ய:, 1. "அத்யத்₃பு₄தமித₃ம் வாக்யம் தவ ராம ஶுப₄ாக்ஷரம்" இதி

---

ப்ர—(பாவநாசனை) w1. उत्तरश्रीरामायणे द्व्यशीतितमे अगस्त्यः "अत्यद्भुतमिदं वाक्यं तव राम शुभाक्षरम्। पावनस्सर्वलोकानां त्वमेव रघुनन्दन॥"

---

A பெரியதிருமொழி 2-3-7.

3. பரவி வானவ ரேத்த நின்ற பரம னைப்பரஞ் சோதியைக்
குரவை கோத்த குழக னைமணி வண்ண னைக்குடக் கூத்தனை
அரவ மேறி யலைக டல்அம ரும்து யில்கொண்ட வண்ணனை
இரவு நன்பக லும்வி டாதென்று மேத்து தல்மனம் வைம்மினோ.

ஆ— 3. வ்யா:—(பரவி) அயர்வறும் அமரர்களாலே அநவரத ஸம்ஸ்துயமானனாய், நிரதிசய தேஜோவிசிஷ்டனாய், நாக₃பர்யங்கசாயியாயிருந்துவைத்து வஸு₂தே₃வக்₃ருஹே ஽வதீர்ணனாய், ஆச்ரித ஸம்ச்லேஷைக ஸ்வபா₄வனாய், ஆச்ரிதஸுலப₄னாய், அதிமநோஹர தி₃வ்யசேஷ்டிதனாயிருந்தவனை இரவும் நன்பகலும் விடாது என்றும் ஏத்துதல் மனம் வைம்மினோ என்கிறார். 3.

ஈ—रघुनन्दन" (பாவநஸ்ஸர்வலோகாநாம் த்வமேவ ரகு₄நந்த₃ந) என்கிறபடியே, அந்நிலையிலே சேதநருடைய ஸகலபாபங்களையும் போக்கும் ஸ்வபா₄வனை. x (பங்கயத் தடங்கண்ணனை) y பாபவர்த்த₄கனாலும் விடவொண்ணாதபடியான கண்ணழகை யுடையவனை. (பரவுமினோ) z அக்கண்ணழகிலே தோற்று $z_3$1. "जितन्ते पुण्डरीकाक्ष" (ஜிதந்தே புண்ட₃ரீகாக்ஷ) என்று அக்ரமமாகப் புகழுங்கோள். 2.

அ—$p_2$,$r_2$(தான் நினைத்தபடி)'எழ'வின்அர்த்த₂ம். $p_2$,u,v"தென்னிலங்கை எரியெழச் செற்ற வில்லியை' என்றத்தோடே, "பாவநாசனை" என்றத்தையும் கூட்டித் தாத்பர்யம் (கையும் வில்லுமாய் இத்யாதி₃) w பாபங்கள் போம் என்கைக்கு ப்ரமாணம் (பாவந: இத்யாதி₃) u,x,y "பாவநாசனை" என்ற அநந்தரம், கண்ணழகைச் சொல்லுகிறதுக்குத் தாத்பர்யம் (பாபவர்த்த₄கனாலும் இத்யாதி₃) 2.

ஜீ—பூர்வார்த்த₄ம். u,x,y"பாவநாசனை" என்ற அநந்தரம் கண்ணழகைச் சொன்னதுக்கு பா₄வம் (பாபவர்த்த₄கன் இத்யாதி₃) z"பரவுமினோ"என்றதுக்கு அர்த்த₂ம் (அக்கண்ணழகிலே இத்யாதி₃) $z_3$1. "ஜிதந்தே புண்ட₃ரீகாக்ஷ நமஸ்தே விச்வபா₄வந" இத்யாதி₃, க்ரமேணாந்வய:. 2.

ப்ர— $z_3$1. जितन्तायाम्—"जितन्ते पुण्डरीकाक्ष नमस्ते विश्वभावन। नमस्तेऽस्तु हृषीकेश महापुरुष पूर्वज ॥"

ஆதே₃— இரண்டாம் பாட்டு. (மூவராகிய மூர்த்தியை) ஜக₃த்காரணபூ₄தனாயிருந்துள்ள தன்னோடு கூடின மூவர்க்கும் காரணபூ₄தனாயிருந்துள்ளவனை, வேதா₃பஹாரம் முதலாயிருந்துள்ள ஆபத்துக்கள் உள்ளவற்றைப் போக்கும் ஸ்வபா₄வனாயுள்ளவனை, இன்னும் ஆபத்துக்கு உதவுகைக்காக ஒக்கவே கடலில் இடங்கொண்டவனை, ப்₃ரஹ்மாதி₃களுக்கு ஆச்ரயணீயனானவனை, அவர்களுக்காகத் தென்னிலங்கையை நெருப்பு கொளுத்தும்படி நியமித்த வில்லையுமுடையவனை, கையும் வில்லுமான நிலையாலே சேதநருடைய ஸகலபாபங்களைப் போக்கும் ஸ்வபா₄வனை, பாபவர்த்த₄கனாலும் விடவொண்ணாதபடி பங்கஜம்போலே விஸ்த்ருதமான கண்ணழகையுடையவனை, அக்கண்ணழகிலே தோற்று, 1."ஜிதந்தே புண்ட₃ரீகாக்ஷ" என்று அக்ரமமாகப் புகழுங்கோள் என்கிறார்—"மூவராகிய மூர்த்தி" இத்யாதி₃யால். 2.

**ஓ— அவ:— மூன்றும் பாட்டில்—த₃ஶரத₂ாத்மஜஜனவனிற்காட்டிலும் ஸுலப₄னுய் வந்து திருவவதாரம்பண்ணியருளின ஸ்ரீநந்த₃கோ₃பர் திருமகனை நிரந்தரமாக ஆஶ்ரயிக்கப்பாருங்கோள் என்கிறுர்.**

வ்யா:— (பரவி வானவர் என்று தொடங்கி) **ஒத்தாரும் மிக்காருமின்றிக்கே தன்னுடைய ஸௌந்த₃ர்யாதி₃களுக்குத் தோற்று அயர்வறும் அமரர்கள் அக்ரமமாக ஏத்தும்படியையுடையனுய், அவர்கள் ஏத்துகையாலே தீ₃ப்யமாநனுமாய், இங்ஙனே விலக்ஷணனுயிருந்துவைத்து ஸ்ரீநந்த₃கோ₃பர் திருமகனுய்த் திருக்குரவை கோத்தருளி இடைப்பெண்களை ஈடுபடுத்தி அவர்களோடே கலக்கவல்லனுமாய், அத்தாலே பெரு விலையனை மாணிக்கம்போன்ற அழகையுடையனுமாய், பெண்களே வாழ்ந்துபோகை யன்றிக்கே எல்லாரும் கண்டு வாழும்படி குடமாடியருளுவதும் செய்து, அத்தாலுண்டான இளைப்பு ஆறும்படி திருப்பாற்கடலிலே திருவநந்தாழ்வான்மேலே கண் வளர்ந்தருளின நிரதிஶயபோ₄க்₃யபூ₄தனை.** 3.

---

ப— 3. அவ:— அநந்தரம், அந்த க்ஷீரார்ணவஶாயியினுடைய ராமாவதாரத்திலுங்காட்டில் ஆஶ்ரிதார்த்த₂ ப்ரவ்ருத்திகளையுடைய க்ருஷ்ணவதார ஸௌலப்₄யத்தை அநுஸந்தி₄த்து, 'அவனை ஆஶ்ரயியுங்கோள்' என்கிறுர்.

(பூ₄ப₄ாரநிர்ஹரணார்த்த₂மாக) **பரவி**—(கு₃ணக₃ணங்களைப்) பரக்கச்சொல்லி, **வானவர்**—தே₃வர்கள், **ஏத்த**—ஸ்தோத்ரம்பண்ண, **நின்ற**—(அவர்களுக்கு ஸந்நிதி₄ பண்ணி) நின்ற, **பரமனை**—பாரம்யத்தையுடையனுய், **பரஞ்சோதியை**—[ அவதீர்ண த₃ஶையிலே 1. "**देवदेवेश**" (**தே₃வ தே₃வேஶ**) என்னும்படியான ] நிரவதி₄க ஜ்யோதிஸ்ஸையுடையனுய், (அவதார ஸௌந்த₃ர்யத்தில் அகப்பட்ட கோ₃ப கன்யகைகளுக்கு) **குரவைகோத்த**—திருக்குரவைகோத்த முக₂த்தாலே, **குழகனை**— இஷ்ட விநியோக₃ார்ஹமாம்படி ப₄வ்யனுய், **மணி**—மாணிக்கம்போலே முடிந்தாளலாம்படி ஸுலப₄மான, **வண்ணனை**—வடிவையுடையனுய், (பெண்களேயன்றியே ஊராக அநுப₄விக்கும்படி) **குடக்கூத்தனை**—குடக்கூத்தாடினவனுய், (இப்படி ஆஶ்ரிதகார்யம் செய்கைக்காக) **அரவம்**—திருவநந்தாழ்வான் மேலே, **ஏறி**—ஏறி, **அலை**—(தன் ஸந்நிதி₄யாலே ஓகாந்தளித்து) அலையெறிகிற, **கடல்**—கடலிலே, **அமரும்**—(ரக்ஷண சிந்தையிலே) பொருந்தின, **துயில்**—நித்₃ரையை, **கொண்ட**— ஸ்வீகரித்த, **அண்ணலை**—ஸ்வாமியை, **நன்**—(ஸ்தோத்ரோபயோக₃த்தாலே) நன்றான, **இரவும் பகலும்**—அஹோராத்ரவிப₄ாக₃மின்றியே, **விடாது**—ஓவாதே, **என்றும்**— என்றும், **ஏத்துதல்**—ஸ்தோத்ரம்பண்ணுகையிலே, **மனம்**—நெஞ்சை, **வைம்மின்**— வையுங்கோள்.

விஷய வைலக்ஷண்யத்தாலே இதுதானே கொண்டுமுழுகும் என்று கருத்து. 3.

**இ**— அவ:— மூன்றும் பாட்டில் — கீழ்ச்சொன்ன ராமாவதாரம் பரத₃மைஎ என்னும்படியான க்ருஷ்ணவதாரத்திலே ஆம்ரயியுங்கோள் என்கிறர்.

வ்யா:— **(பரவி வானவர் ஏத்தநின்ற பரமனை)** நித்யஸூரிகள் அக்ரமமாக ஏத்த, அத்தாலே ஸமாதி₄கரஹிதனாய் நின்றவனை. நித்யஸூரிகள் ஏத்தினாலும் பரிச்சே₂தி₃க்கவொண்ணாதே அவ்வருகாய் நின்றவனை என்றுமாம். **(பரஞ்சோதியை)** அவர்கள் ஏத்த அத்தாலே உஜ்ஜ்வலனாயிருக்கிறவனை. **1. "विपन्यवो जागृवांसस्समिन्धते" (விபந்யவோ ஜாக்₃ருவாம்ஸ: ஸமிந்த₄தே)** என்று அவர்கள் ஏத்துகை தன் பேறாக நினைத்து, அது வடிவிலே தோற்ற இருக்கிறபடி. **2."परं ज्योतिरुपसंपद्य" (பரம் ஜ்யோதி ருபஸம்பத்₃ய)**மேஷிக்க அதிமயத்தைப் பண்ணுகை மேஷபூ₄தனுக்கு ஸ்வரூபமிறே. **(குரவை கோத்த குழகனை)** இப்படி விலக்ஷணனாயிருந்துவைத்து நித்யஸூரிகளோடு இடைப்பெண்களோடு பரிமாற்றத்தில் வாசியறக் கலக்கவல்லவனை.**(மணிவண்ணனை)** அவர்களை அநந்யார்ஹைகளாக்கவல்ல வடிவழகையுடையவனை. **(குடக்கூத்தனை)** இப்பெண்களில் தாழ்ந்தார் இழந்துபோகையன்றிக்கே — திருக்குரவையில் தப்பினார் இழவாதபடி மன்றிலேநின்று குடக்கூத்தாடி, அவ்வடிவழகை ஸர்வ ஸ்வதா₃னம் பண்ணினவனை. **(அரவம் இத்யாதி₃)** குடக்கூத்தாடின மரமம் தீர க்ஷீராப்₃தி₄யிலே சாய்ந்தபடி. **(அலைகடல்)** தன் ஸந்நிதி₄யாலே கிளர்த்தியையுடைத்தாயிருக்கை. **(அமரும் துயில்)** நாய்ச்சிமாராலும் உணர்த்தவொண்ணாதிருக்கை. **(அண்ணலை)** சாய்ந்துகிடக்கிறபோது "ஸர்வாதி₄கன்" என்று தோற்றவிருக்கை. **3. "स मया बोधितः श्रीमान् सुखसुप्तः परन्तपः" (ஸ மயா போ₃தி₄த: ஸ்ரீமாந் ஸுக₂-ஸுப்த: பரந்தப:)** என்னக்கடவதிறே. **(இரவு இத்யாதி₃)** ஏத்துகைக்குறுப்பான காலமாகையாலே நல்ல இரவும் நல்ல பகலும். காலம் நடையாடாத தே₃மத்திலே சென்று அனுப₄விக்கவேண்டும் விஷயத்தை, காலம் நடையாடும் தே₃மத்திலே யிருந்தே அனுப₄விக்கலாம் என்கை. **(என்றும் இத்யாதி₃)** எப்போதும் ஏத்துகையிலே மநஸ்ஸை வைக்க அமையும்; தானே கொண்டுமுழுகும்; பின்னை உபதே₃மிக்கவேண்டா. 3.

---

**ஈ**— அவ:— **மூன்றும் பாட்டு. a கீழ்ச்சொன்ன a₂ ராமாவதாரம் a₃ பரத்வமென்னும்படியான க்ருஷ்ணவதாரத்திலே ஆமரயியுங்கோள் என்கிறர்.**

**வ்யா:—** b (பரவி வானவர் ஏத்த நின்ற பரமனை) **அக்ரமமாக நித்யஸூரிகள் ஏத்த. அத்தாலே c ஸமாதி₄க த₃ரித்₃ரனாய் நின்றவனை. நித்யஸூரிகள் ஏத்தினாலும்**

---

**அ**— மூன்றும் பாட்டு. (பரவி வானவர் இத்யாதி₃) a (கீழ்ச்சொன்ன இத்யாதி₃) "ராமாவதாரத்திலே ஆம்ரயிக்கச் சொல்லாநின்றீர்; அவ்வவதாரம் கட்டும் காவலுமாய் வஸிஷ்டா₂தி₃கள் ஓலக்கங்கொடுக்க மேன்மை தோற்ற ஸிம்ஹாஸநஸ்த₂ராயிருக்கிறவிருப்பிலே நாங்கள் எப்படி

---

**ஜீ**— மூன்றும் பாட்டு. (பரவி இத்யாதி₃) a₂ "குரவை கோத்த குழகனை" இத்யாதி₃யைக் கடாக்ஷித்து அவதாரிகை (ராமாவதாரம் இத்யாதி₃) a₃ பரத்வமென்னும்படியான க்ருஷ்ணவதாரத்திலே-பரத்வமென்னும்படி அத்யந்த ஸுலப₄மான க்ருஷ்ணவதாரத்திலே. a "ராமாவதாரத்திலே

**ஈபரிச்சே2தி3க்கவொண்ணுதேஅவ்வருகாய் நின்றவனை என்றுமாம். d(பரஞ்சோதியை) eஅவர்கள் ஏத்த, அத்தாலே உஜ்ஜ்வலனாயிருக்கிறவனை; f1.“विपन्यवो जागृवांसस्समिन्धते” (விபந்யவோ ஜாக்3ருவாம்ஸஸ்ஸமிந்த4தே) என்று அவர்கள் ஏத்துமது தன்பேறாக நினைத்து, அது தன்வடிவிலே தோற்ற இருக்கிறபடி. g 2. “परं ज्योतिरुपसंपद्य”**

---

அ—ஆஸ்ரயிக்கவென்னில்” என்று கூட்டி அருளிச்செய்வர். a3(பரத்வமென்னும்படியான) அத்யந்த ஸௌலப4மான என்றபடி. c (ஸமாதி4கத3ரித்3ரனும்) 3. “ந தத்ஸமஸ்சாப்4யதி4கஸ்ச த்3ருஸ்யதே” என்கிற ஸ்ருதிப்ரத்யபி4ஜ்ஞாபகமாகையாலே – ஸமக்3ரஹணம். b ஏத்துகையாலே பரமன் என்னுதல், ஏத்தினாலும் பரமனாயிருக்கும் என்னுதல். இவ்வர்த்த2த்திலே – 4. “நிரவத்3ய: பர: ப்ராப்தே:” என்னக்கடவதிறே என்பர். ப்ராப்தியாவது-ஸ்தோத்ரமென்று தாத்பர்யம். b,d,e “பரவி வானவர் ஏத்த” என்றத்தோடே “பரஞ்சோதி” என்றத்தைக் கூட்டித் தாத்பர்யம் (அவர்கள் ஏத்த இத்யாதி3) f கீழ்வாக்ய விவரணம் (விபந்யவ இத்யாதி3) விப்ராஸ: - மேத4ாவிந:. 5. “விஸப்3தே3னோச்யதே விஷ்ணு: ப்ரஸப்3த3: ப்ராபக: ஸ்ம்ருத:” இதி ந்யாயேந விஷ்ணுப்ராபகா இதி வா. விபந்யவ: - தாச்சீ2ல்யே உப்ரத்யயமாய் ஸ்துதிஸீலா: என்றபடி. 6. “பந-ஸ்துதௌ”

---

ஜீ—ஆஸ்ரயிக்கச் சொல்லாநின்றீர்; அந்த அவதாரம் கட்டும் காவலுமாய் வஸிஷ்ட2ாதி3கள் ஓலக்கங் கொடுக்க மேன்மைதோற்ற ஸிம்ஹாஸநஸ்த2ராயிருக்கிற இருப்பிலே நாங்கள் ஆஸ்ரயிக்கும்படி எங்ஙனேயென்னில்” என்று அவதாரிகை அடியிலே சில கூட்டிக்கொண்டு, அநந்தரம் - (கீழ்ச் சொன்ன ராமாவதாரம்) இத்யாதி3 அநுஸந்தி4ப்பது. b ஏத்துகையாலே - பரமன் என்னுதல், ஏத்தினாலும் - பரமனாயிருக்கும் என்னுதல்; “வானவர் - பரவி - ஏத்த - பரமனாய் - நின்றவனை” இத்யந்வய:. இரண்டாம் அர்த்த2த்துக்கு - 4. “நிரவத்3ய: பர: ப்ராப்தே:” இத்யாதி3யை நினைப்பது. ப்ராப்தியாவது - ஸ்தோத்ரம் என்று தாத்பர்யம். b,d,e “பரவி” இத்யாதி3யோடே கூட்டி ப4ாவம் (அவர்கள் ஏத்த இத்யாதி3) f விவரணம் (விபந்யவ இத்யாதி3) தத்-பரமம் பத3ம்; விப்ராஸ:—மேத4ாவிந:; விபந்யவ:—6. “பந-ஸ்துதௌ” என்கிற த4ாதுஸித்3த4மாய், தாச்சீ2ல்யே உப்ரத்யயமாய், ஸ்துதிஸீலா: என்றபடி; ஜாக்3ருவாம்ஸ:—ஜாக3ரணஸீலா:; அஸ்க2லிதஜ்ஞாநா இதி யாவத்; ஸமிந்த4தே - விளங்காநின்றார்கள், 7. “இந்தி4-தீ3ப்தௌ” என்றிறே த4ாது; பரமபத3த்தை ஸதா3 ஸ்தோத்ரம் பண்ணாநின்றுகொண்டு அத்தாலுண்டான ஹர்ஷம் வடிவிலே தோற்றவிருப்பர்கள் என்றபடி. இது ருக்3வேத3த்திலே. d,g “பரஞ்சோதியை”

---

ப்ர— (மூன்றும் பாட்டு) (பரவி) f1. ऋग्वेदे, “तद्विप्रासो विपन्यवो जागृवांसस्समिन्धते। विष्णोर्यत्परमं पदम्॥” “विप्रासः-मेधाविनः, विपन्यवः-स्तुतिशीलाः, जागृवांसः-अस्खलितज्ञानाः, त एव अस्खलितज्ञानास्तद्विष्णोः परमं पदं सदा स्तुवन्तस्समिन्धत इत्यर्थः” इत्यस्याः श्रुतेरर्थो वेदार्थसंग्रहे भाष्यकारेणाभिहितः। अस्य भाष्यकारवचनस्य श्रुतप्रकाशिकाकारेण कृतं व्याख्यानम्—(तद्विप्रासः इति) विप्रास इति पदं व्याचष्टे (मेधाविन इति) अथर्वणि “विष्णु क्रान्तं वासुदेवं विजानन् विप्रो विप्रत्वं गच्छते तत्त्वदर्शी” इति वचनात्। (विपन्यवस्स्तुतिशीला इति) “पनपण-स्तुतिव्यवहारयोः” इति धातुः। “महिमानं पनायत” इति श्रुतिप्रयोगस्स्पष्टः”—इति॥

(பரஞ்சோதியை) g2. छान्दोग्ये (८-३) “अस्माच्छरीरात्समुत्थाय परञ्ज्योतिरुपसंपद्य स्वेन रूपेणाभिनिष्पद्यते।”

ஈ—(பரம் ஜ்யோதிருபஸம்பத்3ய) h ஶேஷிக்கு அதிஶயத்தைப் பண்ணுகை ஶேஷபூ4த னுக்கு ஸ்வரூபமிறே. i (குரவை கோத்த i2 குழகனை) j நித்யஸூரிகளோடு பரிமாறும் பரிமாற்றத்தை இடைப்பெண்களோடு பரிமாறுமிடத்தில், வாசியறக் கலக்கவல்லவனை. குழகன் - ப4வ்யன். (மணிவண்ணனை) k அவர்களை வஶீகரிக்கைக்கு மருந்திடும் பரிகரத்தையுடையவனை. நீலமணிபோலே ஶ்ரமஹரமாயிருந்துள்ள விக்3ரஹத்தை யுடையவனை. l (குடக்கூத்தனை) m திருக்குரவையில் m2அந்வயியாதார்க்கும் இழக்க வொண்ணாதபடி m3மன்றிலே தன்னுடைய வடிவழகை m4முற்றூட்டாக அநுப4விப்பிக்கு மவனை.n (அரவமேறி)n2 குடக்கூத்தாடின ஶ்ரமம் ஆறும்படிக்கீடாகப் போய்த் திருப்பாற்

---

அ—என்றிறே த4ாது. 1.''மஹிமாநம் பஜாயத'' என்றிறே ஶ்ரௌதப்ரயோக3மும். ஜாக்3ருவாம்ஸ:- ஜாக3ரணஶீலா:; அஸ்க2லிதஜ்ஞாநா இதி யாவத். (ஸமிந்த4தே) தத்3விஷ்ணோ: பரமம் பத3ம் ஸத3ாஸ்துவந்தஸ் ஸமிந்த4தே-விளங்காநின்றார்கள். 2.''இந்தீ4-தீ3ப்தௌ''என்றிறேத4ாது. ஈ,ஜ''பரஞ்சோதி'' என்றதுக்கு ப்ரமாணம் (பரம் ஜ்யோதிருபஸம்பத்3ய என்று) h அவர்கள் ஏத்து மது ஈஶ்வரனுக்குப் பேறுமோ? என்ன (ஶேஷிக்கு இத்யாதி3) அதாவது - ஶேஷபூ4தன் ஏத்தித் தன் ஸ்வரூபம் பெறுமது ஶேஷிக்குப் புருஷார்த்த2மாயிருக்குமிறே என்றபடி. h அன்றிக்கே, இவர்கள் ஏத்துகிறது ஏதுக்கென்ன (ஶேஷிக்கு இத்யாதி3) என்னவுமாம். f யத்3வா, (விபந்யவ இத்யாதி3) 3. ''ஸமிந்த4தே'' என்று - இவர்களுடைய ப்ரீதிப்ரகர்ஷமிறே சொல்லிற்று, அது பின்னைத் தாங்கள் ஏத்துகையாலே ப்ரஸந்நனான அவனுடைய முக2ப்ரஸாத3த்தைக் கண்டிறே உண்டாவது. b ''பரமனைப் - நின்ற'' என்று அந்வயம். h ஏத்துமதுக்கு 4. ''பரம் ஜ்யோதிருப ஸம்பத்3ய'' என்கிறவிது-ப்ரமாணமாம்படி எங்ஙனே? என்ன (ஶேஷிக்கு இத்யாதி3) ஶேஷிக்கு அதிஶயத்தை விளைக்கையாலே, 4.''ஸ்வேந ரூபேண'' என்று கைங்கர்யம் விவக்ஷிதமாகையாலே அதுவும் ஏத்துகையிலே ப்ரமாணமாம் என்று கருத்து. b,i,j ''பரவி வானவர் ஏத்தநின்ற'' என்றத் தோடே ''குரவை கோத்த குழகனை'' என்றதுக்கு ஸங்க3தி அருளிச்செய்கிறார் (நித்யஸூரிக ளோடு இத்யாதி3) i2குழகனை-ஏகரஸனை,kஅவர்களை என்றது-பெண்களை என்றபடி. i,l,m''குரவை கோத்த குழகனை'' என்ற அநந்தரம், ''குடக்கூத்தனை'' என்றதுக்கு வாஸனை (திருக்குரவையில் இத்யாதி3) m திருக்குரவையில் அந்வயியாதார் - கே3ாபா:, வ்ருத்3த4கே3ாப்யஶ்ச. m3(மன்றிலே) நாற்சந்தியிலே. m4முற்றூட்டாக-பூர்ணபே4ாஜநமாக. n2பூர்வோத்தர பத3ஸமபி4வ்யாஹாரஸித்3த4 தாத்பர்ய பூர்வகஶப்3த3ார்த்த2ம் (குடக்கூத்து இத்யாதி3) o2கிளர்த்தி-உச்ச்2ராயம். p2அமர்கையின் தாத்பர்யம் (நாய்ச்சிமாராலும் இத்யாதி3) q2''அரவமேறி-அண்ணல்'' என்று கூட்டித் தாத்பர்யம்

---

ஜீ—என்றதுக்குச் ச2ாந்தே3ாக்3யே ப்ரமாணம் (பரஞ்ஜ்யோதி: இத்யாதி3) h அவர்கள் ஏத்துமது அவர்களுக்கு ஸ்வரூபஸித்3தி4யொழிய, தன் பேறானபடி எங்ஙனேயென்ன (ஶேஷிக்கு இத்யாதி3) அதாவது - 5. ''விஜ்வர: ப்ரமுமோத3 ஹ'' என்கிறபடியே, ஶேஷபூ4தன் ஏத்தித் தன் ஸ்வரூபம் பெறுமது தன்பேறாக நினைத்திருக்குமிறே என்றபடி. யத்3வா, இவர்கள் ஏத்துகிறது எதுக்காக என்ன (ஶேஷிக்கு இத்யாதி3) என்னுதல். b,i,j''பரவி வானவர்'' இத்யாதி3 யோடே கூட்டி ப4ாவம் (நித்யஸூரிகளோடு இத்யாதி3) i2 குழகனை-ஏகரஸனை. k அவர்களை-பெண்களை. i,l,m''குரவைகோத்த'' என்ற அநந்தரம், ''குடக்கூத்தனை'' என்றதுக்கு ப4ாவம் (திருக்குரவையில் இத்யாதி3) m2அந்வயியாதார்க்கும் - கே3ாபால வ்ருத்3தை4கள் முதலானார்க்கும். m3மன்றிலே-நாற்சந்தியிலே. m4 முற்றூட்டாக-பூர்ணபே4ாஜனமாக. n2 கீழ்ப் பத3த்தையும் கூட்டி ப4ாவம் (குடக்கூத்து இத்யாதி3) o2கிளர்த்தி - உச்ச்2ராயம். p2''அமரும்'' என்றதுக்கு ப4ாவம் (நாய்ச்சிமாராலும் இத்யாதி3) q2''அரவமேறி - அண்ணல்'' என்று [illegible] (அநந்த

ஈ—கடலிலே சாய்ந்தருளினபடி. o(அலேகடல்) ஸ்வஸந்நித$_4$ானத்தாலே o$_2$கிளர்த்தியை யுடைத்தாயிருக்கை. p (அமருந்துயில்) p$_2$ நாய்ச்சிமாராலும் உணர்த்தவொண்ணு திருக்கை. q (அண்ணலே) q$_2$ அநந்தஶாயித்வத்தால் வந்த q$_3$ ஈஶ்வரத்வவுறைப்பை யுடையவனே. r (இரவும் இத்யாதி$_3$) r$_2$ காலம் நடையாடாத தே$_3$ஶத்தில் அநுப$_4$வத்தை யன்றோ காலம் நடையாடும் தே$_3$ஶத்திலே நான் உங்களை அநுப$_4$விக்கச் சொல்லு கிறது. s ஏத்துகைக்கீடான காலமாகையாலே 'நல்லிரவும் நன்பகலும்' என்கிறுர். (என்றும் s$_2$ ஏத்துதல்) t 1. "விபந்யவ:" (விபந்யவ:) என்கிறபடியே. (மனம் வைம்மினோ) u நீங்கள் அங்கே நெஞ்சை வைக்குமித்தனையே வேண்டுவது; v விஷயம் தன்னடையே v$_2$ கொண்டுமுழுகும். w நீங்கள் ஏத்த என்று ஒருப்படுமித்தனையே வேண்டுவது; x பின்னை உங்களுக்கு உபதே$_3$ஶிப்பார் வேண்டா. y நித்யஸூரிகள் ஏத்தும் விஷயத்தையன்றோ நான் உங்களை ஏத்தச்சொல்லுகிறது; ஸர்வாதி$_4$கனையன்றோ நான் உங்களை ஏத்தச் சொல்லுகிறது; நீங்கள் ஏத்துகிறவிது தன்பேறு என்னுமிடம் வடிவிலே தோற்ற விருக்கிறவனையன்றோ நான் உங்களை ஏத்தச்சொல்லுகிறது; உங்களுடைய விலக் காமையே பற்றுசாக வந்து கலக்குமவனையன்றோ நான் உங்களை ஏத்தச்சொல்லு கிறது; z யாதானும் நேர்ந்து அணுகவேண்டும் வடிவழகையுடையவனையன்றோ ஏத்தச் சொல்லுகிறது; உங்களோட்டைக் கலவியாலே a செருக்கியிருக்கிறவனையன்றோ ஏத்தச்சொல்லுகிறது; அநந்தஶாயியையன்றோ ஏத்தச்சொல்லுகிறது; ஸர்வ ஸ்வாமியையன்றோ ஏத்தச்சொல்லுகிறது. ஒரு காலநியதியுண்டாய் இருக்கிறீர்களோ.

---

அ-(அநந்தஶாயித்வத்தால் இத்யாதி$_3$ q$_3$ உறைப்பு-த$_3$ார்ட்$_4$யம். r, r$_2$ "ஏத்துமினோ" என்னுதே "இரவு நன்பகலும்" என்று விஶேஷித்ததுக்குத் தாத்பர்யம் (காலம் நடையாடாத இத்யாதி$_3$) 2. "ந காலஸ்தத்ர வை ப்ரபு$_4$:" என்னக்கடவதிறே. s A "வெந்நாள்" என்றாற்போலே சொல்லாதே "நன்பகல்" என்கிறதென்? என்ன (ஏத்துகைக்கீடான இத்யாதி$_3$) t 1. "விபந்யவ:" என்றது-தாச்சீ$_2$ல்யே உப்ரத்யயமாய், ஸதா$_3$ ஸ்துதிஶீலர் என்றபடி. ததா$_2$ ஹி, 3. "பந-ஸ்துதௌ" இதி த$_4$ாதோ: 4. "கண்ட்$_3$வாதி$_3$ப்$_4$யோ யக்" இதி ப$_3$ஹுளக்$_3$ரஹணே யகி 5. "க்யாச்-ச$_2$ந்த$_3$ஸி" இத்யத்ர க்யக்$_3$ரஹணம் - தா$_4$துஸம்ஜ்ஞாநிமித்த ப்ரத்யயோபலக்ஷணார்த்த$_2$ம். தேந கண்ட்$_3$வாதி$_3$யகோऽபி க்$_3$ரஹணமித்யுக்தம். u, v ஏத்துமினோ என்னுதே, "மனம் வைம்மினோ" என்கிறதென்? என்ன (நீங்கள் இத்யாதி$_3$) u, v, w, x இவ்வாக்யத்$_3$வய விவரணம் (நீங்கள் ஏத்த இத்யாதி$_3$ வாக்யத்$_3$வயம்) y, z, a "வானவர் ஏத்த" இத்யாதி$_3$ விஶேஷணங்களிலே நோக்காக அருளிச்செய்கிறுர் (நித்யஸூரிகள் இத்யாதி$_3$) z யாதானும் நேர்ந்து - ஸர்வஞ்ச பரித்யஜ்ய,

---

ஜீ—இத்யாதி$_3$) n, o, p, q திருவநந்தாழ்வான் மேலேயேறி, ஸ்வஸந்நித$_4$ாநத்தாலே அலேயெறிகிற கட லிலே ரக்ஷணசிந்தையிலே பொருந்தின நித்$_3$ரையை ஸ்வீகரித்த ஸ்வாமியை இதி ஶப்$_3$தா$_3$ர்த்த$_2$:, q$_3$ உறைப்பு-தா$_3$ர்ட்$_4$யம். r, r$_2$ "ஏத்துமினோ" என்னுதே, "இரவு நன்பகலும்" என்று விஶேஷித்த துக்கு பா$_4$வம் (காலம் நடையாடாத இத்யாதி$_3$) 2. "ந காலஸ் தத்ர வை ப்ரபு$_4$:" என்னக்கடவதிறே. s A "வெந்நாள்" என்றாற்போலே சொல்லாதே, "நன்பகல்" என்கிறதென்? என்ன (ஏத்துகைக்கு ஈடான இத்யாதி$_3$) t "விபந்யவ:" என்றது-தாச்சீ$_2$ல்யே உப்ரத்யயமாய், ஸதா$_3$ ஸ்துதி ஶீலர் என்றபடி. u, v ஏத்துமினோ என்னுதே, "மனம் வைம்மினோ" என்கிறதென்? என்ன (நீங்கள் இத்யாதி$_3$) u, v, w, x இவ்வாக்ய விவரணம் (நீங்கள் ஏத்த இத்யாதி$_3$) y, z, a "வானவர்ஏத்த" இத்யாதி$_3$ விஶேஷணங்களிலே நோக்காக அருளிச்செய்கிறுர் (நித்யஸூரிகள் இத்யாதி$_3$) z யாதானும்

---

4. வைம்மின் நும்மனத் தென்று யானுரைக் கின்ற மாயவன் சீர்மையை
எம்ம னோர்க ளுரைப்ப தென்னது நிற்க நாடொறும் வானவர்
தம்மை யாளு மவனு நான்முக னும்ச டைமுடி யண்ணலும்
செம்மை யாலவன் பாத பங்கயஞ் சிந்தித் தேத்தித் திரிவரே.

---

ஆ—4. வ்யா:—(வைம்மின்) இப்படி ஆஶ்ரயித்தால் அவன் நம்மை விஷயீகரித்தருளுமோ? என்னில், ஐஶ்வர்ய ப்ரவணராய், அதிக்ஷுத்ரரான ப்ரஹ்மேஶாநாதிகளுக்குங்கூட ஒரு தடையின்றியே ஆஶ்ரயிக்கலாம்படி தன் திருவடிகளைக் கொடுத்துக்கொண்டிருக்கிற அளவிறந்த நீர்மையையுடையனுயிருந்தவன், அநந்யப்ரயோஜநராய்க்கொண்டு ஆஶ்ரயிக்குமவர்களைக் கைவிடுமோ? என்கிருர். 4.

---

ஒ— அவ:— நாலாம் பாட்டில்—மிகவும் அபிமானிகளான ப்ரஹ்மேஶாநாதிகளுக்கும் தடையின்றிக்கே புக்கு ஆஶ்ரயிக்கலாம்படியிருக்கிற எம்பெருமானுடைய ஶீலவத்தையைப் பேசுகிருர்.

---

ஈ— bஏத்துகைக்குப் bபரிகரஸாபேக்ஷயராய் இருக்கிறீர்களோ, cஅதில் அருமையுண்டாய்த் தான் இருக்கிறீர்களோ? d ஆயிட்டு (மனம் வைம்மினோ) விஷயங்களிலே ஓடித்திரிந்த மநஸ்ஸை மீட்டு இவ்விஷயத்திலே வைக்கப் பாருங்கோள். 3.

---

அ—a செருக்கி-கர்வித்து. b"மனம்" என்றத்தைப்பற்ற (ஏத்துகைக்குப் பரிகரமென்றது) c"வைம்மினோ" என்றத்தைப்பற்ற (அதில் அருமை இத்யாதி) d ஆயிட்டு - ஆகையாலே. 3

---

ஜீ—நேர்ந்துஅணுகவேண்டும்-ஏதேனும் ஒன்றைச் செய்தாகிலும் கிட்டவேண்டும். A"யாதானும் நேர்ந்தணுகாவாறு" என்று, பெரியதிருவந்தாதியில் A"யாதானுமொன்றறியில்"என்கிற பாட்டில் பாசுரம் இது. a செருக்கி - கர்வித்து. b"மனம்" என்றத்தைப்பற்ற (பரிகரம் என்றது) c"வைம்மினோ" என்றதுக்கு பாவம் (அதில் அருமை இத்யாதி) dஆயிட்டு-ஆகையாலே. பரவி வானவர் இத்யாதி க்ரமேண அந்வய:. s ஏத்துதல் - ஸ்தோத்ரம் பண்ணுகையிலே. i குரவை - ராஸக்ரீடை. 3.

---

ஆதே— மூன்றும் பாட்டு. அக்ரமமாக நித்யஸூரிகள் ஏத்த, அத்தாலே ஸமாதிக தரித்ரனுய் நின்றவனை,அத்தாலே உஜ்ஜ்வலனுயிருக்கிறவனை, நித்யஸூரிகளோடு பரிமாறும் பரிமாற்றத்தை இடைப்பெண்களோடு பரிமாறுமிடத்தில் வாசியறக் கலக்கவல்லவனை, அவர்களை வஶீகரிக்கைக்கு இடும் மருந்தாய் நீலமணி போலே ஶ்ரமஹரமாயிருந்துள்ள விக்ரஹத்தையுடையவனை, திருக்குரவையிலே அந்வயியாதார்க்கு இழக்கவேண்டாதபடி வடிவழகை அநுபவிப்பிக்கைக்காக மன்றிலே குடக்கூத்தாடுமவனை, குடக்கூத்தாடின ஶ்ரமமாறும்படி திருவநந்தாழ்வான் மேலேயேறி ஸ்வஸந்நிதாநத்தாலே கிளர்த்தியையுடைய திருப்பாற்கடலிலே சாய்ந்தருளி நாய்ச்சிமாராலும் எழுப்பவொண்ணுதபடி துயில்கொண்ட ஸ்வாமியை ராத்ரியும் பகலும் விடாதே நித்யமாக ஏத்துகையில் மநஸ்ஸை வையுங்கோள் என்கிருர்—"பரவி வானவர்" இத்யாதியால். 3.

---

A பெரியதிரு 33

ஒ— வ்யா:—(வைம்மின் நும்மனத்து என்று தொடங்கி) **'உங்கள் மநஸ்ஸிலேவைத்து ஆ*ஶ்*ரயியுங்கோள்' என்று நான் சொல்லுகிற ஸௌந்த₃ர்யாதி₃களால் அத்யாஶ்சர்ய பூ₄தனை அவனுடைய சீர்மையை என்போல்வார் உரைத்தால் ப₄க்திவாத₃மென் கிறிகோள்; அது கிடக்கிடீர்.** (நாடொறுமென்று மேலுக்கு) **தே₃வாதி₄பதியான இந்த்₃ரனும், சதுர்முக₂னும் ஸாத₄கனுயிருந்துவைத்து ஈஶ்வரத்வேந அபி₄மாநி யான ருத்₃ரனும் என்றுமொக்கத் தடையின்றிக்கே புக்கு அவனை ஸமாஶ்ரயித்து வேண்டினபடி ஸஞ்சரியாநிற்பர்கள்.** 4.

---

ப— 4. அவ:— அநந்தரம், ஈஶ்வராபி₄மானிகளுக்கும் ஆஶ்ரயிக்கலாம்படியான ஶீலாதிஶயத்தையுடையவனை ஆஶ்ரயியுங்கோள் என்கிறார்.

**நும்**—உங்கள், **மனத்து**—நெஞ்சிலே, **வைம்மின்**—வையுங்கோள், **என்று**— என்று, **யான்**—நான், **உரைக்கின்ற**—சொல்லுகிற, **மாயவன்**—ஆஶ்சர்யகு₃ண சேஷ்டிதங்களையுடையவனுடைய, **சீர்மையை**—சீரிதான ஶீலவத்தையை, **எம்மனோர்கள்**—(ப்ரவணரான)எம்போல்வார், **உரைப்பது**—சொல்லுவது, **என்**—என்? **அதுநிற்க**—அதுகிடக்க; **வானவர் தம்மை**—(தனித்தனியே பத₃ஸ்த₂ரான) வானவர் தங்களையும், **ஆளுமவனும்**—(தன்னளவிலே) ஆளும்படியான இந்த்₃ரனும, **நான் முகனும்**—(ஸர்வதோமுக₂மான ஸ்ருஷ்ட்யுபதே₃ஶாதி₃களைப் பண்ணும்) ப்₃ரஹ்மாவும், **சடைமுடி**—ஜடாமகுட த₄ரத்வத்தால் வந்த தபோமாஹாத்ம்யத்தாலே, **அண்ணலும்**- லோகத்துக்கு ஈஶ்வரனை ருத்₃ரனும், **செம்மையால்**—(தங்கள் து₃ரபி₄மானத்தால் வந்த அடைவுகேட்டை விட்டு ஶேஷஶேஷிப₄ாவத்தால் வந்த) ஆர்ஜவத்தாலே, **அவன்**—(ஶேஷியான) அவனுடைய, **பங்கயம்**—நிரதிஶயபோ₄க்₃யமான, **பாதம்**— திருவடிகளை, **நாடொறும்**—நாள்தோறும், **சிந்தித்து**—சிந்தித்து, **ஏத்தி**—ஸ்தோதரம் பண்ணி, **திரிவர்**—(இதுதானே யாத்ரையாக) வர்த்தியாநிற்பர்.

ஆதலால் அவனை ஆஶ்ரயியுங்கோள் என்று கருத்து. 4.

---

இ— அவ:— நாலாம் பாட்டில் — அபி₄மாந ப்ரசுரரான ப்₃ரஹ்மாதி₃களுக்கும் தடையின்றிக்கே புக்கு ஆஶ்ரயிக்கலாயிருக்கிற ஶீலவத்தையைப் பேசுகிறார்.

வ்யா:—**(வைம்மின் இத்யாதி₃)** உங்களுடைய ஹ்ருத₃யத்திலே வையுங்கோள் என்று நான் சொல்லுகிற ஆஶ்சர்யமான ஸௌந்த₃ர்யாதி₃கு₃ணசேஷ்டிதங்களை யுடையனுன அவனுடைய ஶீலவத்தையை. **(எம்மனோர் இத்யாதி₃)** ஸ்நேஹிக ளான என்போல்வார் சொல்லுமது என்? அதுகிடக்கிடீர். **(நாடொறும் வானவர் இத்யாதி₃)** ஸர்வகாலமும் தே₃வர்களுடைய நன்மைதீமைகள் ஆராய்ந்து, அவர் களுக்கு ஶேஷியான இந்த்₃ரனும், சதுர்த₃ஶ பு₄வனஸ்ரஷ்டாவான ப்₃ரஹ்மாவும், ஸாத₄கவேஷத்தோடே ஈஶ்வராபி₄மானியான ருத்₃ரனும். **(செம்மையால் இத்யாதி₃)** அநந்யப்ரயோஜநரோபாதி தடையின்றிக்கே புக்கு நிரதிஶயபோ₄க்₃யு மான திருவடிகளை நினைத்தும், அது உள்ளடங்காமே புகழ்ந்தும் அதுதானே யாத்ரையாய் ஸஞ்சரிப்பர்கள். **"நாடொறும் - செம்மையால்"** என்னவுமாம். 4.

ஈ— அவ:— நாலாம் பாட்டு. a அபி₄மானப்ரசுரரான ப்₃ரஹ்மருத்₃ராதி₃களுக்கும் a₁ தடையின்றிக்கே புக்கு ஆஶ்ரயிக்கலாயிருக்கிற ஶீலவத்தையைப் பேசுகிறார்.

வ்யா:— (வைம்மின் இத்யாதி₃) 'b உந்தம் ஹ்ருத₃யத்திலே வையுங்கோள்' என்று நான் சொல்லுகிற ஆஶ்சர்யமான ஸௌந்த₃ர்யாதி₃கு₃ணசேஷ்டிதங்களை யுடையனனவனுடைய c ஶீலவத்தையை. அன்றிக்கே, ' அதி₄காரிபுருஷர்களான ப்₃ரஹ்ம ருத்₃ராதி₃களெல்லாம் வந்து ஆஶ்ரயிக்கும்படியன்றோ அவன் பெருமை' என்று, ஆஶ்ரயணத்துக்குறுப்பாக அவன் d பரத்வத்தைச் சொல்லிற்றாகவுமாம். (எம்மனோர்கள் உரைப்பதென்) எம்போல்வார் சொல்லவேண்டுகிறதென்? e நாங்கள் சொன்னவாறே ப₄க்தி பாரவஶ்யத்தாலே சொன்னோம் என்பர்கள். (அது நிற்க) அதுகிடக்க. (நாடொறும் இத்யாதி₃) f அதி₄காரிபுருஷர்களான ப்₃ரஹ்மருத்₃ராதி₃க ளெல்லாம் அநந்யப்ரயோஜநரைப்போலே வந்து ஆஶ்ரயிக்கும்படியன்றோ அவனுடைய ஶீலவத்தை, அன்றிக்கே, 'அதி₄காரிபுருஷர்களான ப்₃ரஹ்மருத்₃ராதி₃களெல்லாம் வந்து ஆஶ்ரயிக்கும்படியன்றோ அவன் பெருமை' என்று ஆஶ்ரயணத்துக்குறுப்பாக அவன் பரத்வத்தைச் சொல்லிற்றாகிறது. (நாடொறும் - சிந்தித்து ஏத்தித் திரிவரே) என்று g மேலே அந்வயம். h கீழே அந்வயம்— (வானவர்தம்மையாளுமவனும்) i தே₃வர் களைச் சனியும் புதனும் i₂ மெய்க்காட்டுக்கொண்டு அவர்கள் மிகுதி குறைகள் ஆராய்ந்து போருகிற இந்த்₃ரனும், சதுர்த₃ஶ பு₄வந ஸ்ரஷ்டாவான சதுர்முக₂னும் j (சடைமுடி யண்ணலும்) ஸாத₄கவேஷம் கிடக்கச்செய்தே ஈஶ்வராபி₄மானியான ருத்₃ரனும். (k செம்மையால் இத்யாதி₃) l ப்ரயோஜநாந்தர பரதையும் நெஞ்சிலே கிடக்கச்செய்தே

---

அ— நாலாம் பாட்டு. (வைம்மின் இத்யாதி₃) a உத்தரார்த்த₄த்தைக் கடாக்ஷித்து அவதாரிகை (அபி₄மான ப்ரசுரரான இத்யாதி₃) a₁ தடை -ப்ரதிப₃ந்த₄கம். b உந்தம்-யுஷ்மாகம். c,d வக்ஷ்ய மாணார்த்த₂த்₃வயத்தாலும், "சீர்மை" என்று - பரத்வஸௌலப்₄யங்கள் இரண்டையும் சொல்லு கிறது; இரண்டும் ஆஶ்ரயணத்துக்கு உறுப்பாகையாலே. e நீர் சொன்னால் அவர்களுக்கு விஶ்வாஸம் பிறவாதோ? என்ன (நாங்கள் சொன்னவாறே இத்யாதி₃) f "நாடொறும்" இத்யாதி₃க்கு அவதாரிகை (அதி₄காரி புருஷர்களான இத்யாதி₃) g (மேலே) "நாடொறும்- சிந்தித்து" என்றபடி. h (கீழே) அதுக்குக் கீழே; " நாடொறும் - ஆளுமவன் " என்றபடி. i கீழே கூட்டினபோதைக்குக் கருத்து (தே₃வர்களை என்று) l ப்ரயோஜநாந்தரபரர்க்குச் செம்மை ஏதென்ன (ப்ரயோஜநாந்தரபரதையும் இத்யாதி₃) m விவரணம் (ப₄ாவதே₃ாஷம் இத்யாதி₃)

---

ஜீ— நாலாம் பாட்டு. (வைம்மின் இத்யாதி₃) a உத்தரார்த்த₄த்தைக் கடாக்ஷித்து அவதாரிகை (அபி₄மாந இத்யாதி₃) c,d அர்த்த₂த்₃வயத்தாலும், "சீர்மை" என்று பரத்வ ஸௌலப்₄யங்கள் இரண்டையும் சொல்லுகிறது; இரண்டும் ஆஶ்ரயணத்துக்குறுப்பாகையாலே. e நீர் சொன்னால் விரோத₄ம் ஏதென்ன (நாங்கள் இத்யாதி₃) f "நாடொறும்" இத்யாதி₃க்கு அவதாரிகை (அதி₄காரி புருஷர்கள் இத்யாதி₃) h(கீழே அந்வயம்) கீழோடே கூட்டுதல்; "ஆளும்" என்கிறத் தோடே கூட்டுதல்; "நாடொறும்-ஆளும்" இத்யர்த்த₂:. i கீழே கூட்டினபோதைக்கு அர்த்த₂ம் (தே₃வர்களைச் சனியும் இத்யாதி₃) சனியும், புதனும் - சனிக்கிழமையும், புதன்கிழமையும். i₂ மெய்க்காட்டுக்கொண்டு-எண்ணிக்கொண்டு. j சடைமுடியண்ணலும்-ஜடையை ஶிரஸ்ஸிலேயுடைய ஈஶ்வராபி₄மானியான ருத்₃ரனும். k செம்மையால் - செவ்வையால்; ஆர்ஜவத்தால்; அநந்ய ப்ரயோஜநதையால் இத்யர்த்த₂:. l ப்ரயோஜநாந்தரபரர்க்குச் செம்மை ஏதென்ன (ப்ரயோஜநாந்தர

ஈ—அநந்யப்ரயோஜநரைப்போலே வந்து ஆஶ்ரயியாநிற்பர்கள். m ப₄ாவதே₃ாஷமும் கிடக்கச்செய்தே தன்னையே பற்றினரைப் m₁ போலேயிருக்க, புகுவது புறப்படுவதாய்த் திரியும்படியன்றே அவன்படியிருக்கிறது என்கிறார். செம்மை - செவ்வை. அதாவது - n அநந்யப்ரயோஜநரைப்போலே அவன் திருவடிகளை அநுஸந்தி₄த்து, "அவ்வநுஸந்த₄ாநம் வழிந்து புறப்பட்ட சொல்" என்று தெரியும்படி ஏத்தி, அத்தாலே த₄ரித்து கால்நடை தந்தாராய் ஸஞ்சரியாநிற்பர்கள். o A "பாடித்திரிவனே" என்னுமா போலே. p "வானவர் தம்மையாளுமவனும் நான்முகனும் சடைமுடியண்ணலும் செம்மையால் அவன் பாத பங்கயம் நாடொறும் சிந்தித்து ஏத்தித் திரிவர்" என்று அந்வயம். 4.

---

அ—அன்றிக்கே "பாதபங்கயம்" என்றத்தைக் கடாக்ஷித்து "திரிவர்" என்றதுக்குத் தாத்பர்யமாதல். n ஶப்₃த₃ார்த்த₂ம் (அநந்ய ப்ரயோஜநரைப்போலே இத்யாதி₃) o ஏத்தினல் கால்நடை தருமோ? என்ன (பாடி இத்யாதி₃) கண்ணிநுண்சிறுத்தாம்பு. p "நாடொறும்" என்றத்தை மேலே கூட்டினபோதைக்கு அந்வயங்காட்டுகிறார் (வானவர் தம்மையாளும் இத்யாதி₃) கீழே கூட்டினபோது, "வைம்மின் நும் மனத்தென்று யானுரைக்கின்ற மாயவன் சீர்மையை எம்மனோர்களுரைப்பதென்; அது நிற்க; வானவர் தம்மை - நாடொறும் - ஆளுமவனும் நான்முகனும் சடைமுடியண்ணலும் செம்மையால் அவன் பாதபங்கயம் சிந்தித்து ஏத்தித் திரிவர்" என்று அந்வயம். 4.

---

ஜீ—பரதையும் இத்யாதி₃) m விவரணம் (ப₄ாவதே₃ாஷம் இத்யாதி₃) யத்₃வா, "பாதபங்கயம்" என்றத்தைக் கடாக்ஷித்து, "திரிவரே" என்றதுக்கு ப₄ாவமாதல். m₁ (போலேயிருக்க) முழுச்சொல்; பற்றினரைப்போலே. n ஶப்₃த₃ார்த்த₂ம் (அநந்யப்ரயோஜநரைப்போலே இத்யாதி₃) o ஏத்தினல் கால்நடை தருமோ? என்ன (பாடி இத்யாதி₃) கண்ணிநுண்சிறுத்தாம்பு. பாவோடே பூண்ட இனிய இசையைப் பாடி அதுவே த₄ாரகமாக ஸஞ்சரிப்பன் இத்யர்த்த₂:. வைம்மின் இத்யாரப்₄ய, அது நிற்க, வானவர் தம்மை- நாடொறும் - ஆளும் அவனும் என்று தொடங்கி, திரிவர் இத்யந்வய. p யத்₃வா. வைம்மின் இத்யாரப்₄ய, அவன் பாதபங்கயம் - நாடொறும் - சிந்தித்து ஏத்தித் திரிவர் இத்யந்வயோ வா. 4.

---

/ஆதே₃— நாலாம் பாட்டு. "உந்தம் ஹ்ருத₃யத்திலே வையுங்கோள்" என்று நான் சொல்லுகிற ஆஶ்சர்யமான ஸௌந்த₃ர்யாதி₃ கு₃ணசேஷ்டிதங்களையுடையனானவனுடைய ஶீலவத்தையை என்போல்வார் சொல்லவேண்டுகிறதென்? நாங்கள் சொன்னவாறே ப₄க்திபாரவஶ்யத்தாலே சொன்னேம் என்பார்கள். அது கிடக்க; நாள்தோறும் சனியும் புதனும் மெய்க்காட்டுக் கொண்டு அவர்கள் மிகுதி குறைகளை ஆராய்ந்து போருகிற இந்த்₃ரனும் சதுர்த₃ஶபு₄வனஸ்ரஷ்டாவான சதுர்முக₂னும், ஸாத₄கவேஷங்கிடக்கச்செய்தே ஈஶ்வராபி₄மானியான ருத்₃ரனும் அநந்யப்ரயோஜநரைப்போலே அவன் திருவடிகளை அநுஸந்தி₄த்து, அவ்வநுஸந்த₄ாநம் வழிந்து புறப்பட்ட சொல்லென்று தெரியும்படியேத்தி அத்தாலே த₄ரித்து கால் நடை தந்தாராய் ஸஞ்சரியாநிற்பார்கள் என்கிறார்—"வைம்மின் நும்" இத்யாதி₃யால். 4.

---

A கண்ணிநுண் 2. / 5-வது பாசுரம் முதல் ஆதே₃ஶோபநிஷச்ச₂ாயை கிடைக்கவில்லை.

5. திரியுங் காற்றோ டகல்வி சும்பு திணிந்த மண்கிடந் தகடல்
எரியுந் தீயோ டிருசு டர்தெய்வ மற்றும் மற்றும் முற்றுமாய்க்
கரிய மேனியன் செய்ய தாமரைக் கண்ணன் கண்ணன்விண் ணோரிறை
சுரியும் பல்கருங் குஞ்சி யெங்கள் சுடர்மு டியண்ணற் றோற்றமே.

---

ஆ— 5. வ்யா:— (திரியும்) ஸ்வஸங்கல்பாதீ4னமான வாய்வாகாஶாதி3 ஸகல பதா3ர்த்த2ங்களையும், க3த்வரத்வ விஶாலத்வாதி3 தத்தத்3த4ர்மங்களையுமுடையனாய், இந்தீ3வர த3ளஶ்யாமனாய், பத்3மபத்ரேக்ஷணனாய், நீலாளகப3ந்த4ப3ந்து4ரனாய், ஶேஷ ஶேஷாஶநவைநதேய ப்ரப்4ருத்யஸங்க்2யேய நித்யஸித்3த4 பரமஸூரிபி4ஸ்ஸேவ்யமானனாயிருந்த எம்பெருமானை நான் காணப்பெற்றேனாகாதே! என்கிறார். 5.

---

ஒ— அவ:— அஞ்சாம் பாட்டில் — தன் விபூ4தியிலே ஒன்றைப்பிரியில் தனக்குச் செல்லாமையாலே, எப்போதும் அவற்றோடேகூடி எம்பெருமானுடைய தோற்றரவிருப்பது என்கிறார். 1. "भूतानामीश्वरोऽपि सन्" (பூ4தாநாமீஶ்வரோऽபி ஸந்) என்னும்படியாலே ஐஶ்வர்யாதி3களோடே கூட வந்து திருவவதாரம் பண்ணும் என்றுமாம்.

வ்யா:— (திரியும் என்று தொடங்கி) **தனித்தனியே நியதஸ்வபா4வமான பூ4தபஞ்சகங்கள், சந்த்3ரஸூர்யர்கள், தே3வர்கள், மநுஷ்யர்கள், திர்யக்ஸ்தா2வரங்கள் இவை இத்தனையோடும் கூடி.** (கண்ணன் என்று தொடங்கி) **க்ருஷ்ணனை நீர்மையாலே அயர்வறும் அமரர்களை அடிமைகொண்டு, சுழன்று தனித்தனியே எண்ணிக்கொள்ளலாம்படியான திருக்குழலையுடையனாய், ஆஶ்ரித பரதந்த்ரதயா நிரவதி4கதேஜஸ்ஸான திருவபி4ஷேகத்தையுடையனான ஸர்வேஶ்வரனுடைய தோற்றரவு. 5.**

---

ப— 5. அவ:— அநந்தரம், அவனுடைய அவதாரம் அகி2லவிபூ4தியோடும் அவிநாபூ4தம் என்கிறார்.

**கரிய**—ஶ்யாமளமான, **மேனியன்**—வடிவையுடையனாய், **செய்ய**—(அதுக்குப் பரபா4கா3மாய்ச்) சிவந்த, **தாமரை**—தாமரைபோன்ற, **கண்ணன்**—கண்களையுடையனாய், **விண்ணோர்**—நித்யஸூரிகளுக்கு நித்யாநுபா4வ்யமான, **இறை**—மேன்மையையுடையனாய், **சுரியும்**—சுருண்டு, **பல்**—வெடித்து அலகலகாய், **கரும்**—கருகின, **குஞ்சி**—குழலையுடையனாய், **எங்கள்**—எங்களையும் அடிமைகொள்ளும், **சுடர்**—ஔஜ்ஜ்வல்யத்தையுடைய, **முடி**—திருவபி4ஷேகத்தையுடையனான, **அண்ணல்**—ஸ்வாமியாயுள்ள, **கண்ணன்**—க்ருஷ்ணனுடைய, **தோற்றம்**—ஆவிர்பா4வமானது, **திரியும்**—ஸதா3க3தியாயுள்ள, **காற்றோடு**—வாயுவோடேகூட, **அகல்**—விஸ்தீர்ணமான, **விசும்பு**—ஆகாஶம், **திணிந்த**—கடி2னையான, **மண்**—பூ4மி, **கிடந்த**—கரை கடவாது கிடந்த, **கடல்**—கடல், **எரியும்**—ஊர்த்4வ ஜ்வலனமான, **தீயோடு**—அக்3நியோடேகூட, (வ்யஷ்டி ஸ்ருஷ்ட்யந்தர்க3தமான) **இருசுடர்**—

**இ—1.''भक्तानाम्''(ப$_4$க்தாநாம்)** என்று இருக்குமவனை. "ஆளும் பரமனை"(2) என்கிற பாட்டை நினைக்கிறது. **(துளிக்கும் நறுங்கண்ணி)** ஸ்வஸ்பர்ஶத்தாலே செவ்வி பெற்றுத் துளியாநிற்கிற மது$_4$வையும் பரிமளத்தையுமுடைய திருத்துழாய் மாலையையுடையனாய்; "நறுந்துழாய்ப் போதனை" (3) என்றத்தை நினைக்கிறது. **(தூமணிவண்ணன் எம்மான்தன்னை)** பழிப்பற்ற நீலமணிபோலேயிருக்கிற திருநிறத்தைக் காட்டி என்னை அகப்படுத்திக்கொண்டவனை; "தோளுமோர் நான்குடைத் தூமணிவண்ணன்"(2) என்றத்தை நினைக்கிறது. **(ஒளிக்கொண்ட சோதியை)** ஒளிமிக்க தேஜஸ்ஸை; "பயிலுஞ் சுடரொளி மூர்த்தியை"(1) என்றத்தை நினைக்கிறது. **(உள்ளத்துக் கொள்ளுமவர் கண்டீர்)** கு$_3$ணங்களை அநுப$_4$வித்து வித்$_3$த$_4$ராய் வாய்விடமாட்டாதேயிருக்குமவர் கண்டீர். **(சலிப்பின்றியாண்டெம்மை)** ப$_4$க$_3$வத்ஸமாஶ்ரயணம் பண்ணினார் ப்$_3$ரஹ்மாதி$_3$களாய், 'ஶ்வரோஹம்' என்று மீளலாம்; ததீ$_3$யஶேஷத்வபர்யந்தமானாலாயிற்று மீளாதொழிவது. **(சன்மசன்மாந்தரம் காப்பரே)** ஜந்மபரம்பரைகளில் புகாதபடி ரக்ஷிப்பர்கள். முன்பு ஜந்மத்தையும் அநுமதிபண்ணினார், அவர்கள்பக்கல் ஆத$_3$ரத்தாலே; இங்கு அவர்கள் செய்யும்படி சொல்லுகிறார். 6.

---

**ஈ— அவ:— ஆறும் பாட்டு.** a **கீழ்ச்சொன்ன ஸௌந்த$_3$ர்யாதி$_3$களைத்** a$_2$ **திரள அநுப$_4$விக்குமவர்கள் எனக்கு ரக்ஷகர் என்கிறார்.**

வ்யா:— (b அளிக்கும் பரமனை) **இவ்வாத்மாக்களை ரக்ஷிக்குமிடத்தில் தனக்கு அவ்வருகில்லாதவனை.** c **[அன்றிக்கே, உபகரிக்குமிடத்தில் மேலில்லாதவனென்னுதல். அளிக்கை - ரக்ஷிக்கையும், கொடுக்கையும்.]** d (கண்ணனை) e **அளிப்பது தன்னையிறே;** fA **"எனக்கே தன்னைத் தந்த கற்பகம்"** g (ஆழிப்பிரான் தன்னை)

---

அ— ஆறும் பாட்டு. (அளிக்கும் பரமனை இத்யாதி$_3$) a "அளிக்கும் பரமனை" என்று தொடங்கி "சன்மசன்மாந்தரம் காப்பர்" என்னுமளவும் கடாக்ஷித்து அவதாரிகை (கீழ்ச்சொன்ன இத்யாதி$_3$) (கீழ்ச்சொன்ன) என்றது-"பயிலும் சுடரொளி"(1) என்று தொடங்கி மூன்று பாட்டாலும் சொன்ன என்றபடி. a$_2$ திரள-ஸங்க்$_3$ரஹமாக. அதாவது-சேர என்றபடி. b,e"அளிக்கும்" என்றதுக்கு-கீழே ரக்ஷிக்கையைச் சொல்லி, அர்த்தா$_2$ந்தரம் (அளிப்பது தன்னையிறே என்று); இந்த அர்த்த$_2$த்துக்கு அளித்தல் - கொடுத்தல். அன்றிக்கே, ஏகார்த்த$_2$மேயாகக்கடவது. அளிக்கை - அநிஷ்டங்களைப்போக்கி இஷ்டங்களைக் கொடுக்கையாகையாலே இத்தைச்சொல்லுகிறது (அளிப்பது தன்னையிறே என்று) என்றும் அருளிச்செய்வர். (தன்னையிறே) ஆகையாலே பரமனென்னக் குறையில்லை என்று கருத்து. b,d,e "கண்ணன்" என்று-ப$_4$வ்யதையிறே தோற்றுகிறது, ஆகையாலே "அளிக்கும் பரமன்" என்று தன்னையளித்தமை தோன்றத் தட்டில்லையிறே. f இதுக்கு ப்ரமாணம் (எனக்கே இத்யாதி$_3$) முந்தின அர்த்த$_2$த்துக்கு முகந்தோன்றாதேநின்று ரக்ஷிக்கை

---

ஜீ— ஆறும் பாட்டு. (அளிக்கும் இத்யாதி$_3$) a பாட்டெல்லாம் கடாக்ஷித்து அவதாரிகை-(கீழ்ச்சொன்ன இத்யாதி$_3$) கீழ்ச்சொன்ன-"பயிலும் சுடரொளி"தொடங்கிச்சொன்ன. a$_2$ திரள-ஸங்க்$_3$ரஹமாக. b,e அளிக்கை என்றதுக்கு-ரக்ஷிக்கையென்று கீழேசொல்லி,கொடுக்கையென்று அர்த்தா$_2$ந்தரம்-(அளிப்பது தன்னையிறே) என்று. b,h'அளிக்கும்' என்றதின் த்$_3$விதீயார்த்த$_2$த்துக்குச் சேர ப$_4$ாவம்

---

c [ ] ப்ரக்ஷிப்தம் என்பர். A 2-7-11.

ஈ—h1. "नायुधानि" (நாயுத₄ாநி) என்கிறபடியே, தன்னோடு ஆயுத₄த்தோடு வாசியற 1. "भक्तानाम्" (ப₄க்தாநாம்) என்றிருக்குமவனை; i "ஆளும் பரமனை"(2) என்கிற பாட்டை நினைக்கிறது. j (துளிக்கும் இத்யாதி₃) k அவ்வளவிலகப்படாதாரை அகப் படுத்துகைக்கு ஈடான கண்ணியிருக்கிறபடி. (துளிக்கும் நறுங்கண்ணி) திருமேனி யின் ஸ்பர்ஶத்தாலே செவ்விபெற்று மது₄ ஸ்யந்தி₃யாநிற்பதாய், $k_2$ நறுநாற்றத்தை யுடைய திருத்துழாய்மாலையையுமுடையனும்; l "நறுந்துழாய்ப்போதனை"(3) என் கிறத்தை நினைக்கிறது. m (தூமணிவண்ணன் எம்மான்தன்னை) n பழிப்பற்ற நீலமணி போலேயிருக்கிற திருநிறத்தைக் காட்டி என்னை அநந்யார்ஹமாக்கினவனை; oA "மணியை வானவர் கண்ணனை" என்கிறபடியே நித்யஸூரிகளை எழுதிக்கொண்ட p படியே காணும் இவரையும் எழுதிக்கொண்டது; qB "படிகண்டறிதியே" என்னக்

---

அ—யன்றிக்கே தான் அவதரித்து ரக்ஷிக்குமென்று-"கண்ணன்"என்ற பத₃ஸங்க₃தியாகக்கடவது. g "ஆழிப்பிரான்தன்னை" என்றதுக்கும்-ரக்ஷணபரிகரமான தி₃வ்யாயுத₄ங்களை உடையவனென்று கொள்வது. g,h ஔத₃ார்ய பக்ஷத்திலே "ஆழிப்பிரான் தன்னை" என்றதுக்கு ஸங்க₃தி அருளிச் செய்கிறார் (நாயுத₄ாநி இத்யாதி₃) a,i,l,$q_2$,r "கீழ்ச்சொன்ன ஸௌந்த₃ர்யாதி₃களைத் திரள அநு ப₄விக்குமவர்கள்" இத்யவதாரிகோக்தம் அர்த்த₂ம் தத்தத்பதே₃ந த₃ர்ஶயதி ("ஆளும் பரமனை என்கிற பாட்டை" இதி வாக்யேந, "நறுந்துழாய்ப்போதனை" இதி வாக்யேந ச, "தோளுமோர் நான்குடை" இதி வாக்யேந ச, "பயிலும் சுடரொளி" இதி வாக்யேந ச) g,j,k "ஆழிப்பிரான் தன்னை" என்றத்தைத் தளமாக்கிக்கொண்டு "துளிக்கும் நறுங்கண்ணி" என்றதுக்கு ரஸோக்தியாலே ஸங்க₃தி அருளிச்செய்கிறார் (அவ்வளவில் இத்யாதி₃) ஒரு ம்ருக₃த்தை வளைத்தால் அதுக்குத் தப்பினால் கண்ணியிட்டுப் பிடிப்பார்களிறே. அதுவாயிற்று ரஸோக்தி. கண்ணி - குளச்சிட்ட கயிறும், மாலையும். n பழிப்பு-மாலிந்யம். p படியே-விக்₃ரஹ ஏவ இத்யர்த்த₂:. m,o "மணிவண்ண னெம்மான் தன்னை" A "மணியை வானவர் கண்ணனை" இதி ப்ரயோக₃ ஸாம்யே அஸ்ய வாக்யஸ்ய ஹ்ருத₃யம். q "படி" என்று விக்₃ரஹத்தைச் சொல்லுமோ? என்ன (படிகண்டு இத்யாதி₃) முதல்திருவந்தாதி. "மணியை" என்றதுக்கு - அவ்விடத்திலே ஸௌலப்₄யபரமாகச் சொன்ன அர்த்த₂மேயன்றிக்கே, இவ்விடத்தில் (நித்யஸூரிகளை எழுதிக்கொண்டபடியேகாணும்) என்கை

---

ஜீ—(நாயுத₄ாநி இத்யாதி₃)ஜிதந்தாயாம்,பூர்வமேவ லிகி₂தம். a,i,l,$q_2$,r (கீழ்ச்சொன்ன ஸௌந்த₃ர் யாதி₃களைத் திரள அநுப₄விக்குமவர்கள்) என்று அவதாரிகையில் சொன்ன அர்த்த₂த்தைத் தத்தத் பத₃ங்களாலே காட்டுகிறார் ('ஆளும் பரமனை' இத்யாதி₃யாலும், 'நறுந்துழாய்' இத்யாதி₃யாலும், 'தோளுமோர் நான்குடை' இத்யாதி₃யாலும், 'பயிலும் சுடரொளி' இத்யாதி₃யாலும்), g,j,k கீழ்ப் பத₃த்தையும் கூட்டி மேலுக்கு ரஸோக்தியாக ஸங்க₃தி (அவ்வளவில் இத்யாதி₃) ஒரு ம்ருக₃த்தை வளைத்தால் அதுக்குத் தப்பினால் கண்ணியிட்டுப் பிடிப்பார்களிறே என்று ரஸோக்தி. கண்ணி- குளச்சிட்ட கயிறும், மாலையும். $k_2$ நறுநாற்றம்-மிக்க பரிமளம். n பழிப்பு-மாலிந்யம். p படியே- விக்₃ரஹமே. q படியென்று - விக்₃ரஹத்தைச் சொல்லுமோ? என்ன (படிகண்டு இத்யாதி₃) முதல்திருவந்தாதி [85] o "மணியை வானவர் கண்ணனை" என்றவிடத்திலே, 'மணி' என்று- ஸௌலப்₄யபரமாகக் கீழ் வ்யாக்₂யாதமானாலும், இவ்விடத்தில் இப்படி அருளிச்செய்கையாலே,

---

ப்ர— (ஆளும் பாட்டு) (அளிக்கும் இத்யாதி₃) (ஆழிப்பிரான்தன்னை) h1. जितन्तायाम् "न ते रूपं न चाकारो नायुधानि न चास्पदम्। तथापि पुरुषाकारो भक्तानां त्वं प्रकाशसे॥"

---

A 1-10-11. B முதல்-திருவ 85.

ஈ—கடவதிறே; q$_2$ **"தோளுமோர் நான்குடைத் தூமணிவண்ணன்"(2) என்றத்தை நினைக்கிறது.** (ஒளிக்கொண்ட சோதியை) **நிரவதி$_4$க தேஜோரூபமான விக்$_2$ரஹத்தையுடையவனை;** r **"பயிலுஞ் சுடரொளி"(1) என்றத்தை நினைக்கிறது.** s (உள்ளத்துக் கொள்ளுமவர் கண்டீர்) t **கு$_3$ணங்களை அநுஸந்தி$_4$த்து வித்$_3$த$_4$ராய் வாய்விட மாட்டாதேயிருக்குமவர்கள் கிடீர்.** (u சலிப்பின்றி u$_2$ ஆண்டு எம்மை) v **ப$_4$க$_3$வத் ஸமாஶ்ரயணம் பண்ணினால் ப்$_3$ரஹ்மாத்$_3$யைஶ்வர்யங்களைக்கொண்டு மீளவுமாம், ததீ$_3$ய ஶேஷத்வ பர்யந்தமானாலாயிற்று மீளாதொழிவது.** w **மீண்டார்களாகிலும்** w$_2$A **திரிதந்தாகிலும் தேவபிரானுடைக் கரியகோலத்** w$_3$ **திருவுருக் காணுமித்தனையிறே.** xB **"தெரிவைமாருருவமே மருவி" என்கிறபடியே.** x$_2$ **பலவுருச் சொல்லிப் போக வேண்டாதே இவ்வோருருவிலும் போரும்படியிறே** x$_3$ **அவர்கள் சொல்லுவது.** y (சன்ம சன்மாந்தரம் காப்பரே) **ஜந்மபரம்பரைகளில் புகாதபடி ரக்ஷிப்பார்கள்.** z **கீழிற்பாட்டுக்களிலே, ஜந்மத்தை ஆத$_3$ரித்தார் ஸ்ரீவைஷ்ணவர்கள் பக்கல் ஆத$_3$ரத்தாலே; இங்கு அவர்கள் செய்யும்படி சொல்லுகிறார்.** 6.

---

அ-யாலே, இதுவும் ஓர் அர்த்த$_2$ம் கண்டுகொள்வது. s,t"ஏத்துமவர்கள்"என்னாதே,"உள்ளத்துக் கொள்ளுமவர்" என்றதுக்குத் தாத்பர்யம் (கு$_3$ணங்களை இத்யாதி$_3$) u,v"அவரே கண்டீர்-எம்மை சலிப்பின்றி - ஆண்டு - சன்மசன்மாநதரம் காப்பர்" இதி யோஜநாஞ்ச, சலிப்பு - சலநம்; தச்ச-ப்ரயோஜநாந்தரபரத்வம் இத்யர்த்த$_2$ஞ்ச ஹ்ருதி$_3$ நித$_4$யாவத$_4$ாரணார்த்த$_2$மாஹ (ப$_4$க$_3$வதி$_3$தி) w ததீ$_3$யஶேஷத்வபர்யந்தம்போனாலும் மீளுகிறவரில்லையோ? என்ன (மீண்டார்களாகிலும் இத்யாதி$_3$) w$_2$(திரிதந்தாகிலும்) கண்ணிநுண்சிறுத்தாம்பு. w$_3$,x "திருவுரு" என்ற ஏகவசந தாத்பர்யமாக ரஸோக்தி (தெரிவைமார் இத்யாதி$_3$) பெரியதிருமொழி. x$_2$ பலவுருச்சொல்லுகை-வாய்க்கு ஆயாஸம் என்று த்$_4$வந்யர்த்த$_2$ம். x$_3$ அவர்கள் சொல்லுவது - ப$_4$ாக$_3$வதர்கள் நியமிப்பது என்றபடி; x$_3$.u$_2$(சொல்லுவது) இதுவே ஆட்சியென்று கருத்து. y"சன்மசன்மாந்தரம் காப்பரே"-இந்த ஜந்மம் நிமித்தமாகவும் ஜந்மாந்தரம் நிமித்தமாகவும் காப்பர் என்றபடி. இந்த ஜந்மம் நிமித்தமாகக் காக்கையாவது-அதின் கார்யமான ராக$_3$த்$_3$வேஷாதி$_3$கள் பிறவாதபடிபண்ணி, ப$_4$க$_3$வத்$_3$ப$_4$ாக$_3$வத விஷய ப்ராவண்ய கைங்கர்யங்களை உண்டாக்குகை; ஜந்மாந்தரம் நிமித்தமாகக் காக்கையாவது-அது வாராமல் பண்ணுகை. அன்றிக்கே - சன்மசன்மாந்தரமென்று - ப$_4$ாவி ஜன்மபரம்பரைகள் தன்னையே சொல்லிற்றாகவுமாம். z "பயிலும் பிறப்பிடைதோறு" என்று கீழில் நாலுபாட்டுக்களிலே-ஜந்மத்தைவிரும்பி, இப்பாட்டிலே-த்யாஜ்யமாகச் சொல்லுவானென் ? என்ன (கீழில் பாட்டுக்களிலே இத்யாதி$_3$) 6.

---

ஜீ—வடிவழகும் ஓர் அர்த்த$_2$மாகக் கண்டுகொள்வது s,t 'ஏத்துமவர்' என்னாதே, 'உள்ளத்துக் கொள்ளுமவர்' என்றதுக்கு பா$_4$வம் (கு$_3$ணங்களை இத்யாதி$_3$) u,v 'சலிப்பின்றி' என்று விஶேஷித்ததுக்கு ப$_4$ாவம் (ப$_4$க$_3$வத்ஸமாஶ்ரயணம் இத்யாதி$_3$) u சலிப்பு - சலநம். அதாவது - ப்ரயோஜநாந்தரபரதை. w ததீ$_3$ய ஶேஷத்வபர்யந்தம் போனாலும் மீளுகிற பேரில்லையோ ? என்ன (மீண்டார்களாகிலும் இத்யாதி$_3$) w$_2$ (திரிதந்தாகிலும் இத்யாதி$_3$) மீண்டார்களாகிலும் தேவபிரானுடைய கறுத்த அழகிய திருமேனியைக் காணுமத்தனை இத்யர்த்த$_2$:. w$_3$,x 'திருவுரு' என்ற ஏகவசநத்துக்கு ப$_4$ாவம் (தெரிவைமார் இத்யாதி$_3$) ரஸோக்தி. x திருமொழி - முதல்திருமொழி - மூன்றும் பாட்டு—(சேமமேவேண்டி இதயாதி$_3$) ஸ்த்ரீகளுடைய தே$_3$ஹத்தையே ஆத$_3$ரித்து இத்யர்த்த$_2$:. x$_2$ பலவுருச் சொல்லுகை-வாய்க்கு ஆயாஸமென்று த்$_4$வந்யர்த்த$_2$ம். x$_3$ அவர்கள்-ப$_4$ாக$_3$வதர்கள். y "சன்மசன்மாந்தரம் காப்பர்"-இந்த ஜந்மநிமித்தமாகவும் ஜந்மாந்தர நிமித்தமாகவும் காப்பர் என்றபடி. z முதற்பாட்டுத் தொடங்கி இவ்வளவாக, ஜந்மதை ஆத$_3$ரித்து, இப்பாட்டிலே த்யாஜ்யமாகச் சொல்லுவானென் ? என்ன (கீழிற்பாட்டுக்களிலே இத்யாதி$_3$) க்ரமேண அந்வய:. 6.

---

A கண்ணி-3. B பெரியதிரு 1-1-3.

7. சன்மசன் மாந்தரம் காத்துஅடி யார்களைக் கொண்டுபோய்த்
தன்மை பெறுத்தித்தன் தாளிணைக் கீழ்க்கொள்ளு மப்பனைத்
தொன்மை பிதற்றவல் லாரைப் பிதற்று மவர்கண்டீர்
நன்மை பெறுத்துஎம்மை நாளுய்யக் கொள்கின்ற நம்பரே.

---

**ஆ—** 7. வ்யா:— (சன்மசன்மாந்தரம்) ஜந்மங்கள்தோறும் இந்த லோகத்திலே தானும் வந்து பிறந்தருளி ஆச்ரிதரை ரக்ஷித்து, பின்னை அவர்களைக் கொண்டுபோய் அஸங்குசிதஜ்ஞாநராக்கித் தன் தாளிணைக்கீழ்க் கொள்ளும் அப்பனுடைய இந்த ஸ்வாபா₄விகமான கு₃ணத்தைப் பிதற்றவல்லாரைப் பிதற்றுமவர் கண்டீர், ஸ்வசேஷதைக ரதித்வஸம்பத்தை நமக்குத் தந்து அத்தை நித்யஸித்₃த₄மாக்குவர் என்கிறார். 7.

---

**ஒ— அவ:— ஏழாம் பாட்டில் — ஆச்ரிதவிஷயத்தில் அவன் பண்ணும் மஹோப காரங்களை அநுஸந்தி₄த்து அப்படிகளைப் பிதற்றவல்லாரைப் பிதற்றுமவர்கள் கிடீர், எனக்கு எற்றைக்கும் ஸ்வாமிகள் என்கிறார்.**

வ்யா:— *(சன்மம் என்று தொடங்கி)* **ஜந்மங்கள்தோறும் வந்து ரக்ஷித்து ஆச்ரிதரைக் கொண்டுபோய்ப் பரிபூர்ணஜ்ஞாநராக்கித் தன் திருவடிக்கீழே நிரந்தர கைங்கர்யத்தைக்கொள்ளும் பரமப₃ந்து₄வை.** *(தொன்மை என்று தொடங்கி)* **நைஸர்க்கி₃கமான கு₃ணங்களிலே ஈடுபட்டுப் பேசுமவர்களைப் பிதற்றுமவர் கிடீர் ப₄ாக₃வதசேஷத்வஸம்பத்தை நமக்குத் தந்து அத்தை என்றும் நடத்தக்கடவ முதலிகள். 7.**

---

**ப—** 7. அவ:— அநந்தரம், ஸ்வாநுப₄வம் பண்ணுவாரை ஸ்வரூபாவிர்ப₄ாவத்தைப் பிறப்பித்து அநுப₄விப்பிக்குமவனைப் புகழுமவரைப் புகழுமவர்கள் நமக்கு நித்ய புருஷார்த்த₂ப்ரத₃ர் என்கிறார்.

**சன்மசன்மாந்தரம்**—ஜந்மபரம்பரைகள், **காத்து**—(வாராதபடி) பரிஹரித்து, **அடியார்களை** — சேஷத்வஜ்ஞாநமுடையவர்களை, **கொண்டுபோய்** — (ஒரு தே₃ச விசேஷத்திலே) கொண்டுபோய், **தன்மை பெறுத்தி**—ஸ்வரூபாவிர்ப₄ாவத்தைப் பிறப்பித்து, **தன் தாளிணைக்கீழ்**—தன் திருவடிகளின்கீழே, **கொள்ளும்**—அடிமை கொண்டருளும், **அப்பனை**—ஸ்வாமியானவனை, **தொன்மை**—ஸ்வாப₄ாவிகோபகார கத்வத்தை, **பிதற்றவல்லாரை**—சொல்லி அக்ரமமாகப் புகழவல்லாரை, **பிதற்றுமவர் கண்டீர்**—தாங்களும் ப்ரேமவித்₂த₄ராய்ப் புகழுமவர்கள்கிடீர், **எம்மை**—நம்மை, **நன்மை பெறுத்து** — (A அந்தமில்பேரின்பத்தடியரோடிருக்கும்) நன்மையைப் பெறும்படி பண்ணி, **நாள்**—யாவதா₃த்மப₄ாவி, **உய்யக்கொள்கின்ற**—உஜ்ஜீவிப்பித்துக் கொள்வாராக, **நம்பர்**—விச்வஸிக்கப்படுமவர்கள்; **நம்பர்**—நம்பப்படுமவர்கள்.

இம்மூன்றுபாட்டாலும் - ப₄ாக₃வதருடைய சரண்யத்வம் சொல்லிற்று. 7.

---

A 10-9-11.

ஜி— அவ:— ஏழாம் பாட்டில் — ஆஶ்ரிதவிஷயத்தில் அவன்பண்ணும் மஹோப காரங்களிலே வித்₃த₄ரானவர்களுக்குத் தோற்றிருக்குமவர்கிடீர், எனக்கு எற்றைக்கும் ஸ்வாமிகள் என்கிறுர்.

வ்யா:— **(சன்மசன்மாந்தரம் காத்து)** ஐந்மபரம்பரைகளிற் புகாதபடி பரி ஹரித்து. **(அடியார்களை)** தன்பக்கலிலே ஸர்வப₄ரந்யாஸம் பண்ணியி நக்குமவர்களை. **(கொண்டுபோய்த் தன்மை பெறுத்தி)** ஒரு நாடீ₃விஶேஷத்தாலே புறப்படுத்தி அர்ச்சிராதி₃மார்க்கத்தாலே ஒரு தே₃ஶவிஶேஷத்திலே கொண்டுபோய், 1. **“स्वेन रूपेण अभिनिष्पद्यते” (ஸ்வேந ரூபேண அபி₄நிஷ்பத்₃யதே)** என்று ஸ்வஸ்வரூபத்தைக்கொடுத்து. **(தன் தாளிணை இத்யாதி₃)** ஸர்வாதி₄கனுன தனக்குச் சரணேபத₄ாநத்தோபாதியாகக்கொள்ளும் நிருபாதி₄கஶேஷியை. **(தொன்மை இத்யாதி₃)** ஸ்வாப₄ாவிகமான ஔத₃ார்யகு₃ணத்திலே ஈடுபட்டு அக்ரமமாகப் புகழுமவர்கள் விஷயத்திலே வித்₃த₄ராமவர்கள்கிடீர்! 2. **“क्षिपामि” (க்ஷிபாமி)** என்னுமது ஸோபாதி₄கம்: ஔத₃ார்யமே இவனுக்கு ஸ்வரூபம். **(நன்மை பெறுத்து)** ததீ₃யஶேஷத்வபர்யந்தமான ப₄க₄வச்சே₂ஷத்வஸம்பத்தைத் தந்து. **(எம்மை நாளுய்யக்கொள்கின்ற நம்பரே)** அத்தை யாவதா₃த்மப₄ாவி நடத்தக்கடவ விஶ்வ ஸநீயர்; முதலிகள் என்றுமாம். 7.

---

**ஈ— அவ:— ஏழாம் பாட்டு. a ஆஶ்ரிதவிஷயத்தில் அவன்பண்ணும் மஹோபகாரங் களிலே வித்₃த₄ரானவர்களுக்குத் தோற்றிருக்குமவர்கள் கிடீர் எனக்கு a₂ எற்றைக் கும் ஸ்வாமிகள் என்கிறுர்.**

**வ்யா:—** b(சன்மசன்மாந்தரம் b₂காத்து) c **பஞ்சாக்₃நிவித்₃யையில் சொல்லுகிற படியே மேக₄த்திலே புக்கு வர்ஷரூபத்தாலே பூ₄க₃தமாய், வ்ரீஹியிலே புக்கு**

---

அ— ஏழாம் பாட்டு. (சன்மசன்மாந்தரம் இத்யாதி₃) a“தொன்மைபிதற்றவல்லாரைப் பிதற்றுமவர் கண்டீர், நாளுய்யக்கொள்கின்ற நம்பர்” என்றத்தைக் கடாக்ஷித்து அவதாரிகை (ஆஶ்ரித விஷயத்தில் இத்யாதி₃) a₂எற்றைக்கும்-ஸர்வகாலத்துக்கும். b₂காத்து-பரிஹரித்து. b,c “சன்ம சன்மாந்தரம்” என்றதுக்கு - அப்படி ஐந்மபரம்பரைகளுண்டோ? என்ன அருளிச்செய்கிறுர் (பஞ்சாக்₃நிவித்₃யை என்று தொடங்கி) “தன்மைபெறுத்தி” என்றத்தோடொக்க “காத்து” என்றதுவும் புருஷார்த்த₂மாகச் சொன்னவிதுக்கு - நிவர்த்யமான ஜன்மத்தின் கையிலகப்படும் பாடிலே நோக்கு என்கிறுர் (பஞ்சாக்₃நி இத்யாதி₃) என்னவுமாம். பஞ்சாக்₃நய: - அக்₃நி த்வேந ரூபிதா: த்₃யு பர்ஜந்ய ப்ருதி₂வீ புருஷ யோஷித:. இவ்விடத்திலே, அக்₃நியென்றும்,

---

ஸ்ரீ— ஏழாம் பாட்டு. (சன்மசன்மாந்தரம் இத்யாதி₃) a(தொன்மை பிதற்றவல்லாரை இத்யாதி₃) மேலெல்லாம் கடாக்ஷித்து அவதாரிகை (ஆஶ்ரித இத்யாதி₃) a₂எற்றைக்கும் எல்லாக்காலத்துக்கும். b₂காத்து - பரிஹரித்து. b,c‘சன்மசன்மாந்தரம்’ என்கைக்கு அப்படி ஐந்மபரம்பரைகளுண்டோ? என்ன (பஞ்சாக்₃நி இத்யாதி₃) பஞ்சாக்₃நிகளாவன-அக்₃நித்வேந ரூபிதங்களான த்₃யு பர்ஜந்ய

---

ப்ர— (ஏழாம் பாட்டு) (சன்மசன்மாந்தரம் இத்யாதி₃) c छान्दोग्ये [५] पञ्चाग्निविद्या-யாம்—“असौ वाव लोको गौतमाग्निस्तस्यादित्य एव समिद्रश्मयो धूमोऽहरर्चिश्चन्द्रमा अङ्गारा

ஈ—அந்நருபத்தாலே புருஷன்பக்கலிலே புக்கு, பின்பு பஞ்சமியான ஆஹுதியிலே புக்கு, பின்பிறே க₃ர்ப்ப₄மாவது; இப்படி வருகிற ஜந்மபரம்பரைகளை வேர்ப்

---

அ—ஆஹுதியென்றும் பர்யாயம். தத்ர சேதந: ப்ரத₂மம் யாதநாஶரீரேண ஸஹிதோ நரகமநுபூ₄ய தத்ர தச்ச₂ரீரம் த்யக்த்வா, அத₂ புண்ய ஶரீரம் பரிக்₃ருஹ்ய ஸ்வர்க்க₃மநுபூ₄ய, அநந்தரம் கோட்டைக்குப் புறம்பே "த்₄வம்ஸ" என்று தள்ள, தச்ச₂ரீரத்தை விட்டு, அந்த ஶரீரத்தை ராக்ஷஸர் பு₄ஜிக்க, ஸூக்ஷ்ம ஶரீரவிஶிஷ்டோ நிராலம்ப₃னாய் ஆகாஶே பததி; தமேநமாதி₃த்ய: ஸ்வகிரணங்களாலே ஹிமத்தை உபாத₃ாநம் பண்ணி, அந்த ஈரத்தாலே ஆகாஶத்திலே மங்கிக்கிடக்கிற ஆத்மாவை எடுத்து மேக₄த்திலே பொகட, அந்த மேக₄த்திலே ஹிமம் வர்ஷரூபேண பரிணமிக்குமளவும் கிடந்து வர்ஷத₄ாரைகளோடே பூ₄மியிலேவிழ, அந்த ஜலம் ஸஸ்யத்துக்கு த₄ாரகமாகையாலே தத்₃த்₃வாரா ஸஸ்யத்திலே புக்கு, அந்த ஸஸ்யம் பக்வமாய், அன்னரூபேண பரிணமிக்குமளவும் கிடந்து, அநந்தரம் அந்நத்₃வாரா புருஷ ஶரீரத்திலே புக்கு, அவ்வன்னம் ஶுக்ல ஶோணிதரூபமாய்ப் பரிணமிக்குமளவும் கிடந்து, ஶுக்லஶோணிதத்₃வாரா ஸ்த்ரீஶரீரத்தை ப்ரவேஶித்து 1. "பஞ்சம்யாமாஹுதாவாப: புருஷவசஸோ ப₄வந்தி" என்கிறபடியே புருஷஶப்₃த₃வாச்யனுகக் கடவன். ஆப: - அப்ப்ரசுர ஸூக்ஷ்ம ஶரீரவிஶிஷ்டாஶ்சேதநா:, பஞ்சம்யாமாஹுதௌ - பஞ்சமாக்₃நித்வேந ரூபிதே ஸ்த்ரீஶரீரே, புருஷவசஸோ ப₄வந்தி - புருஷஶப்₃த₃வாச்யா ப₄வந்தீத்யர்த்த₂:. ஆப:-என்றது, மற்ற பூ₄தங்களுக்கும் உபலக்ஷணமாய், ஸூக்ஷ்மபூ₄தவிஶிஷ்டனை சேதனனை லக்ஷிக்கிறது. ஆக இத்தால், ப்ரத₂மாஹுதியே தொடங்கி அநுவர்த்தமானங்களான ஸூக்ஷ்மங்களான அப்புக்களே புருஷஶப்₃த₃வாச்யங்கள் என்றதாயிற்று. இந்த ஜந்மந்தானேயுண்டாய்விட்டதே, இனி ஜந்ம

---

ஜீ-ப்ருதி₂வீ புருஷ யோஷித்துக்கள். இவ்விடத்தில், அக்₃நியென்றும்,ஆஹுதியென்றும் பர்யாயம். இந்த ஐந்திலும் சேதநன் ப்ரவேஶிக்கும் க்ரமமாவது - யாதநாஶரீரத்தாலே நரகாநுப₄வம் பண்ணி, அந்த ஶரீரத்தை விட்டுப் புண்யஶரீரத்தையெடுத்து ஸ்வர்க்க₃ாநுப₄வம் பண்ணி, அநந்தரம் கோட்டைக்குப் புறம்பே "த்₄வம்ஸ" என்று தள்ள, அந்த ஶரீரத்தை ராக்ஷஸர் ப₄க்ஷிக்க, ஸூக்ஷ்ம ஶரீரத்தோடே நிராலம்ப₃நமாக ஆகாஶத்திலே விழ, ஆதி₃த்யன் தன் கிரணத்தாலே ஹிமங்களை க்₃ரஹித்து, அந்த ஈரத்தாலே ஆகாஶத்திலே மங்கிக்கிடக்கிற ஆத்மாவையெடுத்து மேக₄த்திலேபொகட, அந்த ஹிமம் மேக₄த்திலே வர்ஷரூபேண பரிணதமாய், வர்ஷத்₃வாரா பூ₄க₃தமாய் ஸஸ்யத₄ாரகஜலத்₃வாரா ஸஸ்யக₃தமாய் அந்நரூபேண பரிணமிக்குமளவும் கிடந்து, அந்நத்₃வாரா புருஷஶரீரக₃தமாய் ஶுக்லமாய்ப் பரிணமிக்குமளவும் கிடந்து, ஶுக்லத்₃வாரா ஸ்த்ரீஶரீரக₃தமாய் 1. "பஞ்சம்யாமாஹுதாவாப: புருஷவசஸோ ப₄வந்தி" என்று புருஷஶப்₃த₃வாச்யனுகை. ப்ரத₂மாஹுதியே தொடங்கி - அநுவர்த்தமாநங்களான ஸூக்ஷ்மங்களான அப்புக்கள் புருஷஶப்₃த₃வாச்யங்களாம் என்றபடி. ஆப: என்றது - பூ₄தாந்தரங்களுக்கும் உபலக்ஷணமாய், அத்தாலே ஸூக்ஷ்மஶரீரவிஶிஷ்டரான சேதநரை

---

नक्षत्राणि विस्फुलिङ्गास्तस्मिन्नेतस्मिन् अग्नौ देवाः श्रद्धां जुह्वति तस्या आहुतेस्सोमो राजा संभवति ॥ ४ ॥ पर्जन्यो वाव गौतमाग्निस्तस्य वायुरेव समिदभ्रं धूमो विद्युदर्चिरशनिरङ्गारा ह्रादनयो विस्फुलिङ्गास्तस्मिन्नेतस्मिन्नग्नौ देवास्सोमं राजानं जुह्वति तस्या आहुतेर्वर्षस्सम्भवति ॥ ५ ॥ पृथिवी वाव गौतमाग्निः तस्यास्संवत्सर एव समित् आकाशो धूमो रात्रिरर्चिः दिशोऽङ्गारा अवान्तरदिशो विस्फुलिङ्गास्तस्मिन्नेतस्मिन्नग्नौ देवा वर्षं जुह्वति तस्या आहुतेरन्नं सम्भवति ॥ ६ ॥

ஈ—பற்ருேடே அறுத்து. d வர்த்தமாநதே3ஹாவதி4யாக்கி, பின்பு ஒரு தே3ஹத்திற் புகாதபடிபண்ணி. e இப்படி செய்வது ஆரையென்னில்,— (அடியார்களை) தன் திருவடிகளிலே ஸர்வப4ரந்யாஸம் பண்ணியிருக்குமவர்களை. (கொண்டுபோய் இத்யாதி3) f A "மரணமானல்" என்கிறபடியே ஶரீரவிஶ்லேஷத்தளவும் பொறுத்திருந்து f2 அந்திமஸ்ம்ருதியும் ப4க்தியும் இவர்களுக்குப் பணியாக்காதே g 1. "அஹ்ஸராமி" (அஹம் ஸ்மராமி) என்கிறபடியே தானே நினைத்து, வழிதெரியாதபடி

---

அ-பரம்பரைகளிலே போகாதபடி எப்படியென்ன அருளிச்செய்கிருர் (வர்த்தமான என்று தொடங்கி) 2. "உபாயப4க்தி: ப்ராரப்3த4வ்யதிரிக்தாக4நாஶிநீ | ஸாத்4யப4க்திஸ்து ஸா ஹந்த்ரீ ப்ராரப்3த4ஸ்யாபி பூ4யஸீ | த்3ருப்தாநாமபி ஜந்தூநாம் தே3ஹாந்தரநிவாரிணீ ||" என்னக்கடவதிறே. e இதுதான் ப்ரபந்நவிஷயமென்று கீழ் அருளிச்செய்தத்தை மூலத்திலே ஏறிட்டு அருளிச்செய்கிருர் (இப்படி இத்யாதி3) f...p கொண்டுபோகிற ப்ரகாரத்தை வேதா3ந்த ப்ரக்ரியையாலே காட்டுகிருர் (மரணமானல் இத்யாதி3) யத்3வா "அப்பனை" என்று விவக்ஷித்த உபகாரபரம்பரையை அருளிச்செய்கிருர் (மரணமானல் என்று தொடங்கி) f2 (அந்திமஸ்ம்ருதியும்) என்கிறவிடத்திலே - 3. "யம் யோகி3ந: ப்ராணவியோக3காலே யத்நேந சித்தே விநிவேஶயந்தி | ஸ தம் புரஸ்தாத்3த4ரிமீக்ஷமாண: ப்ராணாந் ஜஹௌ ப்ராப்தப2லோ ஹி பீ4ஷ்ம: ||" என்கிற ஶ்லோகத்தை அருளிச்செய்வர். i (ஒரு பரமாத்ம ப்ரவேஶத்தைப் பண்ணுவித்து) 4. "தேஜ: பரஸ்யாம் தே3வதாயாம்"

---

ஜீ—லக்ஷிக்கிறது. 5. "தஸ்மிந்நேதஸ்மிந்நக்3நௌ தே3வா: ஶ்ரத்3த4ாம் ஜுஹ்வதி" இத்யாதி3 ஶ்ருதியிலே, "தே3வா:" என்ற பத3ங்கள்-ப்ராணவாசிகள். "ஶ்ரத்3த4ாம்" என்று-6. "ஶ்ரத்3த4ா வா ஆப:" என்கிற ஶ்ருதிப்ரக்ரியையாலே அப்புக்களைச் சொல்லி, இவை பூ4தாந்தரங்களுக்கும் உபலக்ஷணமாய், அத்தாலே ஸூக்ஷ்மஶரீரவிஶிஷ்டனை சேதநனை லக்ஷிக்கிறது. 5. "ஸோமோ ராஜா ஸம்ப4வதி" என்றது-அம்ருதமய தே3வஶரீரமுண்டாம் என்றபடி. d இந்த ஜந்மந்தானே உண்டாய்விட்டதே: இனி ஜந்மபரம்பரைகளிலே போகாதபடி எப்படி? என்ன (வர்த்தமாந இத்யாதி3) 2. "உபாயப4க்தி: ப்ராரப்3த4வ்யதிரிக்தாக4நாஶிநீ | ஸாத்4யப4க்திஸ்து ஸா ஹந்த்ரீ ப்ராரப்3த4ஸ்யாபி பூ4யஸீ | த்3ருப்தாநாமபி ஜந்தூநாம் தே3ஹாந்தர நிவாரிணீ||" என்னக்கடவதிறே; e இதுதான் ப்ரபந்நவிஷயம் என்று கீழ் அருளிச்செய்தத்தை மூலத்திலே ஏறிட்டு அருளிச்செய்கிருர் (இப்படி இத்யாதி3) f...p கொடுபோகிற ப்ரகாரத்தை வேதா3ந்த ப்ரக்ரியையாலே காட்டுகிருர் (மரணமானல் இத்யாதி3) i (பரமாத்மப்ரவேஶத்தைப் பண்ணுவித்து) என்றத்தை - பா4ஷ்ய ப்ரக்ரியைக்கும் அர்ச்சிராதி3க3திக்கும் சேர, நாடீ3விஶேஷநிஷ்க்ரமணத்துக்கு முன்னுகக் கண்டுகொள்வது. 4. "இந்த்3ரியைர் மநஸி ஸம்பத்3யமாநை:" இத்யாரப்4ய. 4. "தேஜ: பரஸ்யாம் தே3வதாயாம்" என்று பரமாத்ம ப்ரவேஶத்துக்கு ப்ரமாணம். நாடீ3

---

ப்ர—पुरुषो वाव गौतमाग्निः तस्य वागेव समित्प्राणो धूमो जिह्वार्चिश्चक्षुरङ्गाराः श्रोत्रं विस्फुलिङ्गास्तस्मिन्ने-तस्मिन्नग्नौ देवा अन्नं जुह्वति तस्या आहुते रेतस्सम्भवति ॥ ७ ॥ योषा वाव गौतमाग्निस्तस्या उपस्थ एव समिद्यदुपमन्त्रयते स धूमो योनिरर्चिर्यदन्तः करोति तेऽङ्गारा अभिनन्दा विस्फुलिङ्गाः तस्मिन्नेतस्मिन्नग्नौ देवा रेतो जुह्वति तस्या आहुतेर्गर्भस्सम्भवति ॥ ८ ॥"

(கொண்டுபோய்) g1. श्रीवाराहे भूमिदेवीं प्रति भगवान्—"ततस्तं म्रियमाणं तु काष्ठपाषाणसन्निभम्। अहं स्मरामि मद्भक्तं नयामि परमां गतिम्॥"

ஈ—யிருக்கிற ஶதாதி4கையான நாடியாலே h1."हार्दानुगृहीतः" (ஹார்த்த3ாநுக்3ருஹீத:) என்கிறபடியே தான் கூடக்கொண்டு புறப்பட்டு, அந்த ஶரீரவிஶ்லேஷஸமயத்தில் இவன்பட்ட க்லேஶமெல்லாம் தீரும்படியாக அவ்வளவிலே i ஒரு பரமாத்ம ப்ரவேஶத்தைப் பண்ணுவித்து, j சிறு ப்ரஜைகள் நொந்தால் தாயானவள் ஶிஶிரோபசாரம் பண்ணுமாபோலே அவ்வளவிலே மேல்வழி போகைக்கு த4ரிப்புண்டாம்படிபண்ணி, k A"உயிர்கொண்டுடலொழிய ஓடும்போதோடி அயர்வென்ற தீர்ப்பான்"என்கிறபடியே சென்று முகங்கொடுத்து, கர்மஸம்ப3ந்த4மறச் செய்தேயும் வித்3யாமாஹாத்ம்யத்தாலே விரஜையளவும் ஸூக்ஷ்மஶரீரம் நிற்கும்படிபண்ணி, அர்ச்சிராதி3க3ணங்களோடொக்க ஆளிட்டிராதே, 2. "नयामि" (நயாமி) என்கிறபடியே தானேவந்து, l B"மாதவன் தன்துணையா நடந்தாள்" என்கிற C"கள்வன்கொல்"லில் பிராட்டியைப்

அ—என்று பூ4தஸூக்ஷ்மவிஶிஷ்டனை ஜீவனுக்குப் பரமாத்மப்ரவேஶம் சொல்லிற்றிறே. "வேத3ாத்தேஷு பரமாத்ம ப்ரவேஶாநந்தரம் நாடீ3விஶேஷநிஷ்க்ரமணாபி4த4ாநாத், அத்ர ச தத்3விபரீதத்வேநாபி4த4ாநாத், நாடீ3நிஷ்க்ரமணாத் பூர்வத்ரோத்தரத்ர ச பரமாத்மப்ரவேஶோஸ்தி" இதி ச, "வேத3ாந்தவிரோதே4நாத்ராபி வாக்யம் வ்யத்யயேந யோஜநீயம்" இதி ச வத3ந்தி. (ஒரு பரமாத்ம ப்ரவேஶத்தைப் பண்ணுவித்து) D"வாஸுதே3வ தருச்ச2ாயையைக் கிட்டி விஶ்ரமித்து"இத்யர்ச்சிராதி3தி3வ்யப்ரப3ந்தே4ாக்தப்ரகாரேண ஹார்த்த3புருஷே ஸ்வஸ்மிந் நிதா4ய இத்யர்த்த2:—இதி ச வத3ந்தி, 3. "தேஜ: பரஸ்யாம்" என்றதிலே, தேஜஸ் - என்றது சேதனனை. இது சேதனனைச்சொல்லுகிறது என்னுமத்தை 4. "மநஸி கரணக்3ராமம் ப்ராணே மந: புருஷே ச தம் ஜ2டிதி க4டயந் பூ4தேஷ்வேநம் பரே ச தமாத்மநி | ஸ்வவித3வித3ஷோரித்த2ம் ஸாதா4ரணீ ஸரணிர்முகே2 நயதி பரதோ நாடீ3பே4தை3ர் யதே2ாசிதமீஶ்வர: ||" என்று ஸ்பு2டமாக அருளிச்செய்தாரிறே பிள்ளை. 3. "பரஸ்யாம் தே3வதாயாம்" என்றது, பரமாத்மநி ஸம்பத்3யதே என்றபடி. பா4ஷ்யத்திலே தேஜஸ் என்றது - பூ4தாந்தர ஸம்ஸ்ருஷ்ட தேஜ: பரம் என்று நிர்வாஹம், 3. "இந்த்ரியைர் மநஸி ஸம்பத்3யமாநை:" என்று தொடங்கி, 3. "தேஜ: பரஸ்யாம் தே3வதாயாம்" என்று பரமாத்ம ப்ரவேஶத்துக்கு ப்ரமாணம். நாடீ3 நிஷ்க்ரமணத்துக்கு ப்ரமாணம் 5. "ஶதம் சைகா ச ஹ்ருத3யஸ்ய நாட்3ய: தாஸாம் மூர்த்த4ாநமபி4நிஸ்ஸ்ருதைகா | தயோர்த்4வமாயந் அம்ருதத்வமேதி விஷ்வங்ஙந்யா உத்க்ரமணே ப4வந்தி||" 6. "தேந ப்ரத்3யோதேநைஷ ஆத்மா நிஷ்க்ராமதி சக்ஷுஷோ வா மூர்த்4நோ வா அந்யேப்4யோ வா ஶரீரதே3ஶேப்4ய:" என்று; அந்யா:- நாட்3ய:, விஷ்வக்-எங்கும். மூர்த்த4ந்ய நாடீ3நிஷ்க்ரமணம் ப்3ரஹ்மவித்துக்கு; மற்றையவர்களுக்கு அந்யதே3ஶங்களிலே நிஷ்க்ரமணம். "கர்மஸம்ப3ந்த4மறச் செய்தேயும் ஸூக்ஷ்மஶரீரம் நிற்கைக்கடி வழியிலுள்ளார் ஸத்காரார்த்த2மாக" என்று அருளிச்செய்வர். j பரமாத்ம ப்ரவேஶத்துக்கு ப்ரயோஜநம் அருளிச்செய்கிறார் (சிறுப்ரஜைகள் இத்யாதி3) "ஸூக்ஷ்மஶரீரத்தோடே போகிறவனுக்கு ஆதி3த்யமண்ட3லத்தை பே4தி3த்துப்

ஜீ—நிஷ்க்ரமணத்துக்கு ப்ரமாணம் – 5. "ஶதஞ்சைகா ச ஹ்ருத3யஸ்ய நாட்3ய:" இத்யாதி3, 6. "த ஆஸு நாடீ3ஷு ஸ்ருப்தா:" இத்யாதி3. j பரமாத்ம ப்ரவேஶஸ்ய ப்ரயோஜநமாஹ (சிறு ப்ரஜைகள் இத்யாதி3) k அத்த3ஶையில்அவன் இப்படி செய்யும் என்கைக்கு ப்ரமாணம்(உயிர்கொண்டு இத்யாதி3) பூர்வமேவ வ்யாக்2யாதம். l (மாதவன் தன் துணை இத்யாதி3) ஶ்ரிய:பதியே துணை

ப்ர– h1. उत्तरमीमांसायाम् चतुर्थाध्यायस्य द्वितीयपादे (सू. १६) नाडीविशेषचिन्तनाप्रकरणे "तदोकोग्रज्वलनं तत्प्रकाशितद्वारो विद्यासामर्थ्यात्तच्छेषगत्यनुस्मृतियोगाच्च हार्दानुगृहीतश्शताधिकया"।

A நான்-திருவ் 88. B பெரியதிரு 3-7-4. C ஷ் 3-7. D அர்ச்சிராதி3-1.

ஈ—போலே தன் சிறகின்கீழே கொண்டு, வழியிலுள்ளார் ஶிரஸாவஹிக்கும்படி இவ்வருகுள்ளவற்றைக் கழித்துப் பரமபத$_3$த்திலே கொண்டு புக்கு, m1. "स्वेन रूपेणाभिनिष्पद्यते" (ஸ்வேந ரூபேணுபி$_4$நிஷ்பத்$_3$யதே) என்கிறபடியே ஸ்வஸ்வரூபப்ராப்தியைப் பண்ணிக்கொடுத்து, பின்னையும் விடாதே n பாதே$_3$ாபத$_4$ாநமாகத் தன் திருவடிகளின் கீழேயிட்டுக்கொண்டு, o இதுதான் இவனுக்கு உபகரித்தானுயிருக்கையன்றிக்கே p தன் பேருக நினைத்திருக்கும் மஹோபகாரகனை. q 2. "सायुज्यं प्रतिपन्ना ये" (ஸாயுஜ்யம் ப்ரதிபந்நா யே) இத்யாதி$_3$. q$_2$ (தன்மை பெறுத்தி) ஸ்வஸ்வருபாவிர்ப$_4$ாவத்தைப்

அ—புறப்படுகை சொல்லுகையாலும், சந்த்$_3$ரனேடே ஸம்ப$_4$ாஷணமுண்டாக ப$_4$ாஷ்யத்திலே சொல்லுகையாலும் A "ஸ்தூ$_2$லஶரீரத்துக்கு உள்ள பாடவத்தை ஸூக்ஷ்மஶரீரத்துக்கு உண்டாக்கிக் கொடுக்குமவன்" என்று பரமபத$_3$ ஸோபாநத்திலே பிள்ளை அருளிச்செய்ததாக ப்ரஸாதி$_3$ப்பர். k அத்த$_3$லையில் இவன் இப்படி செய்யும் என்கைக்கு ப்ரமாணம் (உயிர்கொண்டு இத்யாதி$_3$) நாலாந்திருவந்தாதி. l (மாதவன் இத்யாதி$_3$) பெரியதிருமொழி. m "தன்மைபெறுத்தி" என்றதுக்குத் தாத்பர்யம் (ஸ்வேந ரூபேண இத்யாதி$_3$) n உபத$_4$ாநம்-அணை. o 'தாளிணைக் கீழ்வைக்கும்' இத்யநபி$_4$த$_4$ாய, "தாளிணைக் கீழ்க்கொள்ளும்" இத்யபி$_4$த$_4$ாந ஸூசிதமாக (இதுதான் இவனுக்கு இத்யாதி$_3$நா) p "கொள்ளும்" என்று ஈஶ்வரநிஷ்ட$_2$மாகச் சொன்னதுக்குத் தாத்பர்யம் (தன்பேருகவென்று) என்றுமாம். q3. "ப்$_3$ரஹ்ம வேத$_3$ ப்$_3$ரஹ்மைவ ப$_4$வதி" என்று ஐக்யமே மோக்ஷமென்றுநிற்க "தாளிணைக் கீழ்க்கொள்ளும்" என்கிறதென்? என்ன (ஸாயுஜ்யம் இத்யாதி$_3$) 2. "ஸாயுஜ்யம் ப்ரதிபந்நா யே தீவ்ரப$_4$க்தாஸ்தபஸ்விந: | கிங்கரா மம தே நித்யம் ப$_4$வந்தி நிருபத்$_3$ரவா:" யத்$_3$வா, 4. "நிரஞ்ஜந: பரமம் ஸாம்யமுபைதி" இதி ஸாம்யாபத்திரேவ ஹி மோக்ஷத்வேநாபி$_4$தீ$_4$யதே, கத$_2$ம் பாதே$_3$ாபத$_4$ாநத்வேந கரோதி இத்யுச்யதே? இத்யத்ராஹ (ஸாயுஜ்யம் இதி) 2. "மம கிங்கரா ப$_4$வந்தி" இத்யத்ர ஹ்ருத$_3$யம். p "கொள்ளும்" இதி பத$_3$ஸ்வாரஸ்யாத்-ப$_4$க$_3$வாந் ஸ்வலாப$_4$த்வேந ஸ்மரதி இத்யுக்தம்; r,s "அப்பனை" இதி சேதந்

ஜீ—யாக நடந்தாள் என்றபடி; திருமொழி-மூன்றும்பத்து, கள்வன் கொல்லிலே நாலாம் பாட்டு→ (ஏதவன் இத்யாதி$_3$). m 'தன்மைபெறுத்தி' என்றதுக்கு ப$_4$ாவம் (ஸ்வேந ரூபேண இத்யாதி$_3$) n உபத$_4$ாநம் - அணை. o வைக்குமென்னுதே, 'கொள்ளும்' என்றதுக்கு ப$_4$ாவம் (இதுதான் இத்யாதி$_3$) q3. "ப்$_3$ரஹ்ம வேத$_3$ ப்$_3$ரஹ்மைவ ப$_4$வதி" என்று - ஐக்யம் மோக்ஷமென்றுநிற்க, தாளிணைக் கீழ்க்கொள்ளுகையாவது ஏது? என்ன (ஸாயுஜ்யம் இத்யாதி$_3$) 2. "கிங்கரா மம தே நித்யம் ப$_4$வந்தி" இத்யத்ர ஹ்ருத$_3$யம். p,s அவன் தன்பேருக நினைத்திருக்குமாகில், அது இவனுக்கு

ப்ர—अस्य भाष्यम्—"(शताधिकयेति) विद्वान् शताधिकया मूर्धन्ययैव नाड्योत्क्रामति न चास्याः विदुषो दुर्विवेचत्वं; विद्वान्हि परमपुरुषाराधनभूतात्यर्थप्रियविद्यासामर्थ्याद्विद्याशेषभूततया आत्मनोऽत्यर्थप्रियगत्यनुस्मरणयोगाच्च प्रसन्नेन हार्देन परमपुरुषेणानुगृहीतो भवति; ततश्च (तदोकः) तस्य जीवस्य स्थानं - हृदयं अग्रज्वलनं भवति - अग्रे ज्वलनं - प्रकाशनं यस्य, तदिदमग्रज्वलनम्; परमपुरुषप्रसादात्प्रकाशितद्वारो विद्वान् तां नाडीं विजानातीति तया विदुषो गतिरुपपद्यते ।।"

m 1. छान्दोग्ये (८-३)—"एवमेवैष संप्रसादोऽस्माच्छरीरात्समुत्थाय परं ज्योतिरुपसंपद्य स्वेन रूपेणाभिनिष्पद्यते"

q 2. "सायुज्यं प्रतिपन्ना ये तीव्रभक्तास्तपस्विनः। किंकरा मम ते नित्यं भवन्ति निरुपद्रवाः।।"

A பரமபத$_3$ஸோபாநம்.

**ஈ—பிறப்பித்து.** r (அப்பனை) s **இதுதன்னை இவன் சேதநனுகையாலே உபகாரமாக நினைத்திருக்கும்;** t **பாரதந்த்ர்யத்தாலே அவன் தனக்காகச் செய்தானுயிருக்கும்.** $t_2$ (தொன்மை பிதற்றவல்லாரை) u **ஸ்வாப4ாவிகமான ஔத3ார்ய கு3ணத்திலே ஈடுபட்டு அக்ரமமாகப் புகழுமவர்களை.** v 1. **"तानहं द्विषतः" (தாநஹம் த்3விஷத:) என்று தள்ளுமது இவன்செய்த குற்றங்களைக் கண்டாகையாலே ஔபாதி4கமிறே; ஸ்வாப4ாவிகமான நிலையாவது - இப்படி ரக்ஷிக்கை.** (பிதற்றுமவர் கண்டீர்) w **'அந்த:புரவ்ருத்தாந்தம் இவர்களுக்கு நிலமாவதே!' என்று அவர்கள் விஷயத்திலே ஈடுபட்டு ஏத்துமவர்கள் கிடீர்;** $w_2$ (நன்மை பெறுத்து) **ப4ாக3வதஶேஷத்வபர்யந்தமான ப4க3வச்சே2ஷத்வ ஸம்பத்தையுண்டாக்கி.** (எம்மை x நாளுய்யக்கொள்கின்ற $x_2$ நம்பரே) **நமக்கு அவன் திருவடிகளில் கைங்கர்யத்தை யாவதா3த்மப4ாவி நடத்தக்கடவ விஶ்வஸநீயர்; y முதலிகள் என்றுமாம். 7.**

---

அ-ஸ்யோபகாரகத்வேந கத2முச்யத இத்யத்ராஹ (இதுதன்னை இத்யாதி3) t (பாரதந்த்ர்யத்தாலே) என்றது - சேதனன் தன்க்குப் பரதந்த்ரனுகையாலே இவனுக்குச் செய்தத்தை ஈஶ்வரன் தனக்குச் செய்தானுக நினைத்திருக்கும் என்றபடி. u,v1. "தாநஹம் த்3விஷத:" என்றுநிற்க, ஔத3ார்யம் ஸ்வாப4ாவிகம் என்கிறதென்? என்ன (தாநஹம் இத்யாதி3) w இவனுக்கு வரிசையாக அர்ச்சிராதி3 மார்க்க3த்தாலே கொண்டுபோகை முதலான இப்பேர்ப்பட்டவை பரமரஹஸ்ய வ்ருத்தாந்தமாகையாலே (அந்த:புர வ்ருத்தாந்தமென்கிறது) $x_2$ நம்பர்-விஶ்வஸநீயர் என்னுதல், பூர்ணரென்னுதல். y (முதலிகள் இதி) பரிபூர்ணு:. கு3ரவ: இதி ச வத3ந்தி. 7.

---

ஜீ—உபகாரமானபடியென்? என்ன (இதுதன்னை இத்யாதி3) ஶரீரதயா பாரதந்த்ர்யத்தாலே என்றபடி. u,v1. "தாநஹம் த்3விஷத:" என்றுநிற்க, ஔத3ார்யம் ஸ்வாப4ாவிகம் என்கிறதென்? என்ன (தாநஹம் இத்யாதி3) w (அந்த:புர வ்ருத்தாந்தம்) என்றது - இப்படி இவனுக்கு வரிசையாக அர்ச்சிராதி3மார்க்க3த்தாலே கொண்டுபோகை முதலானவை பரமரஹஸ்யம் என்றபடி. $x_2$ நம்பர்-விஶ்வஸநீயர்; பூர்ணரென்னுதல். $q_2$ தன்மைபெறுத்தி-ஸ்வரூபாவிர்ப4ாவத்தைப் பிறப்பித்து. $t_2$ தொன்மை-ஸ்வாப4ாவிகோபகாரகதை. $w_2$ நன்மைபெறுத்து-நன்மையைப் பெறும்படி பண்ணி. x நாளுய்யக்கொள்கின்ற - நம்பர் - நாள்தோறும் யாவதா3த்மப4ாவி உஜ்ஜீவிப்பித்துக் கொள்ளுகிற விஶ்வஸநீயர். $x_2$ நம்பர்-நம்பப்படுமவர்கள் இத்யர்த்த2:. 495c பஞ்சாக்3நிவித்3யாயாம் சா2ந்தோ3க்3யே, 2. "தஸ்மிந்நேதஸ்மிந்நக்3நௌ தே3வா: ஶ்ரத்3த4ாம் ஜுஹ்வதி" இத்யாரப்4ய, 2. "தஸயா ஆஹுதேர் க3ர்ப்ப4: ஸம்ப4வதி" இத்யந்தம் கண்டுகொள்வது. 497g வாராஹே பூ4மிம் ப்ரதி ப4க3வாந், 3. "ததஸ்தம் ம்ரியமாணம் து காஷ்ட2பாஷாண ஸந்நிப4ம்| அஹம் ஸ்மராமி மத்3ப4க்தம் நயாமி பரமாம் க3திம் ||" 498h ப4ாஷ்யே சதுர்த்த2ாத்4யாயே த்3விதீய பாதே3—4. "ததோ3கோऽக்3ரஜ்வலநம் தத்ப்ரகாஶிதத்3வாரோ வித்3யாஸாமர்த்2யாத் தச்சே2ஷ க3த்யநுஸ்ம்ருதியோகா3ச்ச ஹார்த்3தா3நுக்3ருஹீதஶ் ஶதாதி4கயா" 499m சா2ந்தோ3க்3யே, 5."பரம் ஜ்யோதிருபஸம்பத்3ய ஸ்வேந ருபேணாபி4நிஷ்பத்3யதே" 499q6."ஸாயுஜ்யம் ப்ரதிபந்நா யே தீவ்ரப4க்தாஸ் தபஸ்விந:| கிங்கரா மம தே நித்யம் ப4வந்தி நிருபத்3ரவா:||" v கீ3தாஸு ஷோட3ஶே, 1. "தாநஹம் த்3விஷத: க்ருராந் ஸம்ஸாரேஷு நராத4மாந்| க்ஷிபாம்யஜஸ்ரமஶுப4ாநாஸுரீஷ்வேவ யோநிஷு ||". 7.

---

ப்ர— (தொன்மை இத்யாதி3,)v1. भगवद्गीतासु षोडशे — "तानहं द्विषतः क्रूरान् संसारेषु नराधमान्। क्षिपाम्यजस्रमशुभान् आसुरीष्वेव योनिषु॥ १९॥"

8. நம்பனை ஞாலம் படைத்தவ னைத்திரு மார்பனை
உம்ப ருலகினில் யார்க்கும் உணர்வரி யான்தன்னைக்
கும்பி நரகர்க ளேத்துவ ரேலும் அவர்கண்டீர்
எம்பல் பிறப்பிடை தோறுஎந் தொழுகுலம் தாங்களே.

---

ஆ— 8. வ்யா:— (நம்பனை) ஸர்வஸ்வாமியாய், ஜக3த்ஸ்ரஷ்டாவாய், ஶ்ரிய:பதியாய். ப்3ரஹ்மாதி3களுக்கு வாங்மநஸாபரிச்சே2த்3யமஹிமனுயிருந்தவனை அநந்யப்ரயோஜநராய்க் கொண்டு ஏத்துவார் கும்பீ4நரகயாதநாநுப4வாநுகு3ணபாபங்களைப் பண்ணினுரேயாகிலும் அவர் கண்டீர் எம் பல் பிறப்பிடைதோறு எம்தொழுகுலம் தாங்கள் என்கிறுர் 8

---

ஒ— அவ:— **எட்டாம் பாட்டில் — அவனுடைய ஸர்வஸம்பத்துக்கும் நித3ாநமான** ஶ்ரிய:**பதித்வத்தை அநுஸந்தி4த்திருக்குமவர்கள் எனக்குப் பிறந்த பிறவிகளெல்லாம் ஸஸந்தாநமாக வந்த்3யர் என்கிறுர்.**

**வ்யா:—** (நம்பனை என்று தொடங்கி) **ஏதேனும் த3ஶையிலும் ஆத்மாவுக்குத் தஞ்சமாக நம்பப்படுமவனுமாய், ஜக3த்தையெல்லாம் உண்டாக்குவதும்செய்து, இந்நீர்மைக்கு அடியான** ஶ்ரிய:**பதியுமாய், மேலான லோகங்களில் எத்தனையேனும் அளவுடைய ப்3ரஹ்மாதி3களுக்கும் உணரமுடியாதிருக்கிறவனை.** (ஞாலம் படைத்தவனை) **என்றது — கரணகளேப3ரங்களைக் கொடுத்து ஸ்ருஷ்டிக்கையாலே தஞ்சமென்னுமிடத்துக்கு உத3ாஹரணம்.** (கும்பிநரகர்கள் என்று தொடங்கி) **கும்பீ4 பாகமான நரகத்தை அநுப4வியாநின்றே ஏத்தினுரேயாகிலும் அவர்கள் கிடீர். 'கும்பிநரகர்கள்' என்றது. ஏதேனும் து3ர்க்க3தரேயாகிலும் அவ்விருப்பிலே நமக்கு ப்ராப்யரென்று கருத்து. 8.**

---

ப— 8. அவ:— அநந்தரம், ப்ராப்யபூ4தனை ஶ்ரிய:பதியை ஸ்துதிக்குமவர்கள் எங்களுக்குக் கைங்கர்ய ப்ரதிஸம்ப3ந்தி4தயா ப்ராப்யர் என்கிறுர்.

**நம்பனை**—(நிருபாதி4கமாகத்) தஞ்சமானவனுய், **ஞாலம் படைத்தவனை**—(தன்னை ஆஶ்ரயித்து அநுப4விக்கைக்கு உறுப்பாக) ஜக3த்ஸ்ருஷ்டியைப் பண்ணுமவனுய், **திருமார்பனை**—(ஸ்ருஷ்டித3ஶையோடு ஆஶ்ரயணத3ஶையோடு ப்ராப்யத3ஶையோடு வாசியற அநுவ்ருத்தமான) ஶ்ரிய:பதித்வத்தையுடையனுய், **உம்பருலகினில்** — (ஸ்வஸ்ருஷ்டமான) உபரிதநலோகங்களில், **யார்க்கும்** — எத்தனையேனும் அதிஶயிதஜ்ஞாநர்க்கும், **உணர்வு அரியான் தன்னை** — அறியவரிய பெருமையையுடையவனை, **கும்பிநரகர்களும்** — கும்பீ4பாகநரகவாஸிகளான பாபப்ரசுரர்களும், **ஏத்துவரேல்**—ஏத்தினுர்களாகில், **அவர் தாங்கள் கண்டீர்**—அவர்கள் தாங்கள் கிடீர், **எம் பல் பிறப்பிடைதோறு**—எங்கள் பலவகைப்பட்ட ஜந்மாவகாஶந்தோறும், **எம் தொழு குலம்**—எங்கள் ஶேஷவ்ருத்திக்கு ப்ரதிஸம்ப3ந்தி4யான குலம்.

இப்பாட்டு-ப்ராப்யபரம். இதினுடைய விவரணம்-A"நெடுமாற்கடிமை". 8.

---

A 8-10.

இ— அவ:— எட்டாம் பாட்டில் — அவனுடைய ஶ்ரிய:பதித்வத்திலே வித்$_3$த$_4$ரா யிருக்குமவர்கள் எனக்கு நாத$_2$ர் என்கிறார்.

வ்யா:— **(நம்பனை)** நம்பப்படுமவனை; ஏதேனும் த$_3$ஶையிலும் ஆத்மாவுக்குத் தஞ்சமாமவனை ; கீழ்ச்சொன்னவர்களும் நம்பராகைக்கு அடியானவனை. இவனை யொழிந்த ப$_3$ந்து$_4$க்கள் விஶ்வஸநீயரல்லர் என்கை. **1. "स पित्रा च" (ஸ பித்ரா ச).** எங்கே கண்டோம்? என்னில்,—**(ஞாலம் படைத்தவனை)** தனக்குத் தானுமின்றிக்கே பிறருமின்றிக்கே அசித்கல்பனுன த$_3$ஶையிலே புருஷார்த்தோ$_2$பயோகி$_3$யான ஶரீரத்தையுண்டாக்கினவனை. **(திருமார்பனை)** இப்படி உபகரித்தது பிராட்டிக்கு ப்ரியமாக என்கை. **2. "यस्या वीक्ष्य मुखम्" (யஸ்யா வீக்ஷ்ய முக$_2$ம்). (உம்பர் இத்யாதி$_3$)** உபரிதநலோகங்களில் எத்தனையேனும் அதிஶயிதஜ்ஞாநரான ப்$_3$ரஹ்மாதி$_3$களுக்கும் உணரமுடியாதிருக்கிறவனை. **(கும்பி இத்யாதி$_3$)** மஹாபாபப$_2$லமான கும்பீ$_4$பாகநரகத்திலே கிடந்தும் அங்கே திருநாமத்தைச் சொல்லுவர்களாகில், **(அவர்கண்டீர்)** ஏதேனும் து$_3$ர்க்க$_3$தரேயாகிலும் அவ்விருப்பிலே நமக்கு ப்ராப்யர் என்கை. பலவகைப்பட்ட ஜந்மங்களில் அவகாஶந்தோறும் திருநாமத்தைச் சொன்னவர்களேயன்று உத்$_3$தே$_3$ஶ்யர், அவர்கள் குலமாக எங்கள் குலத்துக்கு ஆசார்யஸந்தாநம். 8.

---

**ஈ— அவ:— எட்டாம் பாட்டு. a அவனுடைய ஶ்ரிய:பதித்வத்திலே தோற்றிருக்கு மவர்கள் எனக்கு நாத$_2$ர் என்கிறார்.**

வ்யா:— b (நம்பனை) **நம்பப்படுமவனை. c ஏதேனும் து$_3$ர்த$_3$ஶையிலும் ஆத்மாவுக்குத் தஞ்சமானவனை. d கீழ்ச்சொன்னவர்களும் நம்பராகைக்கு அடியானவனை.**

---

அ— எட்டாம் பாட்டு. (நம்பனை இத்யாதி$_3$) a "திருமார்வனை ஏத்துவரேலும் அவர்-எம்தொழுகுலம் தாங்கள்" என்றத்தைக் கடாக்ஷித்து அவதாரிகை (அவனுடைய இத்யாதி$_3$) b நம்பன்-ரக்ஷகத்வேந விஶ்வஸநீயன். c காத$_3$ாசித்கமாகத் தஞ்சமாகை அல்லாதாருக்குமுண்டாகையாலே அத்தை வ்யாவர்த்திக்கிறது (ஏதேனும் து$_3$ர்த$_3$ஶையிலும் என்று விஶேஷிக்கிறது) (ஏதேனும் து$_3$ர்த$_3$ஶையிலும்) என்றது - காகாஸுரனுக்குப்போலே ஈஶ்வரன்தானே பகையான த$_3$ஶையிலும்; அன்றிக்கே, தனக்குத்தான் பகையான த$_3$ஶையிலும் என்றபடி. d கீழே ஸ்ரீவைஷ்ணவர்களை நம்பர் என்றீர், ஈஶ்வரனை நம்பன் என்றீர்; இது சேரும்படி எங்ஙனேயென்ன (கீழ்ச்சொன்னவர்களும் என்று தொடங்கி) e இவனை "நம்பன்" என்றத்தால் ப$_2$லிதம் (இவனையொழிந்த இத்யாதி$_3$) f,g உக்தார்த்த$_2$த்துக்கு ப்ரமாணங்கள் (ஸ பித்ரா ச இத்யாதி$_3$, பெற்றார் இத்யாதி$_3$) f ஏதேனும்

---

ஜீ— எட்டாம் பாட்டு. (நம்பனை இத்யாதி$_3$) a 'திருமார்பனை, ஏத்துவரேலும் அவர்கண்டீர், எந்தொழுகுலம் தாங்களே' என்ற பத$_3$ங்களைக் கடாக்ஷித்து அவதாரிகை (அவனுடைய இத்யாதி$_3$) b நம்பன்-ரக்ஷகத்வேந விஶ்வஸநீயன். c காத$_3$ாசித்கமாகத் தஞ்சமாகை அல்லாதார்க்கும் உண்டாகையாலே அத்தை வ்யாவர்த்திக்கிறார் (ஏதேனும் இத்யாதி$_3$) ஏதேனும் து$_3$ர்த$_3$ஶையிலும் - காகாஸுரனுக்குப்போலே தான் பகையான த$_3$ஶையிலும். d கீழே ததீ$_3$யரை - 'நம்பர்' என்றீரே என்ன (கீழ்ச்சொன்னவர்களும் இத்யாதி$_3$) e இவனை 'நம்பன்' என்றத்தால் ப$_2$லிதம் (இவனையொழிந்த இத்யாதி$_3$) f,g உக்தார்த்த$_2$த்துக்கு ப்ரமாணங்கள் (ஸ பித்ரா ச இத்யாதி$_3$)

ஈ—e இவனையொழிந்த ப3ந்து4க்கள் விஶ்வஸநீயரல்லர் என்கை; f 1. "स पित्रा च" (ஸ பித்ரா ச); gA"பெற்றார் பெற்றொழிந்தார்" இத்யாதி3. h மஹாவ்யாதி4யாளனான வன், 'எனக்கு இன்னபோதிலே இன்ன வ்யாதி4 வந்து நலியும்; அப்போது நான் என்னையறியேன்; பிரானே! அப்போது என்னை ரக்ஷிக்கவேணும்' என்று ஸ்வஸ்த2த3ஶையிலே அறிவித்துவைத்தால் அவர்கள் உணர்ந்திருந்து நோக்குமாபோலே, தான் தனக்கு உதவாத த3ஶையிலும் ஈஶ்வரன் ரக்ஷிக்கும்படி. i1. "स पित्रा च" (ஸ பித்ரா ச) இத்யாதி3-j ஈஶ்வரன் தனக்கும் j2 ஆகாதவன்றும் தஞ்சமாவான் j3 தானேயாயிற்று. பெருமாள்பக்கல் பண்ணின அபகாரத்தைக் கண்டு தமப்பன் கைவிட்டான். j4 சகாரத்தாலே - தாயும் கைவிட்டாளென்கிறது; k அவள் பற்று முன்னாகப் பற்றும் இவன் விடும்போது அவளும் விட்டாளாகவேணுமிறே. l வாத்ஸல்யம் உறைத்த இடத்திலேயிறே முந்துற விழுவது; ஆகையாலே, அவள் காலிலே முந்துற விழுந்தான்; m அவள் மையெழுதி மஞ்சள் பூசிப் புறப்பட்டு

அ—து3ர்த3ஶையிலும் இவன் தஞ்சமாயிருக்குமோ? என்ன (ஸ பித்ரா ச இத்யாதி3) என்றுமாம். h எடுத்த பாசுரத்துக்கு அர்த்த2ம் (மஹாவ்யாதி4 இத்யாதி3) யத்3வா, "ஏதேனும் து3ர்த3ஶையிலும் ஆத்மாவுக்குத் தஞ்சமானவனை" என்றத்தை ஸநித3ர்ஶநமாக உபபாதி3க்கிறார் (மஹாவ்யாதி4 இத்யாதி3) i ஸிம்ஹாவலோகநந்யாயேந கீழ் ப்ரஸ்துதமான ஶ்லோகத்துக்கு வ்யாக்2யாநம் பண்ணுகிறார்(ஸ பித்ரா ச இத்யாதி3 என்று) i,j ஶ்லோகதாத்பர்யம்(ஈஶ்வரன் தனக்கும் இத்யாதி3) (ஈஶ்வரன்தனக்குமாகாதவன்றும்) என்றது - ஈஶ்வரன்தனக்கும் ப்ரதிகூலித்தவன்றும் என்றபடி. அன்றிக்கே ஈஶ்வரன், இச்சேதனன் தனக்குத்தான் தஞ்சமாகாதவன்றும் தஞ்சமாவான் தானே என்றுமாம். j3 தானே-ஈஶ்வரனே. i,j4 சகாரம் அநுக்தஸமுச்சயபரம். k தாயார் முற்பட விட்டாளாகச் சொல்லுகிறதென்? என்ன (அவள்பற்று இத்யாதி3) அன்றிக்கே, அநுக்தரான அல்லாதாரிருக்க, மாதாவை ஸமுச்சயிக்கிறதென்? என்ன (அவள்பற்று இத்யாதி3) என்னுதல். l அவன்தான் முற்பட மாதாவைப் பற்றுகிறதென்? என்ன (வாத்ஸல்யம் இத்யாதி3) m "பரி" என்கிற உபஸர்க்க3ார்த்த2ம் (அவள் மையெழுதி இத்யாதி3) தான் ரக்ஷிக்கமாட்டாமை

ஜ்ரீ—f ஸுந்த3ரகாண்டே3 மாருதிம் ப்ரதி ஸீதா—1."ஸ பித்ரா ச பரித்யக்தஸ் ஸுரைஶ்ச ஸமஹர்ஷிபி4:| த்ரீந் லோகாந் ஸம்பரிக்ரம்ய தமேவ ஶரணம் க3த:||";g(பெற்றார் இத்யாதி3) திருமொழி-எட்டாம்பத்து, ஒன்பதாம் திருமொழி-ஏழாம் பாட்டு. A'பெற்றார் பெற்றொழிந்தார்'-ஶரீரமாத்ரத்தை உத்பாதி3த்த பித்ராதி3கள் பெற்று அவ்வளவிலே விட்டுப்போனார்கள்; பின்னும்-அவர்கள்விட்ட பின்பும்; நின்று - அவர்கள் வழியாலேநின்று; அடியேனுக்கு - தன் கைபார்த்திருக்கவேண்டும்படியான எனக்கு; உற்றானாய் வளர்த்து-ஸர்வவித4ப3ந்து4வும் தானேயாய்நின்று என்னை வளர்த்து; என் உயிராகிநின்றானை - எனக்கு த4ாரகனுமானவனை. h எடுத்த பாசுரத்துக்கு ப4ாவம் (மஹாவ்யாதி4 இத்யாதி3) i,j கீழெடுத்த ஶ்லோகத்துக்கு அர்த்த2ம் (ஈஶ்வரன் தனக்கும் இத்யாதி3) j2 ஆகாத அன்றும் - ஈஶ்வரன்தனக்கும் ப்ரதிகூலனான அன்றும். யத்3வா. ஈஶ்வரன் இச்சேதநனுக்குத் தஞ்சமாகாதவன்றும் என்னுதல். j3 தானே - ஈஶ்வரனே. இது ஶ்லோகத்துக்கெல்லாம் தாத்பர்யம். i,j4 சகாரம்-அநுக்தஸமுச்சயபரம். k தாயார் முற்படவிட்டாளாகச் சொல்லுகிறதென்? என்ன (அவள்பற்று இத்யாதி3) l அவன்தான் முந்துற மாதாவைப் பற்றுவானென்? என்ன

ப்ர— f 1. सुन्दरकाण्डे (३८) मारुतिं प्रति वायसवृत्तान्तकथने सीता—"स पित्रा च परित्यक्तः सुरैश्च समहर्षिभिः। त्रीन् लोकान् संपरिक्रम्य तमेव शरणं गतः॥ ३३॥"

A பெரியதிருமொழி 8-9-7.

ஈ—நின்ருள்; இவனும் n குடநீர்வழித்து நின்ருன். 1. "परित्यक्तः" (பரித்யக்த:) o இவன் வ்ருத்தஹாநி கண்டு 'பண்டே விட்டிலோமோ?' என்ருர்கள். p 1."सुरैश्च" (ஸுரைஶ்ச) q மாதாபிதாக்கள் கைவிட்டாலும் ஸஜாதீயர் விடாதே கைக்கொள்ளுவர்களாயிற்று- 'இவர்கள் முடிய விடுகிருர்களோ?' என்னுமத்தாலே 'அவர்களுக்கு ப்ரியம்' என்று நினைத்து. 1. "समहर्षिभिः" (ஸமஹர்ஷிபி₄:) அவர்கள் விட்டாலும் விடாத r ஆந்ருஶம்ஸ்யப்ரத₄ாநரான ருஷிகளும் விட்டார்கள். s ஆந்ருஶம்ஸ்யத்துக்கு விஷய வ்யவஸ்தை₂ உண்டிறே. பெற்றவர்கள் கைவிட்டால் நாட்டார்க்குப் பணியன்றிறே tகாக்கை நோக்குகை; ஆகையாலே, u 1. "त्रीन् लोकान् संपरिक्रम्य" (த்ரீந் லோகாந் ஸம்பரிக்ரம்ய) v லோகங்களில் திறந்துகிடந்த வாசலெல்லாம் ஒருகால் நுழைந்தாற் போலே ஒன்பதின்கால் நுழைந்தாயிற்று — w 'ஒருகாலல்லா ஒருகாலாகிலும் க்ருபை பிறக்கக் கூடுமோ?' என்று; இவன் புகப்புகத் தள்ளிக் கதவையடைத் தார்கள். 1."तमेव शरणं गतः" (தமேவ ஶரணம் க₃த:) தன்மேலே x ப்₃ரஹ்மாஸ்த்ரத தைத் தொடுத்துக்கொண்டு நிற்கிறவர் திருவடிகளிலே வந்து விழுந்தாயிற்று. y அதாவது— y₂ A "அரிசினத்தால் ஈன்றதா யகற்றிடினும் மற்றவள்தனருள்நினைந்தே

அ—யாலே அவனைத் துறந்தமை தோற்ற அவனுடைய ஹிம்ஸையிலுண்டான ப்ரீதி வடிவிலே தோன்றும்படியாயிருந்தாள் என்றபடி. n குடநீர் வழித்துநின்ருன் - "நீ எனக்குப் பணியில்லை" என்று சொல்லிக்கொண்டிருந்தான் என்றபடி. o 1. "த்யகத:" என்று பூ₄தார்த்த₂த்துக்குத் தாத்பர்யம் (இவன் இத்யாதி₃) "இன்று அஸ்த்ரத்துக்கு ப₄யப்பட்டு விட்டோமாகில் கேடு" என்று பார்த்து முன்னே விட்டிலோமோ என்று சொன்னர்கள் என்றபடி. "இதுவும் பரிப₃லலப்₄யம்" என்றும் சொல்லுவர். p1. "ஸுரைஶ்ச" என்ற 'ச'ஶப்₃த₃ம்-ப்ராத₄ாந்யத்திலே. q மாதாபித்ரு பரித்யாகே₃ ஸுரர்ஷி பரித்யாகே₃ா வக்தவ்ய: கிம்? இத்யத்ராஹ (மாதாபிதாக்கள் இத்யாதி₃) r,s தர்ஹ்யாந்ருஶம்ஸ்ய ப்ரத₄ாநாநாம் பரித்யாகே₃ா யுஜ்யதே கிம்? இத்யத்ராஹ (ஆந்ருஶம்ஸ்யத்துக்கு இத்யாதி₃) t (காக்கை நோக்குகை) என்றது-சாடு. 2."யதி₃ நாமாஸ்ய காயஸய யத₂ந்தஸ தத₂ப₃ஹிர் ப₄வேத்! தூ₂ண்ட₃மாத₂ூய லோகோ$\mathcal{S}$யம ஶுந: காகாமஶ்ச வாரயேத ||" என்றத்தைக் கண்டுகொள்வது. u,v1. "ஸம்" - "பரி" என்ற உபஸர்க்க₃ தாத்பர்யம் (லோகங்கள் இத்யாதி₃) w இப்படி செய்வானேன்? என்ன (ஒருகாலல்லா இத்யாதி₃) x,y அஸ்த்ரத்தைத் தொடுத்துக்கொண்டு நிற்கிறவன் திருவடிகளிலே விழுவானென்? என்ன (அதாவது இத்யாதி₃) y₂ (அரிசினத்தால் இத்யாதி₃) பெருமாள்திருமொழி; அரிசினத்தால் - மஹாகோபத்தால்,

ஜி—(வாத்ஸல்யம் இத்யாதி₃) m'பரி' என்கிற உபஸர்க்க₃ார்த்த₂ம் (அவள் மையெழுதி இத்யாதி₃) n குடநீர்வழித்து - ஸஜலக₄டப்ரஹாரம்பண்ணி. o 1. "தயக்த:" என்ற பூ₄தார்த்த₂த்துக்கு ப₄ாவம் (இவன் இத்யாதி₃) p1. "ஸுரைஶ்ச" என்ற சஶப்₃த₃ம்-ப்ராத₄ாந்யத்திலே. q மாதாபித்ரு பரித்யாக₃த்திலே ஸுரமஹர்ஷி பரித்யாக₃ம் சொல்லவேணுமோ? என்ன (மாதாபிதாக்கள் இத்யாதி₃) r.s ஆந்ருஶம்ஸ்ய ப்ரத₄ாநராலுல் விடுவானென்? என்ன (ஆந்ருஶம்ஸ்யத்துக்கு இத்யாதி₃) t(காக்கை நோக்குகை)என்றது-சாடு. காகத்தை ரக்ஷிக்கை என்று ஸ்வப₄ாவார்த்த₂ம்.காக்கை கொத்தாமல் ரக்ஷிக்கையென்று த்₄வநி. இங்கே 2. "யதி₃ நாமாஸ்ய காயஸ்ய யத₃ந்தஸ்தத்₃ ப₃ஹிர் ப₄வேத்! த₃ண்ட₃முத்₃யம்ய லோகோ$\mathcal{S}$யம் ஶுந: காகாம்ஶ்ச வாரயேத் ||" என்றது அநுஸந்தே₄யம். u,v 1. "ஸம, பரி" என்ற உபஸர்க்க₃ தாத்பர்யம் (லோகங்களில் இத்யாதி₃) wஅப்படி செய்வானென்? என்ன (ஒருகாலல்லா இத்யாதி₃) x,yஅப்படி நிற்கிறவர் திருவடிகளிலே வீழ்கைக்கு ஹேது ஏது? என்ன (அதாவது இத்யாதி₃) y₂ (அரிசினத்தால் இத்யாதி₃) பெருமாள்திருமொழி. (A தருதுயரம் இத்யாதி₃) அரிசினத்தால் - அரிந்துபோகடவேண்டும்

A பெரு-திரு 5-1.

ஈ—அழுங்குழவி" என்கிறபடியே, அவன் திருவடிகளையொழியப் புகலில்லாமை. z இப்படி எல்லா அவஸ்தைகளிலும் விஶ்வஸநீயன் ஸர்வேஶ்வரனே. a எங்கே கண்டோம்? என்னில்,— (ஞாலம் படைத்தவனை) தனக்கு, தானுமின்றிக்கே பிறருமின்றிக்கே அசிதவிஶேஷமாய்க் கிடக்கிற தஶையிலே, புருஷார்த்தோபயோகியான ஶரீரத்தை உண்டாக்கினவனை. அது ஆருக்கு ப்ரியமாக? என்னில்,— (திருமார்பனை) அவளுக்கு ப்ரியமாக; b1. "यस्या वीक्ष्य मुखं तदिङ्गितपराधीनः" (யஸ்யா வீக்ஷ்ய முகம் ததிங்கிதபராதீநः) என்னக்கடவதிறே. (உம்பர் இத்யாதி) உபரிதநலோகங்களில் எத்தனையேனும் அதிஶயிதஜ்ஞாநர்க்கும் அறியவொண்ணாதவனை. (கும்பிநரகர்கள்) மஹாபாபபலமாகக் கும்பீபாகமான நரகத்திலே கிடந்தும் அங்கே cதிருநாமத்தைச் சொல்லுவர்களாகில். (அவர்கண்டீர்) ஏதேனும் துர்க்கதரே யாகிலும், அவ்விருப்பிலே நமக்கு ப்ராப்யரென்கை. (எம் பல் பிறப்பிடைதோறு எம் d தொழுகுலம் தாங்களே) நம்முடைய பலவகைப்பட்ட ஜந்மங்களில் அவகாஶங்கள்தோறும் திருநாமத்தைச் சொன்னவர்களேயன்று எனக்கு உத்தேஶ்யர்; அவர்கள் குலங்களாக எங்கள் குலத்துக்கு ஆசார்ய ஸந்தாநம். அந்த துःக்காநுபவம் பண்ணுநிற்க, திருநாமத்தைச் சொல்லக்கூடுமோ? என்னில்,—க்லேஶாதிஶயத்தாலே, 'அம்மே! அப்பா!' என்னக்கூடாதோ? என்று காணும் e இவர்க்கு நினைவு. 8.

---

அ—அகற்றிடினும் - கைவிட்டாலும். z ப்ரக்ருதத்திலே உபஸம்ஹரிக்கிறார் (இப்படி இத்யாதி) a தான் தனக்கு உதவாதபோதும் உதவுமென்றத்தைப் பதத்தின்மேல் ஏறிட்டுக் காட்டுகிறார் (எங்கே இத்யாதி) b உக்தார்த்தத்துக்கு ப்ரமாணம் (யஸ்யா இத்யாதி) e (இவர்க்கு நினைவு) என்கையாலே-வஸ்துத: அந்த நரகாநுபவஸமயத்தில் ஏத்தக்கூடாதென்று கருத்து. d தொழுகுலந்தாங்கள்-தொழப்படும் குலத்தை உடையவர்கள் என்றபடி. யத்வா, தொழுகுலந்தாங்கள்-தொழப்படும் குலங்கள் என்றபடி. "இப்பாட்டு-ப்ராப்யபரம். இதினுடைய விவரணம் நெடுமாற்கடிமை" என்று உரை. 8.

---

ஜீ— படியான கோபத்தையுடையளாய்; ஈன்றதாய் அகற்றிடினும் - பெற்றதாய் கைவிட்டாலும்; மற்றவள்தன் அருள்நினைந்தேயழும் குழவியதுபோன்று - அந்தத் தாயினுடைய அருளையே அபேக்ஷித்தே அழுகிற சிறு ப்ரஜைபோலே இத்யர்த்த:. z ப்ரக்ருதத்திலே உபஸம்ஹரிக்கிறார் (இப்படி இத்யாதி) b உக்தார்த்தத்துக்கு ப்ரமாணம் (யஸ்யா: இத்யாதி) ஸ்ரீஸ்துதௌ, 1. 'ஸ்வஸ்தி ஸ்ரீர்திஶதாதஶேஷஜகதாம் ஸர்க்கோபஸர்க்கஸ்திதீ: ஸ்வர்க்கம் துர்க்கதிமாபவர்க்கிகபதம் ஸர்வஞ்ச குர்வன் ஹரி: । யஸ்யா வீக்ஷ்ய முகம் ததிங்கிதபராதீநோ விதத்தேऽகிலம் க்ரீடேயம் கலு நாந்யதாஸ்ய ரஸதா ஸ்யாதைகரஸ்யாத்தயா ।।" c ஏத்துகை-திருநாமம் சொல்லுகை. e (இவர்க்கு நினைவு) என்கையாலே - மஹாதுःக்காநுபவஸமயத்தில் திருநாமம் சொல்லக்கூடாதென்று கருத்து. d எம்தொழுகுலம் தாங்கள்-எங்களுக்குத் தொழப்படும் குலத்தை யுடையவர்கள் என்றபடி. யத்வா, தொழுகுலம்தாங்கள் - முழுச்சொல்லு, தொழுகுலங்கள் என்றபடி. க்ரமேண அந்வய:. 8.

---

ப்ர— (திருமார்பனை) b 1. श्रीस्तुतौ—"स्वस्ति श्रीर्दिशतादशेषजगतां सर्गोपसर्गस्थितीः स्वर्गं दुर्गतिमापवर्गिकपदं सर्वं च कुर्वन्हरिः। यस्या वीक्ष्य मुखं तदिङ्गितपराधीनो विधत्तेऽखिलं क्रीडेयं खलु नान्यथास्य रसदा स्यादैकरस्यात्तया॥"

9. குலந்தாங்கு சாதிகள் நாலிலும் கீழிழிந்(து) எத்தனை
நலந்தா னிலாத சண்டாளசண் டாளர்க ளாகிலும்
வலந்தாங்கு சக்கரத் தண்ணல் மணிவண்ணற் காளென்(று)உள்
கலந்தா ரடியார் தம்அடி யார்எம் அடிகளே.

---

ஆ— 9. வ்யா:— (குலம்) வலந்தாங்கு சக்கரத்தண்ணல் மணிவண்ணற்கு அடிமை செய்யும் இதுவே ப்ரயோஜநமாக ஆஶ்ரயிப்பார், ஜாத்யாசாராதி₂களால் எத்தனையேனும் தண்ணியரேயாகிலும் அவரடியார் நமக்கு ஸ்வாமிகள் என்கிருர். 9.

---

**ஒ— அவ:— ஒன்பதாம் பாட்டில் — கையும் திருவாழியுமான அழகைக்கண்டு அடிமைபுக்கவர்களுடைய அடியார் எனக்கு ஸ்வாமிகள் என்கிருர்.**

வ்யா:— (குலந்தாங்கு என்று தொடங்கி) **ஸந்தாநங்களை த₄ரிக்கக்கடவதான ப்₃ராஹ்மணாதி₃ஜாதிகள் நாலிலும் கீழ்ப்பட்டு ஒரு நீர்மையுமின்றிக்கே ப்₃ராஹ்மணர்க்குச் சண்டா₃ளர் நிக்ருஷ்டரானாற்போலே சண்டா₃ளர்க்குங்கூட நிக்ருஷ்டராளுராகிலும்.** (வலந்தாங்கு என்று தொடங்கி) ஶ்ரமஹரமான **திருநிறத்தையுடையனாய், அதுக்குமேலே வலவருகே த₄ரியாநின்றுள்ள திருவாழியையுடையனாய், அவ்வழகாலே எல்லாரையும் அடிமைகொண்டவனுக்கு அடிமையே ப்ரயோஜநம் என்றிருக்குமவர்களுக்கு அஸாத₄ாரணரான அடியார் எனக்கு ஸ்வாமிகள்,** **9.**

---

ப— 9. அவ:— அநந்தரம், ஆஶ்ரிதருடைய ஜந்மாத்₃யபகர்ஷ தோ₃ஷநிவர்த்தகமான பரமபாவநத்தையுடையவனை அநந்யப்ரயோஜநராய் அநுப₄விப்பார் த்ரிபுருஷம் எனக்கு ஶேஷிகள் என்கிருர்.

**குலம்** — (அநுலோம ப்ரதிலோம விவாஹத்தாலே) ஸகல குலங்களுக்கும், **தாங்கு** — ஆத₄ாரபூ₄தரான, **சாதிகள்** — (ப்₃ராஹ்மணாதி₃) ஜாதிகள், **நாலிலும்**— நாலிலும், **கீழ் இழிந்து** — கீழே போந்து, **எத்தனை நலந்தான் இலாத**—மிகவும் ('நாம் அபக்ருஷ்டஜந்மாக்கள்' என்கிற) அறிவுமின்றியேயிருக்கும், **சண்டாளர்**— சண்டா₃ளர் (ப்₃ராஹ்மணஸ்தா₂நத்திலேயாம்படி), **சண்டாளர்கள் ஆகிலும்**— (அவர்களுக்கும் அநாத₃ரணீயர்களான) சண்டா₃ளர்களாகிலும், **வலம் தாங்கு**— வலத்திலே ஏந்தப்பட்டு, **சக்கரத்து**—[1. **"चरणं पवित्रम्" (சரணம் பவித்ரம்)** என்கிறபடியே] பவித்ரபூ₄தனான ஆழ்வானையுடைய, **அண்ணல்**—ஸ்வாமியாய், **மணி**— (ஸ்வஸம்ப₃ந்த₄த்தாலே எல்லாரையும் பரிஶுத்₃த₄ராக்கும்) ரத்நம்போலே பவித்ரமாய், **வண்ணற்கு**—(உஜ்ஜ்வலமான) வடிவையுடையவனுக்கு, **ஆள்**—(நாம்) ஶேஷபூ₄தர், **என்று**—என்று நினைத்து, **உள் கலந்தார்**—அநந்யப்ரயோஜநராய்க் கலந்தவர்களுக்கு, **அடியார் தம்**—அடியார்க்கு, **அடியார்**—அடியாரானவர்கள், **எம்** எங்களுக்கு, **அடிகள்**—ஸ்வாமிகள். 9.

இ— அவ:— ஒன்பதாம் பாட்டில் — கையும் திருவாழியுமான சேர்த்தியழகிலே வித்₃த₄ராயிருப்பாருடைய அடியார் எனக்கு ஸ்வாமிகள் என்கிறார்.

வ்யா:— **(குலந்தாங்கு இத்யாதி₃)** க்ரமவிவாஹத்தாலும் அநுலோமப்ரதிலோமவிவாஹத்தாலுமுள்ள குலங்களை த₄ரிப்பதான ப்₃ராஹ்மணாதி₃யான நாலு ஜந்மத்திலும் கீழே கீழே போய். **(எத்தனை நலந்தானிலாத)** அந்தச் சண்டா₃ள ஜந்மத்துக்கு அடைத்த ஜ்ஞாநமும் வருத்தமுமின்றிக்கேயிருக்கை. **(சண்டாள இத்யாதி₃)** நாம் சண்டா₃ளரைக்கண்டால் விலங்குமாபோலே அவர்கள் தாங்கள் விலங்குமவர்களாகிலும் இவர்களை ஆத₃ரிக்கைக்கு ஹேது சொல்லுகிறது— **(வலந்தாங்கு இத்யாதி₃)** வலவருகே த₄ரிக்கப்பட்ட திருவாழியையுடையனாய், அதுக்கு ஆஶ்ரயமான நீலமணிபோலே ஶ்யாமஹரமான திருநிறத்தையுடைய ஸர்வாதி₄கனுக்கு. **(ஆளென்று)** ஸ்வரூபஜ்ஞாநம் முன்னாக அடிமைசெய்கையே ப்ரயோஜநமென்று இருக்குமவர்களுடைய ஸம்ப₃ந்தி₄ஸம்ப₃ந்தி₄கள் எனக்கு நாத₂ர் என்கிறார். 9.

ஈ— அவ:— ஒன்பதாம் பாட்டு. a கையும் திருவாழியுமான அழகிலே தோற்றிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு ஶேஷபூ₄தரானவர்கள் எனக்கு ஸ்வாமிகள்.

வ்யா:—(குலம் இத்யாதி₃) b **க்ரமவிவாஹத்தாலும்,** $b_2$**அநுலோம** $b_3$ **ப்ரதிலோம விவாஹத்தாலுமுள்ள குலங்களை c த₄ரிப்பதான d ப்₃ராஹ்மணாதி₃யான நாலு ஜந்மத்தி**

அ— ஒன்பதாம் பாட்டு. (குலந்தாங்கு இத்யாதி₃) a "வலந்தாங்கு சக்கரத்தண்ணல் மணிவண்ணற்காளென்று உள்கலந்தாரடியார் தம்மடியார் எம்மடிகளே" என்றத்தைக் கடாக்ஷித்து அவதாரிகை (கையும் திருவாழியுமான இத்யாதி₃) b (க்ரமவிவாஹத்தாலும் அநுலோமப்ரதிலோம விவாஹத்தாலும் இதி) ப்₃ராஹ்மணஸ்ய ப்₃ராஹ்மணீவிவாஹ: க்ஷத்ரியஸ்ய க்ஷத்ரியாவிவாஹ: வைஶ்யஸ்ய வைஶ்யாவிவாஹ: ஶூத்₃ரஸ்ய ஶூத்₃ராவிவாஹஶ்ச க்ரமவிவாஹ:; உத்க்ருஷ்டவர்ணஸ்ய அபக்ருஷ்டவர்ணாவிவாஹ: அநுலோம:; அபக்ருஷ்டவர்ணஸ்ய உத்க்ருஷ்டவர்ணாவிவாஹ: ப்ரதிலோம:; தத்ப்ரயுக்த விப₄ாகே₃ந ச இத்யர்த்த₂:. இது ருஶ்யஶ்ருங்க₃ன்பக்கலிலும் யயாதிபக்கலிலும் காணலாம். c தாங்கு - த₄ரிக்கிற. d சாதிகள் - ப்₃ராஹ்மணாதி₃வர்ணங்கள். அஹங்கார ஜநநத்₃வாரா விநாஶாவஹத்வாத் வர்ணசதுஷ்டயஞ்ச நிம்நஸ்த₂லத்வேநோக்தம்; e தத்ர ச அஹங்காராதிஶயாத் நிக்ருஷ்டவ்ருத்த்யா ச அதிநிஹீநத்வேந வர்த்தநம் அதே₄ாऽதே₄ாக₃மநம். f,g "நலந்தான் - எத்தனையும் - இலாத" இதி யோஜநாம் ஹ்ருதி₃ நித₄ாயாஹ

ஜீ ஒன்பதாம் பாட்டு. (குலந்தாங்கு இத்யாதி₃) a "வலந்தாங்கு சக்கரத்தண்ணல்" இத்யாதி₃யைக் கடாக்ஷித்து அவதாரிகை (கையும் இத்யாதி₃) b க்ரமவிவாஹமாவது-ப்₃ராஹ்மக்ஷத்ரவைஶ்ய ஶூத்₃ரர்கள் ஸ்வஸ்வஜாதியிலே பண்ணும் விவாஹம்; $b_2$ அநுலோமவிவாஹமாவது-ப்₃ராஹ்மணன் உத்தரவர்ணத்ரயத்திலும், க்ஷத்ரியன் உத்தரவர்ணத்₃வயத்திலும், வைஶ்யன் ஶூத்₃ரவர்ணத்திலும் பண்ணும் விவாஹம். $b_3$ ப்ரதிலோமவிவாஹமாவது-ஶூத்₃ரன் பூர்வவர்ணத்ரயத்திலும், வைஶ்யன் பூர்வவர்ணத்₃வயத்திலும், க்ஷத்ரியன் பூர்வவர்ணத்திலும் பண்ணும் விவாஹம். இது-ருஶ்யஶ்ருங்க₃ன்பக்கலிலும் யயாதிபக்கலிலும் காணலாம். c தாங்கு-த₄ரித்திருக்கிற. d சாதிகள்-ப்₃ராஹ்மணாதி₃வர்ணங்கள். f,g "நலந்தான்-எத்தனையும்-இலாத" என்று அந்வயித்து அர்த்த₂ம்

**ஈ—லும் e கீழே கீழே போய். f** (எத்தனே இத்யாதி$_3$) **g அந்தச் சண்டா$_3$ள ஜந்மத்துக்கு அடைத்த ஜ்ஞாநவ்ருத்தமின்றிக்கேயிருப்பாருமாய், நாம் 'சண்டா$_3$ளர்' என்றால் நோக்காதே போமாபோலே, அவர்கள் தாங்கள் விலங்குமவர்களாகிலும். இவர்கள் உத்$_3$தே$_3$ஶ்யராகைக்கு என்ன h வலக்குறியுண்டு? என்ன; i வ்ருத்தவான்களன்றோ இவர்கள் என்று j கைமேலே காட்டிக்கொடுக்கிறார் மேல்;** (வலந்தாங்கு சக்கரம் இத்யாதி$_3$)**kA"வடிவாய் நின்வலமார்பினில் வாழ்கின்ற மங்கையும் பல்லாண்டு" என்று, A"வடிவார் சோதிவலத்துறையும் சுடராழியும் பல்லாண்டு" என்னுமாபோலே; இவரும் கீழ்ப்பாட்டிலே "திருமார்பனை" என்றார்; இங்கே "வலந்தாங்கு சக்கரம்" என்றார். l வலவருகே த$_4$ரிக்கப்பட்ட திருவாழியையுடையனாய், அதுக்கு ஆஶ்ரயமான நீலமணி போலே ஶ்ரமஹரமான வடிவழகையுடைய ஸர்வாதி$_4$கனுக்கு.** (ஆளென்று) **m'ஸ்வரூப ஜ்ஞாநம் முன்பாக அடிமை செய்கையே ப்ரயோஜநம்' என்றிருக்குமவர்களுடைய**

---

அ—(அந்தச் சண்டா$_3$ள ஜன்மத்துக்கு இதி) ஏவம்-கர்மசண்டா$_3$லபரதயா நிர்வாஹ: க்ருத:. "சாதிகள் நாலிலும் கீழிழிந்து" இதி மூலக்$_3$ரந்த$_2$ஸ்ய (நாலுஜந்மத்திலும் கீழே கீழே போய்) இதி வ்யாக்$_2$யாக்$_3$ரந்த$_2$ஸ்ய ச-வர்ணசதுஷ்டயஸ்யாப்யதே$_4$ாதே$_4$ா க$_3$த்வா இத்யர்த்த$_2$ம் க்ருத்வா, ஜாத்யா நிஹீநசண்டா$_3$லபரதயா வா யோஜ்யம். f சண்டாள சண்டாளர் - சண்டா$_3$ளர்க்கும் சண்டா$_3$ளர்; "எத்தனை நலந்தானிலாத" என்றது த்$_3$விதீய சண்டா$_3$ளர்க்கு விஶேஷணம். h (வலக்குறி இதி) சாடு:; ப$_3$லவச்சிஹ்நம் இதி ச த$_3$க்ஷிணப$_4$ாக$_3$லக்ஷணம் இதி ச. i (வ்ருத்தவான்கள் இதி) சாடு:. வ்ருத்தம்-ஆசார இதி த்$_4$வநி:; வ்ருத்தம் ஸுத$_3$ர்ஶநம் ரக்ஷகத்வேந ஏஷாமஸ்தீதி வ்ருத்தவந்த இத்யர்த்த$_2$:. சக்ராயுத$_4$ஸ்ய த$_3$ாஸா இதி ஹி நிர்த்தி$_3$ஶ்யந்தே. j (கைமேலே) என்றதுவும் - சாடு, அவனுடைய திருக்கைமேலே. ஹஸ்தக$_3$தமாக என்றுமாம். k(வடிவாய் இத்யாதி$_3$) திருப்பல்லாண்டு. l "வலந்தாங்கு சக்கரத்து மணிவண்ணன்-அண்ணற்கு" என்று அந்வயித்து அருளிச்செய்கிறார் (வலவருகே இத்யாதி$_3$) m "ஆள்" என்றதுக்குத் தாத்பர்யம் (ஸ்வரூபஜ்ஞாநம் முன்பாக என்றது) உள்கலக்கை - ஒரு நீராகக் கலக்கையாய், அநந்யப்ரயோஜநர் என்றபடி. உள்கலந்தாரான அடியார் என்றபடி. அடியார் - அடிமை

---

ஜீ—(அந்தச் சண்டா$_3$ள ஜந்மத்துக்கு இத்யாதி$_3$) f எத்தனை-அல்பமும். சண்டாள சண்டாளர்-சண்டா$_3$ளர்க்கும் சண்டா$_3$ளர் என்றபடி. எத்தனை நலந்தானிலாத என்றது - த்$_3$விதீய சண்டா$_3$ளர்க்கு விஶேஷணம். h 'வலக்குறி' இதி-சாடு. ப$_3$லவச்சிஹ்நமும், வல பார்ஶ்வத்தில் லக்ஷணமும். வலக்குறி - வல பார்ஶ்வத்தில் திருவாழியென்று ஸ்வப$_4$ாவார்த்த$_2$ம்; சாடுவுக்கு, குறியென்று-மறு. i வ்ருத்தம்-ஆசார இதி த்$_4$வநி:; வர்த்துலம்-ஸுத$_3$ர்ஶநம் இதி ஸ்வப$_4$ாவார்த்த$_2$:; வ்ருத்தவான்கள்-ஆசாரவான்கள்; திருவாழியை ரக்ஷகமாகவுடையவர்கள் என்றுமாம். j கைமேலே என்றதும் சாடு: அவனுடைய திருக்கைமேலே; ஹஸ்தக$_3$தமாக என்றுமாம். k (வடிவாய் இத்யாதி$_3$) திருப்பல்லாண்டு. உனக்கு நிறமாய் உன்னுடைய வலமார்பிலே பே$_4$ாக$_3$ரூபமாக நித்யவாஸம் பண்ணுகிற பிராட்டியும் பல்லாண்டு; (வடிவார் இத்யாதி$_3$) ஶ்யாமளமான திருமேனியிலே வ்யாப்தமான தேஜஸ்ஸையுடையனாய் வலப்பக்கத்திலே நித்யவாஸம் பண்ணுமவனாய்ப் பிறர்க்கு அநபி$_4$ப$_4$வநீயனாயிருக்கிற ஆழ்வானோட்டைச் சேர்த்தியும் நித்யமாய்ச்செல்லவேணும் என்றபடி. l "வலந்தாங்கு சக்கரத்து - மணிவண்ணன் - அண்ணற்கு" என்று அந்வயித்து அர்த்த$_2$ம் (வலவருகே இத்யாதி$_3$) m ஆள்-என்றதுக்கு ப$_4$ாவம் (ஸ்வரூபஜ்ஞாநம் இத்யாதி$_3$) உள்கலக்கை-ஒரு நீராகக் கலக்கையாய், அநந்யப்ரயோஜநராய்க் கலக்கை என்றபடி; உள்கலந்தாரான அடியார் என்றபடி. அடியார் என்று வ்ருத்திபர்யந்தம் விவக்ஷிதம். n அத்யந்தநிஹீநராானாலும்

---

A திருப்பல்-2.

